கழக வெளியீடு—௯௪௧

# பாலமிழ்தம்

## (THE MILK NECTAR)



பாற்பண்ணை பயிர்த்தொழில்
துறைகளில் வல்லுநரான
திரு. எஸ். எஸ். தேவர் அவர்கள்
எழுதியது.



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை.

விலை ரூ. -8-0

# முகவுரை

உலகெலாம் உண்டு மகிழும் பாலமிழ்தம் என்னும் பொருள் பற்றிப் பல்லோர்க்கும் பயன் படத் தக்க ஒரு சிறு நூல் எழுதித் தருமாறு தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தார் என்னைப் பணிக்க, அதனைத் தலைமேற் கொண்டு பாற்கலை வல்லோரால் ஆக்கப்பட்ட அரிய நூல்களின் துணைகொண்டும், பாற்பண்ணை மேற்பார்வை அலுவலாளர் இரண்டொருவர் அன்புடன் தெரிவித்த அருஞ்செய்திகளின் உதவி கொண்டும், எனது நீண்டநாள் பழக்க உணர்வு கொண்டும் இந் நூலை எழுதலானேன். இதன்கண் தாய்ப்பால், பசுப்பால், மற்ற விலங்குகளின் பால் கள், மரஞ்செடி கொடிகளின் பால்கள் ஆகியவற் றின் சிறப்பியல்புகளைப் பற்றியும்; பசு வளர்த்தல், காத்தல், பெருக்கல் ஆகிய தொழில்களைப்பற்றி யும்; பாற்பண்ணை வைத்து நடத்துதலைப் பற்றி யும்; பசுப்பாலே உணவும் மருந்து மாதலைப் பற்றியும்; இன்னும் பாலின் சார்பான பல்வேறு செய்திகளைப் பற்றியும் யான் அறிந்தவற்றைத் தொகுத்துக் கூறியுள்ளேன்.

சங்க இலக்கியங்கள், புராண நூல்கள் ஆகிய வற்றிற் காணப்பட்ட பசுவின் சிறப்பும், பசுப் பாலின் சிறப்பும் பற்றிக் கழகத்தார் பணித்த வாறு கழகத் தமிழ்ப் புலவர் இளவழகனார் என் னும் திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளை அவர்கள்

எழுதித் தந்த கட்டுரை யொன்றும் தோற்றுவா யாக நூலின் முகப்பிற் சேர்க்கப்பட்டுளது. இதனால் தமிழ் மக்கள் பண்டு தொட்டே பாலின் பயனை எங்ஙனம் துய்த்தனர் என்பதும் தமிழர் நாகரிகம் உலக நாகரிகத்துக்கே அடிப்படை யானதென்பதும் போதரும். இதற்காகப் பிள்ளை யவர்கட்கு எனது நன்றி என்றும் உரியதாகும். அடியேனது கையெழுத்துப் படிகளைப் படித்துப் பார்த்துத் திருத்தங்கள் தந்துதவிபுரிந்த என் நண்பர் தருமபுர வாதீன வித்துவான் திரு. காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை, B.A. அவர்கட்கும், நண்பர் டாக்டர், திரு. T. S. இராசகோபாலன் அவர்கட்கும், பாற்பொருள்கள் சேர்ந்த மருந்து களைப் பற்றிய குறிப்புக்களைத் தாராளமாகத் தந்துதவிய தமிழ்மருத்துவர் திரு. ம. பாலசுந்தரம் பிள்ளை யவர்கட்கும் எனது நன்றி என்றும் உரியதாகும்.

இன்னும் உணவின் ஊக்குபொருள்கள் போன்று, நரை திரை மூப்புக் கொண்ட எனக்கு இப் பாலமிழ்தம் என்னும் நூலினை எழுதுவதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுத்து, எழுத்து வேலையில் இளைக்கா வண்ணம் என்னை ஊக்கி வந்த சென்னைக் கிளைநிலையச் செயலாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றி என்றும் உரியதாகும்.

சென்னை,
8-2-43.

இங்ஙனம்,
**எஸ். எஸ். தேவர்.**

# உள்ளுறை



## பின் இணைப்பு

# பாலைப்பற்றிய பழமொழிகள்

1. பருத்திச் செடியும் பாலும் உள்ளவனுக்குப் பஞ்சம் இல்லை.
2. பாலும் பருத்தியும் பத்து நாள்.
3. பாலுள்ளவன் விருந்துக்கு அஞ்சான்.
4. பசுக் கறுப்பானாலும் பாலுங் கறுப்பாமா.
5. கறக்கிற பசுவையும் கைக்குழந்தையையும் கண்ணைகப் பார்க்க வேண்டும்.
6. ஆவும் தேவும் ஐந்தாண்டில் பலன்.
7. காராம் பசுவுக்குப் புல், நந்தவனத்துக்கு மழை.
8. பாலைப் பார்த்துப் பசுவைக் கொள்ளு.
9. பாழாய்ப் போகிறது பசுவின் வாயில்.
10. வைக்கோல் தின்கிற மாட்டுக்குப் பால் குறைவு, மதுரம் மிகுதி.
11. பாடிக் கறக்கிற மாட்டைப் பாடிக் கற, ஆடிக் கறக்கிற மாட்டை ஆடிக் கற.
12. எருமைக் கன்று அருமைக் கன்று.
13. வால் நீளம் வயது நீளம்.
14. சோளப் பயிரை மேய்ந்த மாட்டுக்குச் சொர்க்க லோகம் வேண்டுமோ.

15. மேய்த்துத் தெளியாத மாடு தேய்த்துத் தெளியும்.

16. வெக்கைக்கு வேலி மறைப்பு.

17. தொழுவின் நீரே பழுதில் உணவு.

18. உரம் ஏற்றி உழவு செய்.

19. குப்பை உயர்ந்தால் குடி உயரும்.

20. குப்பையில்லா வெள்ளாமை சப்பை.

21. எருமணமில்லாத பயிரும் நறுமணமில்லாத மலரும்.

22. உரம் உதவுவது ஊரார் உதவமாட்டார்.

23. பசு ஏறுவாலும் எருது கூழைவாலும் ஆகாது.

24. அடுத்து உரம் எடுத்துப் போடு.



காங்கேயப் பசுவும் கன்றும் பக்கம் 1.

# பாலமிழ்தம்

---

## தோற்றுவாய்

### 1. கோவலர் வாழ்க்கை :

[கோவலர் வகுப்புப் பழைமையானது ; அவர், தனிப்பட்ட நிலப்பிரிவினை யுடையர்; அவர் வாழ்க்கை கொடுமை யில்லாதது.]

பால் என்றதும், ஆவின் பால் நமது நினைவுக்கு வருகின்றது. ஆவின் பாலுக்கு உள்ள இச் சிறப்பு, நம் தமிழ் மக்களால் மிகப் பழைய காலத்தி லிருந்தே நன்கு உணரப்பட்டு வந்திருக்கின்றது. ஆனினங்களின் முதன்மையும், அவை அளிக்குந் தீம்பாலின் நலனும், ஆதலால் *ஆன் நிரைகளைக் காத்தோம்பும் முறைகளும், அவற்றின் பாலமிழ் தைப் பயன்படுத்தும் வகைகளும் விரிவாகத் தெரிந்து பயன் கொள்வதில் இவர்கள் மிகவும் சிறந்து விளங்கினர். இதற்கென்றே 'ஆயர்' என் னும் ஒரு வகுப்பினர் தமிழ்மக்களுட் பண்டு தொட்டே இருந்துவருகின்றனர். இவர்களுக் கென்று தமிழ்நாட்டில் நிலமும் தனியாகப் பிரிக் கப்பட்டது. அந் நிலப் பிரிவினையை 'முல்லை நிலம்' என்று கூறுவர். அது, குறுங் காடுகளும், பரந்த பசும்புல் வெளியும் அமைந்த நிலமாகும்.

---

* பசுக் கூட்டம்.

தமிழ்மொழியில் மிகப் பழைய நூல் தொல்காப்பியம் என்பது. நிலப் பாகுபாடும், அந் நிலத்திற்குரிய மக்கள் இன்னார் என்பதும், அவர்கள் வாழ்க்கை முறையும் அதற்கு உதவியாயிருக்கும் ஏனை உயிரினங்களின் வகையும், பிறவும் அதன் கண் விளக்கப்பட்டிருக்கின்றன. நிலப் பாகுபாட்டில், முல்லை நிலமே முதலில் வைத்து எண்ணப் பட்டிருக்கின்றது; இதுவே தொன்றுதொட்டுச் சொல்லிய முறை எனவும் மீண்டு மீண்டும் வற்புறுத்தப்பட்டிருக்கின்றது. இவ்வுண்மைகள்,

**" முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"**

என்று ஓரிடத்திலும்,

**"மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய**
**முல்லை முதலாச் சொல்லிய முறையால்"**

என்று மீண்டுமோரிடத்திலும் வருகின்ற அதன் நூற்பாக்களால் நன்கு தெளியப்படுகின்றன. இனி, இம் முல்லை நிலத்திற்குரிய ஆயரினமே முதலில் எடுத்துரைக்கப்படும் உண்மையும்,

**" ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**
**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே"**

என்று நிலமக்களைப் பற்றி வருகின்ற முதல் நூற்பாவினாலேயே தெளிவாகப் புலனாகின்றது.

இதுவன்றியும், தொல்காப்பியத்துக்குப் பின்னர் எழுந்த சிறந்த செந்தமிழிலக்கியங்களிலும் ஆயரினத்தைப் பற்றி வந்திருக்குங் குறிப்புக்கள்,

அவ் வினத்தின் அருமையை அதன் மாட்சிமை தோன்றவே விளக்குவனவா யிருக்கின்றன. சிலப்பதிகாரத்தில், ஓரிடத்தில், ஆசிரியர் இளங்கோ வடிகள், கவுந்தியடிகள் என்னுந் தூய தவமூதாட்டியின் வாய்வைத்து,

> "ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
> கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பா டில்லை"

என்று ஆயரினத்தின் வாழ்க்கை முறையையும் தொழில் முதலியவற்றையும் தெளிய விளக்குகின்றனர். அடியார்க்கு நல்லார் இதற்கு விளக்கவுரை கூறுகின்றவிடத்தில், "ஆக்களைக் காத்து - வெருவும் பிணியும் உற்றுழிக் காத்து. ஓம்பி - புலத்தலைப் புல்லார்த்தி அலைத்தலை நீரூட்டி" எனவும், "ஆப் பயன் - பால் முதலியன. அளிக்குங் கோவலர் - கன்றருத்தி மிக்கதனை யாவருக்கும் அளிக்குங் கோவலர்" எனவும் உரைக்கின்றனர்.

இதுகாறுங் கூறியவற்றிலிருந்து, பாலுக்குச் சிறந்தது ஆவின் பாலே என்பதும், அதனை 'ஆப் பயன்' என்றே நம்மனோர் பெயர் வழங்கி மகிழ்ந்திருக்கின்றனர் என்பதும், ஆக்களைப் பாதுகாத்து அதன் பயனை மக்கட்கு வழங்குவதற்கென்றே 'ஆயர்' என ஒரு வகுப்பார் தமிழ் நாட்டில் இருந்து வருகின்றனர் என்பதும், அவர் வாழ்க்கை தீங்கற்றது என்பதும், ஆக்களை அவர்கள் அச்சமும் பிணியும் வாராமல் அருமையாய்க் காப்பாற்றுவர் என்பதும், புல்லும் நீரும் ஆக்களுக்கு உணவாகும்படி அவர் அவற்றை

மேய்த்து வருவர் என்பதும், இயற்கையாக இங்ஙனம் பசுக்கள் பசும்புல் மேய்ந்து நீர்ப்புனல் பருகுதற்கு ஏற்றபடி முல்லை நிலம் என்ற ஒரு நிலப் பிரிவினையும் தமிழ்மக்களால் வகுக்கப்பட்டிருந்தது என்பதும், இதனால், ஆக்கள் தங் கன்றுகட்கு வேண்டியதன்மேலும் மடிபெருகிப் பால் சுரந்து ஏனை மன்பதைகட்கும் வழங்கிவந்தன என்பதும், ஆப் பயன் என்பது பால் முதலியன என்றுரைத்தலால் அங்ஙனம் பெருகிவழிந்த பாலிலிருந்து ஆயர்கள் தயிர் மோர் வெண்ணெய் நெய் முதலிய பொருள் பலவுங் கண்டு வழங்குங் கலையினை அறிந்திருந்தனர் என்பதும், அவற்றோடு, பயிர்க்கு எரு வழங்குதல் முதலிய ஆவின் பயன்களும் அக் கோவலர்களால் நாட்டுக்கு உண்டாயின என்பதும் பிறவும் இனிது பெறப்படும்.

## 2. சிறந்தது ஆவின் பால் :

[ஆவின் பால் பெருவழக்குடையது; ஆவின் பாலே நன்கு மதிக்கப்பட்டது. அப் பாலிலிருந்து எடுக்கப்படும் தயிர், மோர், வெண்ணெய், நெய் என்பனவே உயர்ந்தன. ஆக்களிலும் செந்நிறப் பசு, புகர்நிறப் பசுக்களின் பால் மிகச் சிறந்தது. ஆக்கள் அருள் சுரந்து பால் பொழிதலால், அவற்றின் பால் மக்களுக்கு இனிய பண்புகளை உண்டாக்குகின்றது.]

தமிழ்மக்கள் ஆவின் பாலையே ஏனை எருமை ஆடு முதலியவற்றின் பாலைவிடச் சிறந்ததென்று கருதியிருக்கின்றனர். பாலைப் பற்றிப்

போகும் இடங்களில் ஆவின் பாலையே அவர்கள் சிறந்தெடுத்துப் போவதிலிருந்து இவ்வுண்மை வெளிப்படுகின்றது.

> 1 " பூத்தின்று புகன்று சேதாப்
> புணர்முலை பொழிந்த தீம்பால்
> நீத்தறச் செல்ல வேவித்
> தட்ட இன் னமிர்தம் உண்பான் "

என்பது சிந்தாமணி.

ஆதலின், அறம் சிதைத்தலாகிய பெரிய தீவினைகள் இன்னவை என்று கூறுமிடத்தில் முதலில், ஆவின் மடியிலிருந்து பெறுகின்ற பாலைப் பெறவொட்டாதபடி கெடுக்கும் பெருங் கொடுமையே மிகப் பெரிய தீவினையாக எடுத்துக் காட்டப்படுகின்றது.

> " ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்..."

என்று புறநானூற்றில் வருதலும், "பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலை யறுத்தலும்... முதலிய பாதகங்களைச் செய்தல்" என்று திருக்குறளுரையில் வருதலும் நினைவுகூரற்பாலன. ஆன்முலையறுத்தல் என்பதற்கு ஆவின் மடியினின்று பெறுகின்ற பாலாகிய பயனைக் கெடுத்தல் என்பது பொருள்.

மேல், தீவினைகள் இன்னவை என்று கூறியதிற் போல நல்வினைகள் இன்னவை என்று கூறுமிடங்களிலும், ஆனினங்கட்குப் புல் அருத்துதலும், அவை தம் உடம்பைத் தேய்த்துக் கொள்ளுதற்

---

1. சேதா-செந்நிறப் பசு. வேவித்து அட்ட - வேவித்துச் சமைத்த.

குத் தறி நடுதலுமான அறச்செயல்கள் நம் நாட்டு மக்களால் மேற்கொள்ளப்பட்டிருந்தமை சொல்லப்படுகின்றது.

1 "யாவர்க்கு மாம்பசு விற்கொரு வாயுறை"

என்னும் திருமந்திரமும், 'ஆதீண்டு குற்றி' 'ஆவுரிஞ்சு தறி' என்னும் பழைய இலக்கண இலக்கிய நூலுரைகளும் நினைவுகூரற்பாலன.

ஆயர்கள் ஆடும் எருமையும் உடையவராயினும், ஆனினத்தின் முதன்மை கருதியே அவர்கள் 'கோவலர்' என்னும் பெயரும் உடையராயினர். இனி ஆமேய்ப்பார், ஆடு மேய்ப்பார், எருமைமேய்ப்பார் எனத் தனித் தனித் தொழிலுடையாருள்ளும் ஆமேய்ப்பாரே, 'நல்லினத் தாயர்' எனப் பாராட்டப்பெற்று வந்தனர். ஆடு மேய்ப்பார் புல்லினத் தாயர் (சிறிய இனங்களாகிய ஆடுகளையுடைய ஆயர்) எனவும், எருமை மேய்ப்பார் 'கோட்டினத் தாயர்' (பெரிய கொம்புகளுடைய எருமையினங்களின் ஆயர்) எனவும் வழங்கப்பட்டனர் (கலி. 11). காரணம், ஆவின்பால் சிறந்ததென்று அக் காலத்து நன்மக்கள் கருதினமையே யாகும்.

ஆவினாற் பெறுகின்ற பயன் முதன்மையாய் ஆவின் பாலே யாதலின் இங்ஙனம் கருதினர்; இது, அதன் பாலை 'ஆப் பயன்' என்னும் பெயரினால் முன்னோர் வழங்கிவந்திருத்தலினின்று தெரிகின்றது. இப் பெயர் வழக்குப் புறநானூற்றிலும் (386) வந்துள்ளது.

---

1. வாயுறை - வாயளவு புல்.

ஆவின் பாலே உண்பதற்கு ஏற்றதென்றும் இனியதென்றும் முன்னோர் கருதினர். அதன் தயிரையே ஆடைத்தயிர்க்குச் சிறப்பாக எடுத்தனர். அதன் மோரையே 'நறுமோர்' என்றனர். அதன் வெண்ணெயையே மென்மைக் குரியதாகக் கண்டனர். அதன் நெய்யையே நறுமணம், நிறம் முதலியவற்றிற்குந் தலைசிறந்ததாக எண்ணினர். இங்ஙனம் ஆன் பாலும் அதன் படுபொருள்களும் மதிக்கப்பட்டமை,

**1" வெண்ணெய்போன்று ஊறினியள்,**
**மேம்பால்போல் தீஞ்சொல்லள்,**
**உண்ண உருக்கிய**
**ஆன்நெய்போல் மேனியள் "**

எனவும்,

**2 " சேதா நறுநெய்யுந் தீம்பால் சுமைத்தயிரும் "**

எனவும் சிந்தாமணியில் வருகின்ற குறிப்புக் கொண்டும்,

**" சேதா நறுமோர் "**

என்று பெரும்பாணாற்றுப்படையில் வருங் குறிப்புக்கொண்டும் நன்கு துணியப்படும். தயிர் நெய் முதலியன எருமை ஆடு என்னும் பிறவற்றின் பாலிலிருந்துங் கிடைக்குமாயினும் அவை ஆனினத்தின் பயன் போலக் கருதப்படாமை, ஆண்டவன் வழிபாடு முதலியவற்றிற்கு அவற்றைக் கொள்ளாது, ஆனின் பயனாகிய பொருள்

---

1. ஊறு - தொடுதலுணர்ச்சி; என்றது, மென்மையான மழமழப்பு. மேம் பால் - மேவும் பால்; விரும்பத்தக்க பால்.

2. சுமைத் தயிர் — ஆடைத் தயிர்.

களையே 'ஆனைந்து' எனத் தெரிந்தெடுத்துக் கொண்டதிலிருந்து தெரிகின்றது.

இனி, இத்தகைய ஆவின் பாலிலும், புகர் நிறப் பசு, செந்நிறப் பசு என்பவற்றின் பால் சிறந்தது என்னுங் கருத்தையும் நம் முன்னோர் நுட்பமாகத் தெரிந்து கையாண்டிருக்கின்றனர். மேற்காட்டிய சிந்தாமணி, பெரும்பாணாற்றுப்படை மேற்கோள்களிற் 'சேதா' எனச் செந்நிறப் பசு எடுத்துக்காட்டப்படுகின்றது. பிறர்க்கு ஆக்களை நன்கொடையாக வழங்குமிடத்துக் 'கபிலை' என்னும் புகர்நிறப் பசுவை வழங்குதல் மிகப் பழைய காலத்திலிருந்தே நந் தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்டிருந்தமை,

1"**கபிலை கண்ணிய வேள்வி நிலையும்**" (**தொல். புறத்.** 35)

எனத் தொல்காப்பியத்திலும்,

"**கபிலையொடு குடநாட்டு ஓர்ஊர் ஈத்து**" (**பதிற்.** 60)

எனப் பதிற்றுப்பத்திலும் எடுத்துரைக்கப்படுகின்றது.

இத்தகைய சிறந்த ஆனினங்களைத் திரள் திரளாக வழங்குதலும் அக்காலத்தில் வழக்கிலிருந்தது. பெரும்பாலும் தவஞானம் கலைஞானம் பயில்வார்க்கே அக்காலத்து அரசர்கள் இங்ஙனம் ஆக்களை வழங்கிவந்திருக்கும் வாய்மையை (பதிற். 60; மலைபடு. 573) உற்றுநோக்கினால், ஆவின் பாலில் உடம்பு வளர்ச்சியோடு, நல்லியல்பின்

---

1. கபிலை - புகர்நிறப் பசு; காராம் பசு.

வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஏற்ற உணுக் கருக்களும் உணர்வுப் பதிவுகளும் இருக்கவேண்டு மென்பது திண்ணமாய்ப் புலனாகின்றது.

**மணிமேகலை** என்னும் தமிழ்க் காப்பிய நூலில் **ஆபுத்திரன்** வரலாறு நுவலும் பகுதியொன்று வருகின்றது. மறைவில கருவுற்ற பார்ப்பனி ஒருத்தி, குழந்தை பிறந்ததும் யாரும் அறியாத இடத்தில் தனியே விடுத்துச் சென்றாள். அதன் அழுகுரல் கேட்டு ஒரு பசு, கசிந்த உள்ளத்து டன் அருகில் வந்து அதன் தனிமைக்கு இரங்கி அன்றுமுதல் ஏழுநாட்கள் அருள் சுரந்து பாலூட் டிப் பாதுகாத்துவந்தது. இதனால், அப் பசுவி னுடைய அறிவும் மெல்லியலபும் அருளிரக்கமும் நன்கு வெளிப்படுகின்றன. உருகிச் சுரந்த நிலையிற் பொங்கிவழிந்த பாலினைப் பசு ஊட்டினமையால், அப் பாலில் இவ் வுணர்வுகள் நன்கு பதிந்து, அதன் வழியாக அக் குழந்தையின் உடம்பூடு விரவி அதனிடமும் பதிந்து, வளர்ந்து மாட்சி மைப்படலாயின.

அந்தக் குழந்தை ஓர் ஆண்குழந்தையாயிருந் தது. ஏழுநாள் சென்றபின் ஒரு வேதியன் அதனை எடுத்து வளர்த்து வந்தான். ஆபுத்திரனை அப் பையன் நல்லியல்பில் வளர்ந்து பெரியவனானான். ஒரு நாள் தம் இனத்தவர் ஆவேட்டு வேள்வி செய்யும் பொருட்டு ஓர் ஆவினை வேள்விச்சாலை யருகிற் கொண்டுவந்து கட்டியிருந்தனர். அந்தப் பசுவின் துயரத்தை அறிந்து ஆபுத்திரனது உள்ளம் மிகவும் வருந்தியது. நள்ளிருளில் அந்தப் பசுவை அப்புறப்படுத்தும் பொருட்டு, அதனை

யாருமறியாதபடி அவன் அவிழ்த்துக்கொண்டு போனான். செய்தியறிந்த வேதியர் மிகவுஞ் சினந்து கொண்டு ஆபுத்திரனைத் தொடர்ந்து போய் அவனையும் ஆவினையும் வருத்தத் தொடங்கினர். அப்போது ஆபுத்திரன் தன் வருத்தத்தினும் அந்த ஆன் வருத்தத்தைப் பெரிதாக எண்ணி, ஆக்களின் இயல்பைப் பற்றி, அந்த வேதியர்க்கு அறிவுறுத்துகின்றான். அப்பகுதி மிக்க உருக்கம் விளைப்பதாயிருக்கின்றது. அது வருமாறு :—

**"விடுநில மருங்கிற் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டுஞ் சிறந்த தன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந் தூட்டும்
இதனொடு வந்த செற்றம் என்னை ?"**

என்பது. "அரசனால் விடப்பட்ட மேய்புலத்தில் தானே உண்டாகிய புற்களை மேய்ந்து, நாம் பிறந்த நாள் தொடங்கிச் சிறப்புடைய தனது இனிய பாலை அறம் பொருந்திய உள்ளத்தோடும் அருள் மிகுந்து உண்பிக்கும் இப்பசுவினிடம் உமக்குண்டாகிய சினம் யாது?" என்பது இதன் உரை.

இதனால் ஆனினங்கள் அறம்பொருந்திய நெஞ்சோடு பாலைக் கசிந்துருகிப் பொழியுமென்றும், அதனால் அப்பாலில் அதன் அருளுணர்வு பதிவு மேம்பட்டிருக்குமென்றும், ஆதலால் ஆவின் பாலையுண்ணுவார், அன்பும் அருளும் அறிவும் அருந்தவமுமான மெல்லியல்புகளில் ஓங்கிச் சிறப்பர் என்றும் விளக்கமாகின்றது. கசிந்த உருக்கத்துக்கு ஆனின் உணர்வே சான்றோர்களாற் பெரிதெடுத்துக் கூறப்படுகின்றது. "கற்றாவின்

மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" என்னும் மணிமொழிபோல்வன கருதற்பாலன.

1 "தாவா விருப்பொடு கன்றுயாத் துழிச்செல்லும்
ஆபோற் படர்தக நாம்"

என்பது கலித்தொகை (81 : 37).

ஆபுத்திரனுக்கு முதலில் ஏழுநாள் ஒரு பசு அகமுருகிப் பால் சுரந்தூட்டிப் பாதுகாத்த நற் செயல் வீண்போகவில்லை யென்பது, வேள்விச் சாலையிற் கட்டியிருந்த பசுவின்மேல் அவன் இரக்கங்கொண்டு நடந்துகொண்டதிலிருந்து தெரிகின்றது. அல்லாமலும், வேதியரை விட்டு நீங்கிய ஆபுத்திரன் பின்பு தென்மதுரையை அடைந்து 'சிந்தா தேவி' என்னுங் கலைமகள் திருக் கோயின்முன் இருந்து மெய்யறிவிற் சிறந்து, தான் கையிற் பிச்சையேந்தி உண்ணுநிலையினும், காணார், கேளார், கால்முடப்பட்டோர், பேணுநரில்லோர், பிணிநடுக்குற்றோர் யாவரும் வருக என்று இசைத்து உடனூட்டி அருளிரக்க வாழ்க்கையி லேயே தலைப்பட்டிருந்தான். ஒருநாள் நள்ளிர விற் பலரும் பசியால் வருந்தி நிற்ப தறிந்து அவ னுள்ளம் பின்னும் மெழுகாய் உருகியது. அவ் வேளையில், அவன்றன் அறந்தரு நெஞ்சத்துக்கு மிக இரங்கிய கலைமகள், என்றும் உணவு வற்றாத 'அமுத சுரபி' என்னும் உண்கலன் ஒன்றை அவ னுக்குக் கொடுத்து உதவ, ஆபுத்திரன் அது கொண்டு பசித்துயரடைந்த எல்லா உயிர்களுக்

1. தாவா - குறையாத. யாத்துழி - கட்டியிருக்கு மிடத்துக்கு.

கும் அருள்சுரந்து ஊட்டும் அருள்வாழ்வில் திளைத்து விளங்கினான். இதனாலும், 'சிறந்த தன் தீம்பால் அறந்தரு நெஞ்சோடு அருள் சுரந்து முதலில் ஒரு பசு ஊட்டிய பேருணர்வானது, ஆபுத்திரனது வாழ்க்கையையே ஓர் ஒப்பற்ற மெய் யறிவு வாழ்க்கையாக அருள் வாழ்க்கையாக மாற் றிய அருமை நன்கு விளங்குகின்றது.

1 "ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்"

என்னும் புறநானூற்றில், பார்ப்பன மாக்களை ஆனியல் பார்ப்பன மாக்கள் எனக் குறித்திருப் பதும், அத்தகைய மென்றன்மை யுயிர்கள் பாது காத்தற்குரியன என அறிவுறுத்தி யிருப்பதும் இங்கே நினைவுகூர்தற்குரியன.

## 3. ஆகாத் தோம்பல்:

[ஆக்களுக்காக அரசனால் பரந்த மேய்புலங்கள் விடப்பட்டன. ஆயர்கள் ஆக்களை மிக மென்மை யாக வளர்த்து வந்தனர்; இயற்கையான இடங் களிற், புல்லும் நீரும் ஊட்டி நிழலில் இருத்திக் குழலிசையால் மகிழ்வித்துக் காத்து வந்தனர். ஆயரும் ஆயமகளிரும் ஆக்களிடமும் கன்றுக ளிடமும் உயிருக்குயிராக இருந்தனர்; ஆக்களும் அவர்களிடம் அவ்வாறே அன்பு பாராட்டின.]

பண்டைக் காலத்திலேயே தமிழ் நாட்டில் ஆகாத்தோம்புதல் ஒரு தனிப் பெருமை வாய்ந் திருந்தது. அப்போது, ஏராளமான மேய்புலங்

1. ஆன் இயல் - மென்மையியல்.

கள் அரசனால் ஒதுக்கி விடப்பட்டிருந்தன. நிரை மேய்ப்பவரான ஆயர் அம் முல்லை நிலங்களிலேயே தனியாகத் தாமக்கெனச் சேரிகள் அமைத்துக் கொண்டு குடியிருந்து ஆனிரைகளை மேய்த்து வந்தனர். முல்லை நிலத்துக்கு அடுத்த மலை நிலங் களிலிருந்து ஆ கவர்வோர் வந்து ஆக்களைக் கொள்வராயின், அவற்றை அவர்களிடமிருந்து மீட்டு ஆயர்களிடம் ஒப்புவிப்பதை அரசன் சிறந்த கடமையாக மேற்கொண்டிருந்தான். சீவக சிந்தா மணியில் கோவிந்தையார் இலம்பகத்தில் இச் செய்தி விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

ஆயர்கள் விடியற் காலையில் ஆக்களைப் புல் லுள்ள இடங்கட்குச் செலுத்திக்கொண்டு போய் வயிறார நறும் புல் மேயச் செய்து, வெயில் நேரங் களில் நிழலிற் படுவித்து, இனிய அருவி நீர் உண் ணச் செய்து, மாலையில் மெல்ல மெல்லத் தொழு வுக்கு ஓட்டி வருவர். தொழுவிலிருக்குங் கன்றுகள் தாயின் வரவு கண்டு அகமகிழும். பகல் நேரங் களிற் கோவலர், ஆக்களுக்கு மகிழ்ச்சியுங் கிளர்ச் சியும் உடல் வளர்ச்சியும், நலமும், பால் சுரப்பும் உண்டாவதற்கு ஏதுவாய், இடையிடையே இனிய குழலிசை ஊதி வருவர். குழலூதுதலாலேயே அவற்றை மேயச் செலுத்துவர்; திரும்ப ஒருங்கு கூட்டுவர்; துறை படிவிப்பர்; இல்லந் திருப்புவர். இத்தகைய மென்மை வாய்ந்த உயர்ந்த தன்மை யாலும் ஆற்றலாலும் ஆக்கள் கவலை சிறிது மின்றி விளங்கிவந்தன. சிலப்பதிகாரத்தில், கோவலர், குழல் ஊதுதலாலேயே ஆனிரைகளை நடத்தும் இனிமை,

1 "பல்லான் நிரையொடு படர்குவிர் நீரெனக்
காவலன் ஆனிரை நீர்த்துறை படீஇக்
கோவலர் ஊதுங் குழலின் பாணியும்"

என்று அழகாகக் கூறப்படுகின்றது.

கோவலர் ஆக்களை இங்ஙனமெல்லாம் மிக மென்மையாகக் காத்தோம்பி நடத்தும் இயல்பினைச் சேக்கிழார், சண்டேசுர நாயனார் புராணத்தில்,

2 "பதவு காலங் களின்மேய்த்தும்
பறித்தும் அளித்தும் பரிவகற்றி
இதமுண் டுறையும் நற்றண்ணீர்
ஊட்டி அச்சம் எதிர்நீக்கி
அதர்நல் லனமுன் செல்நீழல்
அமர்வித் தமுத மதுரப்பால்
உதவும் பொழுது பிழையாமல்
உடையோர் இல்லந் தொறும்உய்த்தார்.

"மண்ணிக் கரையின் வளர்புறவின்
மாடும் படுகர் மருங்கினிலும்
தண்ணித் திலநீர் மருதத்தண்
டலைசூழ் குலையின் சார்பினிலும்
எண்ணிற் பெருகு நிரைமேய்த்துச்
சமிதை யுடன்மேல் எரிகொண்டு
நண்ணிக் கங்குல் முன்புகுந்து
நன்னாள் பலவாம் அந்நாளில்.

"ஆய நிரையின் குலமெல்லாம்
அழகின் விளங்கி மிகப்பல்கி
மேய இனிய புல்லுணவும்
விரும்பு புனலும் ஆர்தலினால்

---

1. குழலின் பாணி - குழலிசை.

2. பதவு—புல்; புல் உள்ள. இதம்—தீங்கற்ற. அதர் - வழி. மண்ணி - மண்ணியாறு. மேய - விரும்பிய. ஆர்தலினால் - நிறைய உண்ணுதலால். ஏய - பொருந்திய.

***ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி***
***எய்த இரவும் நன்பகலும்***
***தூய தீம்பால் மடிபெருகிச்***
***சொரிய முலைகள் சுரந்தனவால்."***

என்று அருமையாக விரித்தருளுவர்.

1 ***" முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்***
***குறும்பொறை மருங்கின் நறும்பூ அயரப்***
***பதவுமேயல் அருந்தும் மதவுநடை நல்லான்***
***வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்றக்***
***கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும் "***

என்று சங்கத் தொகைநூலுள் ஒன்றாகிய அகநானூற்றில் வருதலும் நினைவுகூரற்குரியது.

இதனால், ஆக்கள் ஆயர்களிடம் உயிருக்குயிராய்ப் பற்று மிகுந்து உடன் உறைந்து வந்தன. இவ்வுண்மையையும் சேக்கிழார், திருமூல நாயனார் புராணத்தில் இனிதாக விளக்குகின்றனர்; சாத்தனூரில் மூலன் என்னும் நிரை மேய்ப்பவன் மேற்காட்டியவாறு மிக அன்பாக ஆக்களை மேய்த்து வந்தான். மேய்க்குமிடத்தில் ஒருநாள் அவன் இறந்து போக நேர்ந்தது. அப்போது ஆக்களெல்லாம் அவன் உடம்பைச் சூழ்ந்துகொண்டு கதறலாயின. திருக்கயிலையிலிருந்து அவ்வழியே சென்ற அருளுள்ளம் மிக்க முனிவரொருவர், ஆக்களின் துயர்க்கு மிக இரங்கித், தம் உடம்பை ஓரிடத்தில் மறைத்துவைத்துத், தம் உயிரை மூலனுடம்பிற் பாய்ச்சி மூலனாக எழுந்தார். ஆக்

1. வியன் - அகலம். குறும்பொறை - குறிய மலைப் பாங்கரில். அயர - உண்டு. மதவு - அசைந்த. செருத்தல் - மடி. பிலிற்ற - சொரிய. பயிர் - அழைக்கும். குரல - குரலையுடையனவாய்.

களின் மகிழ்ச்சி சொல்லத் தரமில்லை. அம் மகிழ்ச்சியைக் கெடுக்க மனமில்லாது, முனிவர், மூலனுடம்பிலேயே இருந்து அன்று முழுமையும் ஆக்களை அருமையாக மேய்த்துக் காத்தனர். உருக்கமான இப் பகுதி வருகின்றவிடத்தில் சேக்கிழார் வாய்மொழிகள் பின் வருமாறு:

1 அந்தணர்தஞ் சாத்தனூர்
 ஆமேய்ப்பார் குடித்தோன்றி
முந்தைமுறை நிரைமேய்ப்பான்
 மூலனெனும் பெயருடையோன்
வந்துதனி மேய்க்கின்றான்
 வினைமாள வாழ்நாளை
வெந்தொழில்வன் கூற்றுண்ண
 வீடிநிலத் திடைவீழ்ந்தான்.

மற்றவன்றன் உடம்பினை அக்
 கோக்குலங்கள் வந்தணைந்து
சுற்றிமிகக் கதறுவன
 சுழல்வனமோப் பனவாக
நற்றவயோ கிகள்காணு
 நம்பரரு ளாலேஆ
உற்றதுய ரிவைநீங்க
 ஒழிப்பனென வுணர்கின்றார்.

இவனுயிர்பெற் றெழிலன்றி
 ஆக்களிடர் நீங்காவென்று
அவனுடலில் தம்முயிரை
 அடைவிக்க அருள்புரியும்
தவமுனிவர் தம்உடம்புக்
 கரண்செய்து தாம்முயன்ற

---

1. வீடி - விட்டு. அரண் - பாதுகாப்பு; ஓரிடத்தில் வைத்துப் பாதுகாப்புச் செய்து. பவன வழி - காற்றிற் செல்லுவதோர் வித்தையின் வழியாக. நிரந்து - பரந்து. அளி - அன்பு. புறங்காத்தார் - பாதுகாத்தார்.

*பவனவழி அவனுடலில்*
*தம்உயிரைப் பாய்த்திஞர்.*
*பாய்த்தியபின் திருமூல*
*ராயெழலும், பசுக்களெலாம்*
*நாத்தழும்ப நக்கிமோந்து*
*அணைந்துகனைப் பொடுநயந்து*
*வாய்த்தெழுந்த களிப்பினுல்*
*வாலெடுத்துத் துள்ளிப்பின்*
*நீத்ததுய ரினவாகி*
*நிரந்துபோய் மேய்ந்தனவால்.*
*ஆவினிரை மகிழ்வுறக்கண்*
*டளிகூர்ந்த அருளினராய்*
*மேவியவை மேய்விடத்துப்*
*பின்சென்று மேய்ந்தவைதாம்*
*காவிரிமுன் துறைத்தண்ணீர்*
*கலந்துண்டு கரையேறப்*
*பூவிரிதண் புறவினிழல்*
*இனிதாகப் புறங்காத்தார்.*

என்பன. அருமையான இச் செழும்பாடல்களை உணர்வெழும்பத் திருப்பித் திருப்பிப் படித்துப் பார்த்தால் ஆக்களின் நேயமும், முனிவரர் கூட அவற்றின் அன்புக்கு மதித்தோம்பும் அருமையும் விளங்கத் தெளிவாகும்.

ஆக்களும் ஆக்களை வளர்க்குங் கோவலரும் இங்ஙனம் உயிருக்குயிராய் உணர்வொத்து நேயம் பாராட்டுவதொப்ப, ஆயமகளிரும் ஆக்களோடும் அவற்றின் கன்றினேடும் உயிருருகிய நேயமுடைய ராயிருப்பார். ஆக்களையேயன்றி ஆவின் கனறுகளையும் தமக்குத் தாய் என்றே ஆயமகளிர் மதித்துப் பாராட்டுவர். ஆயர் சேரியிலிருந்து ஆக்களை மலைப்பக்கங்களி லிருக்குங் கள்வர் கவர்ந்து கொண்டு போன செய்தி வருமிடத்தில், ஆயமக

ளிர் பலரும், பிரிந்து நிற்கும் கன்றுகளை அணைத்துக் கொண்டு அவற்றை நோக்கி, 'எம் அன்னைமீர்! நும் தாய்மாரை வேட்டுவர் எங்ஙனம் நோவ அலைத்து ஓட்டிக்கொண்டு போயினரோ' எனக் கூறிக் கதறிய பகுதியொன்று,

[1]"எம்அனை மார்இனி எங்ஙனம் வாழ்குவிர்?
நும்அனை மார்களை நோவ அதுக்கி
வெம்முனை வேட்டுவர் உய்த்தன ரோஎனத்
தம்மனைக் கன்றொடு தாம்புலம் புற்றார்."

வலைப்படு மானென மஞ்ஞையெ னத்தம்
முலைப்படு முத்தொடு மொய்குழல் வேய்ந்த
தலைப்படு தண்மலர் மாலைபி ணங்க
அலைத்த வயிற்றின ராய்அழு திட்டார்"

என்று சிந்தாமணியில் வருகின்றது. பசுக்களைக் கள்வர்கள் கவர்ந்துகொண்டு போனமையால், 'அத்தனைப் பசுக்களை இழந்துவிட்டோமே. இனிப் பிழைப்புக்கு என்ன வழி' என்று தமது இழப்புக் கருதி அம் மகளிர் வருந்தாமல், 'வேட்டுவர், நும் அன்னைமார்களை நோவ அதுக்கி உய்த்தனரோ' எனவும், 'எம் அன்னைமார்! இனி எங்ஙனம் வாழ்குவிர்' எனவும் ஆக்களின் வருத்தத்துக்கும், ஆக்களைப் பிரிந்து ஆற்றமாட்டாத கன்றுகளின் வருத்தத்துக்கும் இரங்கி நெஞ்சங் கரைந்தமையும், ஆனினங்களைத் தம்மோடொத்த மக்களினமாகவே அவர்கள் கருதி அவற்றின் இன்னலைத் தமக்கு வந்த இன்னலாகவே உணர்ந்து வலையிலகப்பட்ட மான் எனவும் மயில் எனவும் தியங்கித்

1. அனைமார் - அன்னைமாராகிய கன்றுகளே. அதுக்கி- அடித்து. உய்த்தனரோ - செலுத்தினரோ. பிணங்க - குலையும்படி. அலைத்த - அடித்துக்கொண்ட.

துடித்து வயிற்றில் அலைத்துக்கொண்டு புலம்பிய முதன்மையும் இங்கே நினைவுகூர்தல் வேண்டும்.

பகலில் மேயச் சென்ற பசுக்கள் அந்திமாலையில் தொழுவுக்கு வருமுன் தத்தம் தாய்மாரது வருகை நோக்கி அலமரும் கன்றுகளின் வருத்தமுந் தாளாது, ஆயமகளிர், 'நும் தாய்மார் இப்போதே வருகுவர்' என்று ஆறுதல் சொல்லி அன்பு செய்யும் அளவுக்கும் அவர்கள் நேயம் சிறந்திருந்தமை,

**1 "சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்**
**உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்**
**நடுங்குசுவல் அசைத்த கையள்...**
**இன்னே வருகுவர் தாயர் என்போள்"**

என வரும் முல்லைப் பாட்டின் குறிப்பினுல் நன்கு புலனுகும்.

ஆக்களுக்கும் கன்றுகளுக்கும் ஓர் இன்னல் உண்டாகுமிடத்து ஆயமகளிர் இவ்வளவு நெஞ்சுருகி வருந்துதல் போலவே, ஆயமகளிர்க்கு ஏதும் ஒரு வருத்தம் வருமிடத்து ஆக்களும் கன்றுகளும் தமக்கு இயற்கையாக உள்ள மென்மை யியல்பினுலும் அன்பினுலும் நேயப் பான்மையினுலும் நன்றி நினைவினுலும் அதனை முன்னுணர்ந்து தாமும் அங்ஙனம் உள்ளங் கரைந்து அலமருகின்ற அரிய நிகழ்ச்சி,

---

1. தாம்பு - கயிறு. பசலை - இளமையான சுவல். அசைத்த கையள் - தோளிற் கட்டிய கையையுடையவளாய்.

1 "மறிதெறித்து ஆடா ; வருவதொன் றுண்டு;
நான்முலை யாயம் நடுங்குபு நின்றிரங்கும்"

எனச் சிலப்பதிகாரத்தில் ஆசிரியர் இளங்கோவடிகளால் ஆனினங்களின் மாட்சி தோன்ற நன்கு விளக்கப்படுகின்றது.

இக் குறிப்புக்களெல்லாம் ஆனினங்கள் தமிழ் நாட்டில் எவ்வளவு பேரன்போடும் நேயவுணர்வோடும் போற்றிப் பாதுகாக்கப்பட்டன என்பதற்கு உரிய சான்றுகளாகும்.

## 4. ஆக்களின் தெய்வத்தன்மை :

[ஆனினங்களுக்கு வாழ்த்துக் கூறுதல், தமிழ் நாட்டில் பண்டைக்காலத்திலிருந்தே நிகழ்ந்து வருகின்றது. தேவநிலையில் வைத்துக் கூறப்படுகின்ற அறுவகை வாழ்த்துள், ஆனிரை வாழ்த்தும் ஒன்று. பசுவின் மென்மைத் தன்மையும் அருள் சுரந்தூட்டும் பெருமையுமே இதற்குக் காரணம். இதனால் இறைவன் ஆவினில் ஐந்தாடுவோன் என்பர். 'ஆனைந்து' என்னும் பொருட் கூட்டும் நாட்டில் வழங்குகின்றது. இறைவனேயன்றி, ஏனைத் தேவர் பலரும் அதனுடம்பில் உறைகின்றனர் என்று கூறுவதும் உண்டு.]

இதுமட்டுமோ, நந் நாட்டவர், ஆனினங்களைத் தம்மோடொத்த மக்களினமாகக் கருதி ஓம்பியதுமன்றி, அதற்குமேல் தெய்வ நிலையினும் வைத்து வந்தனை வழிபாடுகளுடையராய்ப் போற்றிக் காத்துவந்திருக்கின்றனர். இதனால், ஆனினங்களின் மெல்லியல்பினை நம்மனோர் எவ்வளவு தொலைவு கருத்தூன்றிப் பார்த்து மதித்து

---

1. மறி - ஆட்டுக்குட்டி. தெறித்து - துள்ளி.

நடந்து பயன் கொண்டிருக்கின்றனர் என்பது புலப்படுகின்றது. பல்லாயிரக் கணக்கான ஆண்டுகட்கு முன்னரே, நம்மவர்க்குப் பசுக்களிடத்தில் இங்ஙனம் பெருமதிப் பிருந்தமை, மிகப் பழைய நூலாகிய தொல்காப்பியத்தில்,

1 " அமரர்கண் முடியும் அறுவகை யானும் "

என்னும் நூற்பாப் பகுதியில், ஆறுவகைப் பட்ட தெய்வ வாழ்த்துக்களுள் ஒன்றாக ஆனிரை வாழ்த்தும் வைத்து வணக்கங் கூறுவதினின்றுந் தெரிகின்றது. அதன் உரையாசிரியரான நச்சினார்க்கினியர் என்னும் பெரியார், "சிறப்பு வகையால் தேவர்கண்ணே வந்து முடிதலுடையவாகிய அறுமுறை வாழ்த்தின்கண்ணும்" எனவும், "அவை, முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை வேந்தரும் உலகுமாம்" எனவும் இதனை விளங்க உரைத்தனர். சைவசமயத்தின் சமய குரவருள் ஒருவரான திருஞானசம்பந்தப் பெருமானும், அருட்சமயமாகிய தெய்வநெறி எது வென்று நிறுவு முறையில், ஆனினத்தை யுள்ளிட்ட இவ் வறுவகை வாழ்த்தினை விளங்கத் தெருட்டி,

" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே "

எனத் திருவாய்மலர்ந்தருளுதல் பெரிதும் கருத்திருத்தற்குரியது.

---

1. அமரர்கண் - தேவர் நிலையில் வைத்துப் பாராட்டப்படுகின்ற.

ஆவின்பாலில் ஐம்பூதத் தன்மைகளும் உள்ளன என்பது, பால் வான் கூறும், தயிர் காற்றின் கூறும், நெய் தீயின் கூறும், மோர் நீரின் கூறும், வெண்ணெய் மண்ணின் கூறும் உடையனவாய் அவ்வவற்றின் இயல்புகளைப் புலப்படுத்துதல் பழக்கத்தில் அறியப்படுகின்றது. இதனால், ஆக்களின் உடம்பு ஐம்பூதவியல்புகளை விளங்கச் செய்யும் ஆற்றல் வாய்ந்ததென்று தெரிந்துகொள்ளலாம். மக்களுடம்புக்கும் இல்லாததொரு தனித்த ஆற்றல் இங்ஙனம் பசுக்களின் உடம்பில் இருப்பதனால், அவை மேன்மையான பிறவியுடையன என்று பாராட்டப்படுகின்றன.

பால் பயப்பதற்கென்றே பசுக்களாகிய பிறவி தோன்றியுள்ளமை, 'ஆன் பயன்' என்னும் பெயரால் 'பால்' கூறப்படுவதிலிருந்து விளங்குகின்றது. மக்கள் அத்தகையர் அல்லர்.

**"நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்**
**பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்**
**அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்"**

என்று ஆக்களைப்பற்றி மணிமேகலையில் வந்த அடிகளும் ஆப் பிறவியின் படைப்பு இன்னதற்கென்பதை விளக்க வல்லனவாயிருக்கின்றன. இதனால் ஐம்பூதங்களாலான உடம்புக்கு, ஐம்பூத ஆற்றல்களை விளக்கும் பாலமிழ்தினைப் பயக்கும் மேன்மைப் பிறவியாய்ப், பசு விளங்குகின்றதென்பது தெளியப்படும். இத்தனை உயர்வு அதற்கு அதன் அருள் சுரந்த மெல்லியற் பண்பினாலேயே உண்டாயிற்று.

இதனாற், 'பசுக்கள் மேன்மையான பிறவியுடையன; தூய தீர்த்தங்கள் அமைந்தன;

முனிவரர் தேவர் முதலியோர் உணர்வியல்புகள் பயப்பன; இரு நிலனுய்த் தீயாகி நீருமாகி இயமானனுய் எறியுங் காற்றுமாகி அருநிலைய திங்களாய் ஞாயிருகி ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி அவ்வவற்றின் உள் நிறைந்து விளையாடும் ஆண்டவனுக்கு ஐம்பூத இயல்புகள் அமைந்த 'ஆனைந்து' என்னும் பாலும் பாலின் படுபொருள்களும் திருமுழுக்குப் பொருள்களாகின்றன; 'கோதனத்தின் ஐந்தாடியை' என்று மறை மொழியுங் கூறுவதனால், இறைவனும் பசுவின் உடம்பில் நிறைந்திருக்கின்றனன்; ஐம்பூத இயல்புகட்கு அதிகாரமுடைய பிற தேவரும் நிறைந்திருக்கின்றனர்; கோதனத்தின் வாயிலாகக் கிடைக்கும் ஆனைந்து ஆண்டவன் திருமுழுக்குக்கு ஏற்றன என்றாற்போல், இடங்களின் தூய்மைக்கும் உடம்பையும் உள்ளத்தையும் தூய்மை செய்யுந் திருநீற்றுக்கும் கோமய கோசலங்கள் ஏற்றன' என்றெல்லாம் முன்னோர் பாராட்டிப் போற்றி வருவாராயினர்.

சேக்கிழார் பெருமான் இவ்வரிய தெய்வத்தன்மைகளைத்

[1]"**தங்கும் அகில யோனிகட்கு**
**மேலாம் பெருமைத் தகைமையன;**
**பொங்கு புனித தீர்த்தங்கள்**
**எல்லாம் என்றும் பொருந்துவன;**
**துங்க அமரர் திருமுனிவர்**
**கணங்கள் சூழ்ந்து பிரியாத**
**அங்க மனைத்தும் தாமுடைய**
**அல்ல வோநல் ஆனினங்கள்."**

---

1. துங்க - மேலான. நகு - விளங்குகின்ற. தொடையும் - மாலையும். வேணி - சடை. திருமஞ்சனம் ஐந்து - திருமுழுக்குப் பொருள்களாகிய ஆனைந்து. சுரபிகள் - பசுக்கள். மூலம் என்றது, சாணம். மூர்த்தம் - வடிவம்.

"ஆய சிறப்பி னுற்பெற்ற
அன்றே மன்றுள் நடம்புரியும்
நாய னூர்க்கு வளர்மதியும்
நதியும் நகுவெண் டலேந்தொடையும்
மேய வேணித் திருமுடிமேல்
விரும்பி யாடி யருளுதற்குத்
தூய திருமஞ் சனம்ஐந்தும்
அளிக்கும் உரிமைச் சுரபிகடாம்."

"சீல முடைய கோக்குலங்கள்
சிறக்குந் தகைமைந் தேவருடன்
கால முழுதும் உலகனைத்தும்
காக்கும் முதற்கா ரணராகும்
நீல கண்டர் செய்யசடை
நிருத்தர் சாத்து நீறுதரும்
மூலம் அவதா ரஞ்செய்யும்
மூர்த்தம் என்றால் முடிவென்னே"

என்று ஒருங்கு தொகுத்து அருளிச் செய்துள்ளனர்.

பசுக்கள் நல்லினம் எனப்படுமென்பது 'நல்லினத் தாயர்' என்னுஞ் சொல்லால் முன்னுங் குறிப்பிடப்பட்டது. அவ் வாயமகளிர் மிகவுங் கற்புடையர்.

1"விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி யாயர் மகளிர்க்கு
இருமணங் கூடுதல் இயல்பன்று"

என்று கலித்தொகையில் (முல்லைக் கலி, 14) இம் மகளிரின் கற்புடைமை நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது. அத்தகைய ஆற்றல் சான்ற மகளிரால் அவ்வுணர்ச்சியுடன் பசு போற்றிக் காக்கப்படுதலின், கற்புடை மகளிரது ஆற்றல் பசுவின் உடம்பு

2. உடுக்கை - சூழ்தலையுடைய.

முழுமையும் நிறைந்தே யிருக்கும்; அது மிக்க தொரு தெய்வத்தன்மை யன்றோ! இதனால், பசு வின் இதயம் நல்ல உணர்ச்சிகளுக்குக் கொள்கலம். இவ் வியைபு தோன்ற அதன் இதயத்தில் கலை மகள் இருக்கின்றனள் என்றுங் கூறுப. விளை நிலங்களிற் பசுக்கள் மூச்சு விடுவதும், அவற்றின் உடம்பு அந் நிலத்திற் படிவதுங் கூட விளைச் சலுக்கு நீருஞ் சாணமும் போல நல்லவை என்பர்.

பசு, இங்ஙனம் மென்றன்மை மிக்கு உயர்ந்த பிறவியாய்த் தேவத் தன்மையுடையதாய்ச் சிறந் திருப்பதென்று தெளியப்பட்டதற்கேற்ப, அத னியலபு வாய்ந்த தேவவுலகமும் 'ஆனிலை யுலகம்' என்று மிகவும் உயர்ந்த நிலைக்கண் வைத்துப் பாராட்டப்படுவதாயிற்று.

[1]"விளங்கும் நம் உலகின் மேலாம்
வைகுந்தம்; அதன்மேற் கந்தன்
வளங்கெழும் உலகம்; வெற்பின்
மாதுலகு; அதனின் மேலாம்
களங்கவி யணைய கண்டன்
உலகு ; அதன் மேலாம் பாங்கர்
உளங்கவர் வனப்பின் மேவுங்
கோவினது உலகம் ஆமே"

என்று சிவதருமோத்திரத்திலுள்ள பாடல், மக்கள் வாழும் மண்ணுலகுக்கும், அதன் மேல் முறையே அடுத்தடுத்து உள்ளனவான வைகுந் தம், கந்தன் உலகு, உமையுலகு, உருத்திரன் உலகு என்பவைகட்கும் மேலான இடத்தில் கோவினது உலகு என்னும் ஆன் உலகு உள்ள தென்று கூறுகின்றது. புறநானூறு என்னும்

1. வெற்பின் மாது - உமையம்மை.

பழைய தமிழிலக்கிய நூலும் இந்த ஆனிலையுலகத்தை மேல் நிலையிலேயே வைத்துப் பாராட்டும் முதன்மையும் இங்கு நினைவுகூர்தல் வேண்டும்.

> 1 "கீழது, முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டின்
> நீர்நிலை நிவப்பின் கீழும், மேலது
> ஆனிலை யுலகத் தானும்"

என்பது அது. இதன்கண், 'ஆனிலை யுலகம் மேலது' என்று வந்தமை காண்க. இச் செய்யுள் பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் என்னும் சிவநேய மிக்க பெரும் புலவர் அவன் காலத்திலேயே பாடியது. அப் பாண்டியன் காலமோ, கடலுள் மறைந்து போன குமரியாற்றிற்குந் தெற்கே குமரிநாடு விளங்கியிருந்த காலம். இங்ஙனம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகட்கு முற்பட்ட பழங்காலத்திலேயே ஆனிலையுலகத்தின் மதிப்பும் ஆன் மதிப்பும் இவ்வளவு தெய்வத்தன்மை மிக்கதாய்ப் பாராட்டப் பட்டு வந்திருக்கின்றன.

மேலே உருத்திரன் இருக்கும் உலகு, உமை இருக்கும் உலகு என்று சொன்னது, உலகத்தின் பொருட்டுத் தேவர் வடிவில் உருத்திரன் இருக்கும் உலகு என்று கருதப்படுகின்ற மேலுலகங்களின் பிரிவுகளாகும். தேவர்கள் வீடுபேற்றின் முனைப்பில்லாதவர்கள். அவர்களை விட உயர்ந்த ஆன்மாக்களே, முழுநாம் ஞான நினைவுடையவர்கள். ஆதலால், அவர்கள் தங்கும் உலகம், அத்

---

1. முப்புணர் - மூன்றடுக்கு. முறை - முறையில். நீர் நிலை நிவப்பின் - நீர் நிலையில் ஓங்கிய நிலத்தின்; நிவப்பு - உயர்ந்த நிலம்.

துறக்கவுலகங்களின் உச்சிக்கண்ணதாயிற்று. பசுக்கள் எனப்படும் அந்தத் தூய ஆன்மாக்களே இம் மண்ணுலகில் தமது தூய பசுத் தன்மையைப், பாலமிழ்தம் பயக்கும் வாயிலாக உண்டாக்குதற் பொருட்டு, ஒரோவொரு கால் ஆனினங்களாய்ப் பிறவியெடுக்கின்றன என்பர். ஆதலால், தேவ வடிவில் நின்ற உருத்திரன் முதலியோர் உலகுக்கும் ஆனிலையுலகம் மேலது எனப்பட்டது. இங்ஙனங் கூறுவதெல்லாம், பசுக்களின் மென்மைப் பண்பாகிய தூய்மைச் சிறப்பினையே உணர்த்தும்: இவ்வாற்றால், ஆக்களின் தெய்வத்தன்மை விளக்கமாகும்.

## 5. ஆவின் பயன் :

[ஆக்களின் படைப்புப் பிறர்க்குப் பயன்படும் நோக்கமும் உடையதாகும். வளமுள்ள இடங்களில், பசுக்கள் தங் கன்றுகட்குச் சுரப்பதன் மேலும் பாலுடையனவாயிருக்கின்றன. எல்லா உயிர்கட்கும் ஆக்களாற் பயனுண்டு.]

ஆக்களின் பயன், முதன்மையாக அவற்றின் பாலமிழ்தமேயாகும். இயற்கையில் ஒவ்வொன்றன் படைப்பிலும் தத்தம் தேவைக்கு மேற்பட்ட பயன்படு பொருள்கள் அமைக்கப்படுகின்றன. காரணம், பிறர்க்குப் பயன்படும் பொருட்டேயாகும். ஒரு தேங்காய் நெற்றை நட்டு நீரூற்றினால், அச் செயல் செய்தார்க்கு அது பல தேங்காய்களை உதவுகின்றன; தனது மரபு வளர்ச்சிக்கு மேற்பட்ட அளவில், அது, தேங்காய்களைப் பற்பல குலைகளாகப் பலகாலங் காய்கின்றது. இம் மிகுதிப் பாட்டை நோக்கினால், பிறர்க்குப் பயன்பட

வேண்டுமென்பதே படைப்பின் கருத்தாகப் புலப்படுகின்றது. இதனைப் பசுக்களிடத்தில் வைத்துப் பார்க்கும்போது மிகவும் தெளிவாக விளக்கமாகும்.

பசுக்கள் தம் கன்றுகட்காகப் பால் சுரப்பதற்கு மேலும் பாலுடையதாயிருப்பது, அவற்றை வளமாக வைத்து வரும் இடங்களில் வழக்கமாயிருக்கின்றது. மக்களினத்திலும் தாய்மார்க்குச் சில வேளைகளில், குழந்தைகள் உண்பதற்கு மேலும் முலைப்பால் பெருகி கட்டுகின்றது. அப்போது அதனை வெளிப்படுத்த வேண்டுவது இன்றியமையாததாயிருக்கின்றது. தாய்ப்பால் கிடைக்காத குழந்தைகட்கு அதனை ஊட்டுவது உதவியாகும். அப்படியே பசுக்களும் தங் கன்றுகட்கு வேண்டிய பாலுக்கு மேலும் சுரப்புடையனவாய்ப், பிறர்க்கும் பயன்படுத்தும் இயல்புடையனவாய் இருக்கின்றன.

பசுக்கள் நல்ல பசும்புற்களைத் தாமே மேய வேண்டும்; வெயிலிற் படிய வேண்டும்; தூய அருவிநீரை வேண்டுமளவு பருகவேண்டும். மர நிழலில் தங்கி இளைப்பாற வேண்டும். இயற்கையான காற்றும் வெளியும் அமைந்த பரந்த இடங்களில் இங்ஙனம் அவை மகிழ்ச்சியாய்த் திரிந்தலைந்து மேய்ந்து, இனிய குழலிசை கேட்டபடியாய்த், தம் மெல்லியல்புகட்கு ஊறில்லாத முறையில், அவ்வியல்புகள் வளர்ச்சியடையும் வகையில் விளங்கி வருமானால், அவை தக்கபடி பாற்சுரப்புடையனவாயிருக்கும். மிகப் பரந்த வெளியில் ஆன்கள் இயற்கையாய் மேய்தலை ஆசிரியர்கள், மிகப் பரந்த

வானத்தில் விண்மீன்கள் அங்கங்கும் மின்னி இயங்குவது போல நினைந்து தம் இலக்கியங்களிற் கூறுகின்றனர்.

[1]"**காய மீன் எனக் கலந்து கான் நிரை மேய**"

என்பது சிந்தாமணி.

[2]"**விசும்பின் மீன்பூத்தன்ன உருவப் பல் நிரை**"

என்பது புறநானூறு. இந்த உவமையினுல் மிகப் பரந்த இடம் பசுக்களுக்கு மேய்புலமாக இருக்க வேண்டும் என்பது பெறப்படுகின்றது. எவ்வளவு தொலைவில் இங்ஙனம் ஆனிரைகள் பரந்து மேயினும் கோவலர் ஊதுங் குழலிசை அவைகளை ஒருங்கு கூட்டிவிடும். பத்துப் பாட்டுள் ஒன்றான பெரும்பாணாற்றுப்படையில் இடையர் குடியிருப் பினைச் சூழ மிகப் பரந்த புல் வெளி மேய்ச்சல் புலமாக இருந்தமை,

[3]"**புல்லார் வியல் புலம் போகி**"

என்பதனுல் வெளிப்படுத்தப்படுதலுங் காண்க.

பசுக்களுக்குத் தீனியாக இவ்வாறு இயற்கை மேய்ச்சலை நூல்களிற் பெரிதுங் கூறப்பட்டிருக் கின்றது. ஆதலால், தூய பாலமிழ்தம் கிடைத் தற்குரிய உணவு, அவற்றிற்கு நறும் புல்லும் நறு நீருமேயாகும். வெயிலும் காற்றும் இசையும் அதற்கு உதவியாயிருக்கும். இதற்கான குறிப்புக் கள் மேலே 'ஆகாத் தோம்பல்' என்னும் பகுதி யில் வந்திருக்கும் மேற்கோள் பாட்டுக்களிற் காண

1. காயம் - ஆகாயம். மீன் - விண்மீன்.
2. உருவ - தோற்றமுடைய.
3. புல் ஆர் - புல் நிறைந்த. வியல் புலம் - அகன்ற நிலம். போகி - போய்.

லாம். இதனாற், கன்றுக்கும் மேற்பட்ட பால் பசுக்களிடம் சுரந்து பெருகியது. பசுக்களும் வருத்தமின்றிப் பாலைத் தாமே பொழிந்து வந்தன. தழை முதலிய உணவுகள் ஆக்களுக்கு அத்துணை ஏற்றன அல்லவென்று தெரிகின்றது. மழை பெய்யாமல் வறங் கூர்ந்த வற்கட காலங்களில் ஆனிரைகளின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டு வேங்கை மரத்தின் தழையைப் பூவுடன் கழித்து இடுவர் என்னுங் குறிப்பு,

1"அருவி மாறி அஞ்சுவரக் கடுகிப்
பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
பசித்த ஆயத்துப் பயன்நிரை தருமார்
பூவாட் கோவலர் பூவுடன் உதிரக்
கொய்துகட் டழித்த வேங்கை"

எனப் புறநானூற்றில் (224) வருதல் கொண்டு, தழை முதலிய பிற செயற்கை உணவுகளைவிடப் புல்லுணவாகிய இயற்கை மேய்ச்சலே பசுக்களின் மெல்லியல்பிற்கும் பாற்செழுமைக்குஞ் சிறந்தது என்பது நன்கு துணியப்படும்.

2"முதைச்சுவல் கலித்த முற்றா இளம்புல்
மூதுஆ தைவந்தாங்கு"

என்பது குறுந்தொகை.

---

1. மாறி - வறண்டு. கடுகி - வெம்மையுற்று. வறம் - கருப்பு. பயன் நிரை - பயன்படும் ஆனிரையை. தருமார் - பாதுகாத்தற் பொருட்டு. பூ வாள் - கூரிய கொடுவாளால். கட்டழித்த - தழைச் செறிவை அழித்த.

2. முதை - உலர்ந்த. சுவல் - மேட்டு நிலம். மூது ஆ - அறிவுள்ள பசு. கலித்த - தழைத்த. தைவந் தாங்கு - தழைத்தாற்போல.

1"மேய இனிய புல்லுணவும்
விரும்பு புனலும் ஆர்தலினால்
ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி
எய்த இரவும் நண்பகலும்
தூய தீம்பால் மடிபெருகிச்
சொரிய முலைகள் சுரந்தனவால்"

என்னும் சேக்கிழார் பெருமான் செழும் பாடலாலும், அதற்குப், "பசுக்கள் மேற்கூறியபடி நன்றாய் அன்புடன் பாதுகாக்கப்படின் மனமகிழ்ச்சி அடைவன; மகிழ்ச்சியடையவே பால் நிறையக் கறப்பன என்பது உயிர்வருக்க நூற் றுணிபு. சில பசுக்கள் கீதம் பாடக் கேட்டு மனமகிழ்ந்து மிக்க பால் கறக்குமென்பதும் அந் நூலோர் கண்ட உண்மைகளுள் ஒன்று. பசு மேய்க்கும் இடைமகனாக வந்த கோபாலனைக் குழல் ஊது பவனாகக் (வேணுகோபாலன்) கூறுவதும் இக் கருத்துப் பற்றியதேயாம். பசு மேய்ப்பார் குழலூதும் வழக்கமும் ஆனாய நாயனார் சரித வரலாறும் கருதுக. "கனைத்த மேதி காணாது ஆயன் கைமேற் குழலூத அனைத்துஞ் சென்று திரளும் சாரல் அண்ணா மலையாரே" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரமும் காண்க. 'ஆடிக் கறக்கும் பசுவை ஆடிக் கற; பாடிக் கறக்கிறதைப் பாடிக் கற' என்ற முதுமொழிக் கருத்தும் கருதுக" என்று சிவக் கவிமணி திரு C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் B. A. எழுதிய இனிய உரையினாலும் நன்கு விளங்குகின்றன. பசுக்கள் தங் கன்றுகட்கேயன்றி ஏனையோர்க்கும் தாயாந் தன்மையவாய்த் தாமே பால் பொழியுமாறு

1. ஆர்தலினால் - உண்ணுதலால். ஏய - பொருந்திய.

பெருஞ் சுரப்புடையனவாய் விளங்கும் உண்மையை,

"அனைத்துத் திறத்தும் ஆனினங்கள்
அணைந்த மகிழ்ச்சி அளவின்றி
மனைக்கட் கன்று பிரிந்தாலும்
மருவுஞ் சிறிய மறைக்கன்று
தனைக்கண் டருகு சார்ந்துருகித்
தாயாந் தன்மை நிலையினவாய்க்
கனைத்துச் சுரந்து முலைக்கண்கள்
கறவா மேபால் பொழிந்தனவால்."

என்னும் சண்டேசுர நாயனார் புராணச் செய்யுள் மிக அழகாகத் தெளிவிக்கின்றது. இதன்கண் வரும் மறைக்கன்று என்பது சண்டேசுர நாயனார் என்னுஞ் சிறுவர். 'பால் சோர்தல்' 'பால் சொரிதல்' 'பால் பாய்தல்' என்னும் வழக்குகள், தாமே பால் பொழியும் இயல்பைக் குறிப்பனவாகும்.

பசுக்கள் இவ்வகைப் பாதுகாப்பு முறையினால் குடங் குடமாகப் பால் சொரிவதும் உண்டு. "குடப்பாற் சில்லுறை" என்பது புறநானூறு (276). நமது நாட்டில், 'இந்தப் பசு இத்தனைக் குடம் பால் தரும்' என்று ஆயரில் ஒரு வகையார் தமது மரபின் பழக்கத்தினாலேயே மதிப்பிட வல்லராய் உள்ளனர் என்னுங் குறிப்பொன்று கலித்தொகையில் வருகின்றது. அவ்வகை ஆயரைக் 'குடஞ் சுட்டவர்' என்பர். அத்தகையோர் ஒருவகை இனத்தவராகவே இருந்தனர் என்பது,

[1]"எல்லா! இஃதொன்று கூறு; குறும்பிவர்
புல்லினத் தார்க்கும் குடஞ்சுட் டவர்க்குமெங்
கொல்லேறு கோடல் குறை"

1. எல்லா - ஏடா! குறம்பு இவர் - குறிய காட்டிடத்து ஊரில் பரந்திருக்கின்ற. கோடல் - கொள்ளுதல்.

என்று அதன்கண் (முல்லைக் கலி.எ) வருவதனால் விளக்கமாதலின், குடங் குடமாகக் கறக்கும் பாலாக்கள் நமது நாட்டில் மிகுதியாக இருந்து வந்தன என்பதும் எளிதாகப் புலனாகும். இதனால் ஆயர்க்கே பொதுவாகக் குடவர் எனப் பெயர் வழங்குதலும் உண்டு. "ஆம் பாற் குடவர் மகளோ" என்று வருஞ் சிந்தாமணிக்கு (492) நச்சினார்க்கினியர் "அழகிய பாலையுடைய இடையர் மகளோ" என்று உரை எழுதியிருத்தல் நினைவு கூர்க.

கானகத்தில் மேயும்பொழுதே மிகுதியாக மடி சுரந்து பால் வழிதலால், அவ்விடமே அதனைக் குடங்களில் நிரப்பிக் கொள்ளும்படி நேரும். அதனை ஆயர்களுடன் மேய் புலத்துக்குச் சென்ற ஆய மகளிர் மாலையிற் சுமந்து கொண்டு வீட்டுக்கு வருவர். சிலப்பதிகாரத்தில்,

> [1]"**சென்ற ஞாயிற்றுச் செல்சுட ரமயத்துக்**
> **கன்றுதே ரானின் கனைகுரல் இயம்ப**
> **மறித்தோள் நவியத்து உறிக்கா வாளரொடு**
> **செறிவளை யாய்ச்சியர் சிலர்புறஞ் சூழ**"

என்று வருகின்ற பகுதிக்கு அதன் உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் "......மாலைப் பொழு

1. செல்சுடர் - சுடர் மறைகின்ற. அமையத்து - நேரத்தில். தேர் - நாடுகின்ற. மறி - ஆட்டுக்குட்டி. நவியம் - கோடரி. மறித்தோள் நவியத்து - ஆட்டுக்குட்டியையும் கோடரியையும் சுமந்த தோளில். உறிக் காவாளர் - உறி கட்டின காவையுடைய இடையர். கா - தோளிற் சுமக்கும் காவடித் தண்டு.

திலே மடி சுரந்து கன்றைத் தேடி வராநின்ற பசுக் களினுடைய முழங்கு குரல்கள் இயம்ப...... இடையருடனே கூடப் பால் சுமந்து வரும் செறிந்த வளையையுடைய இடைச்சியரிற் சிலர்'' என்று உரைகூறுவதிலிருந்து இவ் வுண்மை வெளிப்படு கின்றது. மேய் புலமாகிய கானகத்திலேயே, ஆய்ச் சியர் சுமந்து செல்லும்படி இங்ஙனம் மிகுதியாகப் பால் பொழிந்ததனால், தொழுவுக்கு வந்தபின் தங் கன்றுகட்குப் போதுமானபடி பால் கொடுப் பதற்கு ஒரு சிறிதுங் குறைவிராது. இது "மாலைப் பொழுதிலே மடிசுரந்து கன்றைத் தேடி வராநின்ற பசுக்களினுடைய'' என மேல் அடி யார்க்குநல்லார் உரைப்பதிலிருந்தும், இதற்கு முன் "இரவும் நண்பகலும் தூய தீம்பால் மடி பெருகிச் சொரிய முலைகள் சுரந்தன'' என வந்த சேக்கிழார் திருமொழியிலிருந்துந் தெரிகின்றது.

1 "குவளை மேய்ந்த குடக்கட் சேதா
முலைபொழி தீம்பால் எழு துகள் அவிப்பக்
கன்றுநினை குரல மன்றுவழிப் படர''

என்று மணிமேகலையில் அழகு தோன்றக் கூறப் படுதலும் நினைவு கூர்க. மேய்புலத்திற் பொழிந் ததன்மேலும், பின் கன்றுகட்கு ஊட்டியதன் மேலும், அதன்பின்னர் அவ்வவ் இல்லத்தவர் தம் வழிபாடு உணவு முதலியவற்றிற்கும் ஏராள மாகப் பொழிந்து வந்த செழும் பெரும் பால் வளம், சண்டேசுர நாயனார் புராணத்தில்,

---

1. குடக்கண் - குடம் போன்ற கண்களையுடைய. துகள் - நடக்கும்போது தரையில் எழும் தூசு. மன்று வழிப் படர - தெருவெளியின் வழியே செல்ல.

" இறையோ னடிக்கீழ்-மறைய வனூர்
எடுத்துத் திருமஞ் சனமாட்டும்
நிறைபூ சனைக்குக் குடங்கள்பால்
நிரம்பச் சொரிந்து நிரைக்கு லங்கள்
குறைபா டின்றி மடிபெருகக்
குவிந்த முலைப்பால் குறைவின்றி
மறையோர் மனையின் முன்புதரும்
வளங்கள் பொலிய வைகுமால் "

என்று மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டப்படுகின்றது. இந் நிலைகளை நோக்கும்போது, கன்றுக்குமேற் பிறர்க்கும் உதவும் வகையிலேதான் வளமான பசுக்களின் பாற்சுரப்பாகிய அமைப்பு, இயற்கையில் அமைக்கப்பட்டிருக்கின்றது என்று தெரிகின்றது. திருஞானசம்பந்தப் பெருமான் திருநறையூர்த் திருப்பதிகத்தில், ஆக்கள் தங் கன்றுக்கு ஊட்டி, அப்போழுதே, அயலில் உண்பார் உண்கலங்களிலும் பால் பொழிந்து செல்லும் இயல்பினைக்,

1" கன்றுண் பயப்பால் உண்ண
முலையிற் கபாலம் அயல்பொழியச்
சென்றுண் டார்ந்து சேரும்
நறையூர்ச் சித்தீச் சரத்தாரே "

என்று நன்கு அருளிச் செய்திருக்கின்றனர்.

மக்களுலகுக்கே ஒரு பொது உணவாகிய இப் பாலமிழ்தினை, முல்லை நிலத்திலுள்ள கோவலர், தாமிருக்கும் நிலத்தைச் சூழ உள்ள மலைநிலத்தவர், வயல் நிலத்தவர், கடல் நிலத்தவராகிய அனைவர்க்கும் பொதுவராக இருந்து வழங்கி வருதலால், ஆயர்க்குப் 'பொதுவர்' என்றும் ஒரு

1. கபாலம் - உண்கலம். ஆர்ந்து - நிறைவெய்தி.

பெயருண்டு. இதனாலும், பால் பிறக்கும் பயன் படுமாறு பொதுநிலையில் இயற்கையே மிகுதி யாய்ப் பெருகும்படி அமைக்கப்பட்டிருக்கின்ற தென்று தெரிகின்றது. மிகுதியான செழிப்பைக் காட்டும்பொருட்டு 'அங்கே பால் பொழிகின் றதோ' என்பர். கன்றுக்கு ஆக்கள் ஊட்டுமே யன்றிப் பொழிதலில்லை; கன்றுக்கு ஊட்டும்; பிறக்கும் பொழியும். மேலே காட்டியிருக்கும் திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரத்தில், "கன்று உண்ண, கபாலம் அயல் பொழிய" என இவ் வியல்பு மிகத் தெளிவாகக் காட்டப்பட்டிருத் தல் அறிந்து மகிழற்பாலதாயிருக்கின்றது. இச் செழுமைப் பண்பும், அதற்கு ஏதுவான தண்மை, மென்மை என்னும் அருட்பண்புமாகிய பசுமை யியல்பு கருதியே 'பசு' எனவும், அதனாலாம் ஆக் கங் கருதி 'ஆ' எனவும் பெயர்கள் அமைத்துள் ளமை கருதற்பாலன.

## 6. ஆப் பயனும், தமிழரும்:

[தமிழ்மக்கள் ஆவையும் ஆவின் பாலையும் நன்கு நுகர்ந்து பழகியிருக்கின்றனர்; நெடுங்கால மாகப் பழகி வந்திருக்கின்றனர். பால் என்னுஞ் சொல்லினடியாக அவர்கள் தோற்றி உருவாக்கி வழங்கி வந்திருக்கின்ற ஏராளமான தமிழ்ச் சொற்களிலிருந்தே அது தெரிகின்றது.]

சிறப்பாக ஆவின் பயன் பால் என்பது பெறப் பட்டது. பாலமிழ்தையும் அதனைப் பயக்கும் ஆக் களையும் தமிழ்மக்கள் எவ்வளவு மிகுதியாக

அறிந்து பழகி நுகர்ந்து, பயன்கொள இன்புற்றிருக்கின்றனர் என்பதற்கு அவர்கள் இவற்றின் தொடர்பாக வழங்கி வருகின்ற பற்பல சொல் வழக்கு, பொருள் வழக்கு, குறியீட்டு வழக்கு முதலியவைகளால் நன்கு தெரிகின்றது.

மக்கள் தங் குழந்தைப் பருவத்திலிருந்து பால் பருகிவருகின்றனர். குழந்தைகள் பிறவா முன்னர்க் கருவிலேயும் பாலுண்டு வருகின்றன. அவை கருவிலிருக்கும்போது, தாய், பாலில் குங்குமப் பூ முதலியன இட்டுப் பருகிக், குழந்தைகளின் நிறம் முதலியனவும் விளக்கமடையும்படி செய்வர் என்ப. பிறந்தபின்பு, குழந்தைகட்குப் பால் ஒன்றே தனி உணவாகவும் இருந்து வருகின்றது. குழந்தைகளை 'பாலர்' எனப்படுகின்றனர். அவர்கள் தொடர்பான பொருள்கள் 'பாலடை' 'பாற்புட்டி' 'பாலமணி' 'பாலேமணி' 'பாலிகை' எனப் பாலின் பெயரடியாகப் பல வழங்கிவருகின்றன. பாலிகை என்பது ஒரு வகைக் காதணி.

இனிக், கல்வி பயிலுங் காலங்களில் மாணவர்களுக்குப் பால், சிறந்த ஞானம் பயக்கும் உணவாயிருக்கின்றது. நெய், அறிவை நுணுக்கமாக்கும் என்பர். குழந்தைகட்கு முலைப்பால் ஊட்டும் பொழுதே அதனுடன் அறிவு அன்பு முதலிய ஒட்பங்களையும், தக்க தாய்மார், அருளோடு செலுத்தி அக் குழந்தைகளை அறிவாளிகளாச்சுவதும் உண்டு. சீகாழியில் தோன்றியருளிய புகலிப் பிள்ளையார்க்கு எல்லாம் வல்ல உமையம்மை தம் அருளொழுகுந் திருமுலைப்பாலை ஒரு பொன்

வள்ளத்திற் கறந்து மெய்ஞ்ஞானமுங் கலைஞான முமாகிய ஞானங்களை அதனிற் குழைத்து ஊட்ட, அதனால் பிள்ளையார் ஞான உணர்வுகள் மிகக் கிளரப்பெற்றுத் திருஞானசம்பந்தராய் வயங்கிய அருமையான அருள் நிகழ்ச்சி இங்கே நினைவு கூர்தற்குரியது.

1 "சிவனடியே சிந்திக்குந்
திருப்பெருகு சிவஞானம்,
பவமதனை அறமாற்றும்
பாங்கினிலோங் கியஞானம்,
உவமையிலாக் கலைஞானம்,
உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்
தாமுணர்ந்தார் அந்நிலையில்"

என்று சேக்கிழார் பெருமான் அதனை நன்கு விரித்துக் கூறுவர். திருஞானசம்பந்தப் பெருமான் தமக்கு நேர்ந்த இம் மெய்ந்நிகழ்ச்சியை உலகத்தார்க்குத் தாமே வெளிப்படுத்தும் வகையில்,

2 "போதையார் பொற்கிண்ணத்
தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத்
தானெனை ஆண்டவன்
காதையார் குழையினன்
கழுமல வளநகர்
பேதையாள் அவளொடும்
பெருந்தகை இருந்ததே"

என்று அருளிச் செய்தலுங் காண்க. 'பாற்பட்டார்' என்பது நல்லொழுக்கங் கொள்ளுதல் என்

1. பவம் - பிறப்பு.
2. போதை ஆர் - மலரைப் போன்ற. பேதையாள் - உமை.

னுங் கருத்திலும் வழங்குதல் அறியற்பாலது. பொதுவிற், பால் இங்ஙனம் ஞானப் பெருக்கத் துக்கு உதவியாயிருத்தலின், மாணவர்கள் தாம் கல்வி பயிலுங் காலங்களில் பாலுணவைத் தகுதி யாகப் பயன்படுத்திக்கொள்ளுங் கட்டாயத்தி லிருக்கின்றனர். ஆவின்பால் இங்ஙனம் அறிவுச் சிறப்புடையதாயிருத்தல், அப் பாலினை உண் ணும் ஆன்கன்றுகள் மிக்க அழகும் கவர்ச்சியும் சுருசுருப்பும் துள்ளிய விளையாட்டும் உள்ளன வாயிருத்தல் கொண்டுந் தெளியப்படும். நாலடி யாரில்,

[1]"பல்லாவுள் உய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாம் தாய் நாடிக் கோடலை"

என அந்த ஆன் கன்றின் மற்றொரு சிறந்த தனித் திறனை எடுத்துக் காட்டுதலும் இங்கே பெரி தறிந்து மகிழ்தல் வேண்டும். பாலுண்ணுத நிலை, திறமையில்லாச் சோம்பல் நிலையையும், வெற்றி காணுத் தோல்வி மனப் பான்மையையும் விளைத் தல் கண்டு, அந் நிலைகளைப் 'பால் மாறிக்கை,' 'பால் மாறுதல்' எனவுங் கூறுதல் காண்க. நல் வாய்ப் புடைய குழந்தைகளைப் 'பால்வாய்க் குழந்தை' என்றலும் இப்பொருட் டாகும்.

இனிக், திருமணக் காலங்களிலும் பாலின் முதன்மை பெரிதுங் கவனிக்கப்பட்டிருக்கின்றது. திருமணத்தில் வேளைதோறும் மணமக்களுக்குப் பாலும் பழமும் தருதலென்பது, தொடர்பாகக்

1. பல் ஆவுள் - பல பசுக்களினிடையே. உய்த்து விடினும் - செலுத்திவிட்டாலும். குழக் கன்று - இளங் கன்று. நாடிக்கோடலை - நாடிக்கொள்ளுதலை.

கையாளப்படுகின்றது. அறுகம்புல்லிற் பாலைத் தோய்த்து மணமகள் மூக்கின் மேற்பகுதியிற் குத்துதலென்பதும் ஒரு சடங்கு. அறுகம் புல்லிலும், கன்றுகள் தின்று கழித்து எஞ்சியுள்ள புல், அதற்குச் சிறந்ததென்று கருதப்பட்டிருக்கின்றது. பாலையன்றிப் பாலிலிருந்து எடுக்கப்படும் நெய்யும், மணமகட்கு, அத்தகைய அறுகம் புல்லால் தோய்த்துத் தலையில இட்டு முழுக் காட்டுதல் உண்டு. பண்டு ஆயர்கள்பால் இச் சிறப்பு நன்கு நிகழ்ந்தமை,

[1]"நாழியுள் இழுது நாகுஆன்
கன்றுதின் றொழிந்த புல் தோய்ந்து
ஊழிதோ றூவும் தோழும் போன்று
உடன் மூக்க என்று
தாழிருங் குழலி னாளை
நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சொரிந்து மொய்கொள்
ஆய்த்தியர் ஆட்டினாரே"

என்று சிந்தாமணியில் விளக்கமாக எடுத்துக் காட்டப்படுகின்றது. பாலிகை அமைத்தல், அதன் வழிபாடு, பாலிகை விடுதல் முதலியனவும் நினைவுகூர்தல் வேண்டும். மணமக்கள் பின்னர்க் குடித்தனம் நிகழ்த்தும் காலங்களிலும் புதுவீட்டிற் குடிபுகுந்தால 'பால காய்ச்சுதல்' என்பது ஒரு தனிச் சடங்காக நிகழ்த்தப்படுகின்றது.

---

1. நாழியுள் இழுது - மூங்கிலாற் செய்யப்பட்ட நாழியுள் வைத்திருக்கும் நெய்யை. புல் - புல்லால். ஆவும் தோழும் - பசுவும் அதன் தொழுவும் போன்று. மூக்க - மூப்பெய்துக. மூழை - அகப்பையால். ஆட்டினார் - நீராட்டினர்.

பாலை ஓர் உயர்ந்த உணவாகக் கொள்வதில் மக்கட்குள்ள ஆர்வம், 'பாலடிசில்' 'பால்வடை' 'பால் கொழுக்கட்டை' 'பால் அவி' 'பாலேடு' 'பாலாடை' 'பாற்கட்டி' 'பாற்பண்ணியம்' 'பாற் பாயசம்' 'பாற்பொங்கல்' 'பான்மடை' 'பாற்கூழ்' 'திரட்டுப்பால்' 'பாற்சுண்டு' 'பாற்கிண்டல்' 'பாற் குழம்பு' 'பானீயம்' முதலிய எத்தனையோ உண்டி வகைகளைப் பாலிற் கண்டு அவர்கள் பயன்படுத்தி வருவதிலிருந்து விளக்கமாகின்றது. "பாலோடாயினும் காலமறிந்துண்" என்னும் பழமொழியிற் 'பாலோடாயினும்' என்று வருதலே அதனை அவர்கள் உயர்வாகக் கருதிய நிலையினை நன்கு புலப்படுத்தும். உண்ணும் வகைகளாகிய 'உண்டல், தின்னல், நக்கல், பருகல்' என்னும் நான்கு நிலைகளிலும் பாலுணவு பயன்பட்டு வருதல் 'பாலூட்டுதல்' 'பாற்கட்டி தின்னுதல்' 'திரட்டுப் பால் உறிஞ்சுதல்' 'பால் பருகுதல்' முதலிய நிகழ்ச்சிகளால் உணரப்படுகின்றது.

அன்பு, வீரம், தூய்மை முதலிய உணர்வுகளைப் பால் கொடுத்தலின் வாயிலாகப் பிறர்க்கு ஊட்டுதலும் ஆகும். தாய்மார் தங் குழந்தைகட்குப் பால் கொடுக்கும்போது இதனைக் கருத்திருத்துதல் நல்லது. சினம், அழுக்காறு முதலிய தீய உணர்வுகள் மனத்தில் நிகழும் போது குழந்தைகட்குப் பால் கொடுத்தால், அவ்வுணர்வுகளே அவற்றிற்குப் படிந்துவிடும்.

பாலைக் கறிவகைகளிலுங் கலந்து மக்கள் பயன் நுகர்வர். இப் பழக்கம், "அடினும் பால் பெய்து கைப்பறாது பேய்ச் சுரைக்காய்" என்

னுந் திருமொழி எழுதற்கு ஏதுவாயினமை கொண்டு தெளியப்படும். நாட்டுப்புறங்களில், ஊர்த் தொழிலாளர்க்குத் தானியம் முதலிய பிற பொருள்கள் படி கொடுக்கப்படுமாயினும், உணவு வகைகளிற் பால் முதன்மையானதென்னுங் கருத்தால், அத் தானியப் படி முதலியவற்றையும் 'பாலுரிமை' (பால் சுதந்தரம்) என்று வழங்குவர்.

> "பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
> நாலும் கலந்துனக்கு நான்தருவேன்"
> "பாலொடு தேன்கலந் தற்றே"

எனவெல்லாம் ஒளவையார், திருவள்ளுவர் முதலிய மெய்ஞ்ஞானப் பெருமக்களும் இவ்வுணவின் மேன்மையினைக் கருத்தோடு புலப்படுத்தியிருத்தல் கருதுதற்குரியது.

இவ்வாற்றால், மக்கள் தக்க இளமைச் செவ்வி வாய்ந்து நன்கு திகழ்கின்றனர். பால் இதற்கு ஏதுவாயிருக்கும் என்பது, இளமைச் செவ்வியுடையாரைப் பார்த்து 'அவர் தோற்றம் பால் வடிகிறது' என்று கூறுதல் கொண்டு உணரப்படும். முதலில் முளைக்கும் பல்லைப் 'பாற் பல்' என்பதனாலும் இவ் விளமைக் குறிப்புப் பெறப்படும். இருபதாண்டு நிலைக்கு உட்பட்ட இளைஞனைக் கூடப் 'பாலியன்' என்றும், அவன்றன் இளமைத்தன்மையைப் 'பாலியம்' என்றும், அவன் இன்ப விளையாட்டைப் 'பால நாடகம்' (பால லீலை) என்றும், பதினாறாண்டுக்குட்பட்ட இளநங்கையையும் எக்காலுங் கன்னியாயிருக்கும் உமையம்மையையும் 'பாலை' என்றும் பாலின் பெயரால் மக்கள் வழங்கி வருதலும்

நினைவுகூர்தல் வேண்டும். இதனால், இங்ஙனம் இளமையுஞ் செழிப்புமாகிய செல்வத் திளைப்பின் மகிழ்ச்சியைப் 'பாற் சொக்கு' எனவுங் கூறுவர்.

இனி, இளைஞராயினர் மூத்த பின்னும், பால் தனியுணவாயிருந்து அவர்க்கு நலந் தந்து வருகின்றது. நோயாளர்க்குப் பால் ஒரு தனி உணவாகும். மருந்துக்கும் பால் எத்தனையோ வகையாகப் பயன்படுகின்றது. உடம்பில் வெப்பம் மிகுந்தபோது பால் காய்ச்சி முழுகுதலும், வெண்ணெய் காய்ச்சி முழுகுதலும் வழக்கத்தில் உண்டு. இறக்குந் தறுவாயிற் 'பால் விடுதலும்' வழக்கமாகும். அது, ஒரு சடங்காகவும் மேற்கொள்ளப்படுகின்றது. இறந்த பின்னரும், இறந்தவர் எலும்புகளைப் பொறுக்கிச் சேர்த்துப் 'பால் தெளித்தல்' நிகழ்கின்றது. இதுவும் ஒரு முதன்மையான சடங்காயிருக்கின்றது. இந்தச் சடங்கு தமிழ்நாட்டின் வடபகுதிகளிற் 'பால்' என்றே வழங்குகின்றது. தென் பகுதிகளிற் 'காடாற்று' என்பர்.

இனித், துறக்க வுலகத்திற் சென்ற தேவர்க்கும் பாலிலிருந்தெடுக்கப்படும் நெய்யினை வேள்விக்கண் விட்டு அவியுணவென்று வழங்குதலை அறிந்திருக்கின்றோம்.

1"அவிசொரிந்து ஆயிரம் வேட்டல்"

என்னுந் திருக்குறளாலும் இது பெறப்படும்.

மக்கள் இங்ஙனம் கருவிலிருப்பது முதல், பிறந்து வாழ்ந்து இறந்து துறக்கவுலகம் எய்தி

---

1. அவி - நெய். வேட்டல் - எரிவளர்த்தல்.

யிருக்கும் நிலை வரையில், அவர்களுக்குப் பாலும் அதன் படுபொருள்களும் மிகவும் பயனுள்ளன வாய், அவர்களைக் காப்பாற்றி வருகின்றன. இவர்கட்கு மேற்பட்ட இறைவனும் ஆனைந்தாடுதல் பற்றி முன்பே பேசப்பட்டிருக்கின்றது. முருகப்பெருமானுக்குப் பாற்காவடி கட்டுதலும் பால் முழுக் காட்டுதலும் சிறப்பாக நடைபெறக் காண்கின்றோம்.

இனி, மக்களினுந் தாழ்ந்த ஏனைச் சிற்றுயிர்களில் ஓரறிவு உயிர் முதல் ஐயறிவு உயிர் வரையில் எல்லா உயிர்கட்கும் பால் ஓர் உணவுப் பொருளாயிருந்து பாதுகாத்து வருகின்ற அளப்பிலாப் பேரியற்கை பெரிதும் வியத்தற்குரியதாயிருக்கின்றது. ஓரறிவு உயிராகிய செடிக்கும் பாலும் நெய்யும் ஊற்றி வளர்க்குங் குறிப்பொன்று,

**[1]"நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்ப்ப**
**நும்மினுஞ் சிறந்தது நுவ்வை ஆகும்என்று**
**அன்னை கூறினள் புன்னையது சிறப்பே"**

என்று நற்றிணையில், மிகவும் அழகாகக் கூறப்படுகின்றது. பொங்கல் காலங்களிற் பயிர்களுக்கும் செடிகளுக்கும் 'பொங்கலோ பொங்கல்' என்று கூறிக்கொண்டு பால் தெளித்தல் இன்றும் வழக்கத்தில் உள்ளது. "நெல் முதலிய தானியங்கள், முதலிற் பாற்பதங் கொண்டு பின்பு மணிகளாக முற்றுதலும் நினைவுகூரற்பாலது.

மீன்வகையில் 'திருக்கை மீன்' (Myliobates species) என்பதும் ஒன்று. ஒரே காலத்தில்

---

1. நுவ்வை - நும் தங்கை. புன்னையது - புன்னை மரத்தினது.

அது நான்கு மீன்வரை கருவிற் கொண்டிருக்கும். அவை அங்ஙனங் கருவிலிருக்கும்பொழுதே தாய் மீனின் இரத்தம் பாலுணவாக மாறித் தனித் தனிக் குழாய் வழியாக அவற்றிற்குப் பயன்படு கின்றதென்று உயிர்நூல் அறிஞர் ஆராய்ந்து கண்டிருக்கின்றனர். மிகப் பெரிய விலங்கினமான திமிங்கிலத்துக்கும் இங்ஙனமோ ரமைப்பு அமைய வில்லை என்ப. மக்கட் பிறவியிலும் தாயின் கருவை விட்டுக் குழந்தை வெளிப்பட்ட பின்னரே இரத்தம் பாலுருவமாக மாறிச் சுரத் தலைக் காண்கின்றனம். ஆதலால், மீன்களுள் ஒரு சில, கருவிலேயும் பாலுண்டு வளர்தல் இங்கே அறிந்து மகிழ்தற்குரியதா யிருக்கின்றது.

"பாம்புக்குப் பால் வார்த்தாற்போல" என ஒரு பழமொழி வழங்குதலின், பாம்புக்கும் பால் உணவாதல் தெரிகின்றது. பாம்பின் புற்றில் மகளிர் பால்வார்த்து வழிபடும் வழக்கமும் இங்கே நினைவுகூர்தற்குரியது.

பறவை யினங்களையும் பால் வார்த்துக் காக்கும் அருமை,

1"சிறையாரும் மடக்கிளியே இங்கேவா தேனொடுபால் முறையாலே உணத்தருவன்"

எனத் திருஞானசம்பந்தர் தேவாரத்தில் கிளிக்குப் பால் தரும் இயல்பு உரைக்கப்படுவதிலிருந்து தெளிவாகும். அன்னப் பறவை பாலையும் நீரையும் வேறு பிரித்துத் தனிப் பாலையே உண்ணும் என்பர். இச் சிறப்பியல்பினால், அறியவேண்டி யதையே பிரித்தறியும் தலைமாணாக்கர்க்கு அன்

1. சிறை ஆரும் - இறகுகள் நிறைந்த. உண - உண்ண.

னப் பறவை இலக்கண நூல்களில் உவமையாகக் காட்டப்பட்டு வருகின்றது. இனிக், குரங்கு, பூனை, நாய், கன்று முதலிய விலங்கினங்கள் பால் ஊற்றிக் காக்கப்படுதல் யாவரும் அறிந்ததேயாம். "பாலுக்குங் காவல் பூனைக்குந் தோழன்" என்னும் பழமொழி போல்வன இங்குக் கருதத் தகும். ஐயறிவு ஆறறிவு உயிர்களாகிய விலங்குகட்கும் மக்கட்கும் பால் தனிச்சிறப்பான தொடர்புடைய தென்பது, அவ்வுயிர்களிடம் மட்டும் பால் தோற்ற முறுவதிலிருந்து தெரிகின்றது. ஓரறிவு முதல் நான்கறிவு வரையிலுள்ள உயிர் களிடத்தில் பால் பெரிதுங் காணப்படவில்லை. அறிவு வளர்ச்சியும் எலும்பு வளர்ச்சியுமுள்ள ஐயறிவு ஆறறிவு உயிர்களிடமே பால் உண்டாவ தனால், அவ்விருவகை வளர்ச்சிக்கும் இதனாற் பயனுண் டென்பது விளங்கும். அன்புக்கும் எலும்புவளர்ச்சிக்கும் மிக இயைபான தொடர்பு உண்டென்பது,

**1"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு"**

**"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு**
**என்போ டியைந்த தொடர்பு"**

**"என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம்"**

என்னுந் திருவள்ளுவர் தம் பொய்யா மொழிக ளால் இனிது வெளிப்படுகின்றது.

இங்ஙனம் எல்லா வகையான உயிர்களையும் பால் பாதுகாத்துவருதலை யறியும்போது, பாலின்

---

1. என்பும் - எலும்பும்.

உயர்வும் பெரும்பயனும் நன்கு புலனாகின்றன. இக் காக்குஞ் சிறப்புக் கருதியே 'பாதுகாப்பு' என்னும் பொருட் குறிப்பிற் 'பாலனம்' 'பரிபாலனம்' முதலிய சொற்கள் பாலின் பெயரடியாகத் தோன்றியுள்ளன. ஆக்களைக் காப்போன் என்னும் பொருளிற் 'கோபாலன்' என்னும் பெயரும், உலகைக் காப்போன் என்னும் பொருளிற் 'பூபாலன்' என்னும் மொழியும் 'பாலகன்' என்னும் மொழியும், ஆறு கடப்பாரைக் காப்பது என்னும் பொருளில் 'ஆற்றுப் பாலம்' என்னும் மொழியும், ஆக்கம் விளைக்கும் நவதானியத்தாழி என்னும் பொருளிற் 'பாலிகை' என்னும் மொழியும், இவற்றினடியாக இன்னும் பற்பல மொழிகளும் தோன்றியுள்ளன. உலகுக்கே பொதுவாயிருந்து பால் வழங்கி உலகுயிர்களைக் காத்து வருகின்ற ஆயராகிய முல்லைநில மக்கள் இதனாற் 'பாலர்' என்றே பெயர் வழங்கப்படுஞ் சிறப்புப், பிங்கல நிகண்டினால் தெளியப்படுகின்றது.

ஆயர்பாடியில் வளர்ந்து விளங்கிய கண்ணன் பெருமைகள் இங்கே நினைவுக்கு வருகின்றன.

> **"குன்றெடுத்து ஆநிரை காத்தபிரான்**
> **கோவலனாய்க் குழல்ஊதி ஊதிக்**
> **கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு**
> **கலந்துடன் வருவானைத் தெருவில்கண்டாய்"**

என்னும் பெரியாழ்வார் திருமொழியினால் அவ்வண்ணல் ஆநிரைகளையும் அவற்றின் கன்றுகளையும் முல்லை நிலங்களில் மிக அருமையாக மேய்த்துப் போற்றிய அருமை பெறப்படுகின்றது. அன்றியும், ஆக்களின் பயனாகிய பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் என்பவற்றின் பெரும்பயனை

நன்கறிந்தே அப் பெருமான், அவற்றை எவ்வகையாலும் நிரம்ப உண்டும் தம் தோழர்கட்கு உண்பித்தும் திருவிளையாடல புரிந்தனன்.

**" கறந்தநற் பாலும் தயிரும் கடைந்து**
**உறிமேல் வைத்த வெண்ணெய் "**

**" வைத்த நெய்யும் காய்ந்த பாலும்**
**வடிதயிரும் நறுவெண்ணெயும் "**

கண்ணன் பிறந்ததுமுதல் வீட்டில் இலவாயின என்று ஆழ்வார் அழகாக இசைத்து மகிழ்கின்றனர். பால் அடுப்பில் காய்ந்துகொண்டிருக்கும் போதும், கண்ணனிடம் அது எஞ்சுவதில்லை.

**" பாலைக் கறந்து அடுப்பேற வைத்துப்**
**பல்வளையாள் என்மகளிருப்ப**
**மேலையகத்தே நெருப்பு வேண்டிச்சென்று**
**இறைப்பொழுது அங்கே பேசிநின்றேன்**
**சாளக் கிராம முடைய நம்பி**
**சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான் "**

என்னுந் திருமொழியினால் இது நன்கு விளங்குகின்றது.

கண்ணபிரான் மக்கட்பிறவியில் வந்து விளங்கினானாதலின், அப்பிறவியி னியல்புக்கேற்ப 'ஆனைந்து' என்னும் பால் தயிர் நெய் மோர் வெண்ணெயை உண்டு ஆடினன். சிவபிரான் பிறவா யாக்கையினன் ஆதலின் அவன் இவ் ஆனைந்தினையும் திருமுழுக்குப் பொருள்களாக ஆடினன் என்ப.

மேலும், ஆனைந்தென்னும் இவ் ஐவகைப் பொருள்களிலும் கண்ணன், வெண்ணெயையே மிகுதியாக உண்டவன் என்பது,

" அள்ளி நீ வெண்ணெய் விழுங்க
அஞ்சாது அடியேன் அடித்தேன்
தெள்ளிய நீரிலெழுந்த
செங்கழுநீர் சூட்டவாராய் "

என்னுந் திருநாலாயிரத் திருமொழியில், வெண்ணெயைமட்டுந் தனித்தெடுத்து ஓதுதல் கொண்டே தெளிந்துகொள்ளலாம். " கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய் " என்று சிறுபிள்ளைகளும் இதனைக் கூறுவர். 'வெண்ணெய் திருடி' யென்பதும், நவநீத கிருட்டினன் என்பதும் அவனுக்குப் பெயர்களாகும். எவ்வகையாலேனும் அதனைப்பெற்று உண்பது என்று மணிவண்ணனாகிய கண்ணனே முயன்றனனென்றால் வெண்ணெயின் உயர்வு நன்கு புலப்படுமன்றோ ! சமயக்கண்ணுடையோர் அவ்வெண்ணெயைத் தூய ஞானம் என்று அறிகின்றமையால், ஆவின் பயனுக்கும் ஞானம் முதலிய உயர்வுகட்கும் மிக்க இயைபுண்டென்பது தெளிவாகும்.

கண்ணபிரார்க்கு உலக பாலர்களாகிய ஆயர்களிடையே தொடர்பு நேர்ந்ததும், அவன் ஆநிரைகளையும் அவற்றின் பயன்களின் மேன்மையையும் இளமையிலேயே முன்னறிந்து பயன்படுத்தி மணிவண்ணனாய் அழகும் அறிவும் அருளும் அருஞ்செயலும் மேவி விளங்கியதும் மிகவும் இயைபறிந்து மகிழ்தற்குரியன.

உலகபாலனாகிய கண்ணபிரான், உலக பாலர்களாகிய ஆயர்களிடையே தொடர்பு கொண்டு வளர்ந்து, உலக பாலனஞ்செய்யும் ஆநிரைகளை மேய்த்தும், உலக பாலனப் பொருள்களாகிய

பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றை ஆர உண்டு உலகுக்கு அறிவுறுத்தியதும், பிறவும் முல்லை நில மக்கட்குப் பாலினடியாகப் பிறந்த 'பாலர்' என்னும் பெயர் மாட்சிமையை நன்கு புலப்படுத்துவனவாயிருக்கின்றன.

இங்ஙனம் இப் பாலி னடியாகத் தோன்றியிருக்கும் பெயர்களோ ஏராளமாயிருக்கின்றன. அறியாமைப் பொருள்கள் பலவற்றிற்குப் பாலாற் பெயர்; அப்படியே எல்லா உயிர் வகைகளுக்கும், மக்களுக்கும், தேவர்களுக்கும், கடவுளுக்கும் பாலாற் பெயர். உலகுக்கும் விண்மீன்களுக்கும் கடலுக்கும் ஆறுக்கும் இங்ஙனமே ஏனைப் பலவற்றிற்கும் பாலாற் பெயர். 'பால் வெள்ளி' என நல்ல சொக்க வெள்ளியைக் கூறுதலும், வெள்ளிய கருப்பூரத்தைப் 'பாலுகம்' என்று கூறுதலும் வழக்கம். மரஞ் செடி கொடி வகைகளையும் அவற்றின் உறுப்புக்களையும் 'வெட்பாலை' 'பாலி' (ஆலமரம்) 'பால் வெண்டை' 'பாற் சம்பா' 'பால் வள்ளி' 'பாலைக் கொடி' 'பாற் பெருங்காயம்' என்று கூறுவர். ஏனைச் சிற்றுயிர்களையும் 'பால் மீன்' 'பாற்குருவி' 'பாலைக்குருவி' 'பாற்சுறு' 'பாலன்னம்' என்று கூறுப. மக்களையும் பாலகாப்பியர்; பாலைக் கவுதமனார் என்று கூறுதல் கருதுக. தேவர், கடவுள் என்போர்க்கும், 'பால்வண்ணன்' 'பாலினி' 'பாலன்' எனப் பல பெயர்கள் வழங்குவர். இனிப் 'பாலைவனம்' என நிலத்தையும், 'பாற்குனி' (உத்திரம்), பாலை (மிருகசிரிடம்), பால்நட்சத்திரம் (புனர்ப்பூசம்) என விண்மீன்களையும், 'பாற் கதிர்' 'பால் நிலவு' எனத் திங்களை

யும், பாற்கடல் எனக் கடலையும், 'பாலாறு' என ஆற்றையும், 'பாலை' எனப் பண்வகைகள் பலவற்றையும், இன்னும் இவற்றினடியாகப் பிற பொருள்கள் நிலைகள் முதலியவற்றையும் மக்கள் ஆர்வமாய் வழங்கி வந்திருக்கின்றனர். 'பாலைத் திணை' 'பான் முல்லை' 'பாலை நிலை' முதலிய அகத்திணை புறத்திணையின் இலக்கணத் துறைகளும் இப் பெயரால் அமைந்துள்ளமையால் இப் பாலின் பெயர் வழக்கு யாண்டும் நெடுகப் பரந்து வழங்கிநிற்றல் உணரப்படும்.

பசுவின் மடியிலிருந்து சக்கை நீக்கிப் பிரிந் தொழுகுதலால அங்ஙனம் ஒழுகும் பொருள் பிரிவு என்னுங் கருத்திற் 'பால்' எனப்பட்டது. பின்பு இப் பிரிவுப் பொருளினடியாக எழுந்த பெயர்களும், அதன் வெண்மை, தண்மை முதலியவற்றினடியாக எழுந்த பெயர்களும் பலவாயின. 'பால்' என்னுஞ் சொல்லுக்குச் 'சாறு' என்னும் பொருளுமுண்டு. கள்ளை 'மரத்துப் பால்' என்னும் வழக்கும், சாணிச்சாற்றைச் சாணிப்பால் என்னும் வழக்கும் இங்கு அறியற் பாலன. இனி, நன்மை என்னும் பொருளும் அதற்கு உண்டு. பொங்கல் நாளில் 'பால் பொங்கிற்றா?' என்று நலம் உசாவும் முறையிற் கேட்பது வழக்கம். இது மங்கலக் கருத்தினை உணர்த்துகின்றது.

இனி, 'வெளுத்ததெல்லாம் பாலாமா?' 'பாலைப் பார்த்துப் பசுவைக் கொள்ளு' 'பாலுடன் கூடிய நீர் போல' 'பாலிற் படுநெய் போல' 'பாலுந் தேனுஞ் சேர்ந்தாற் போல' 'பிரையுறு பால்

போல்' 'பால்மணம் மாருக் குழவி போல்' என எத்தனையோ வகையான பழமொழிகள் உவமைகள் முதலியனவும் எழுந்துள்ளன.

இங்ஙனமே, 'ஆ' 'ஆன்' என்னும் பெயரினடியாகப் பிறந்த பெயர்களும் பற்பலவாகும். 'நாட்படி' என்பதை 'ஆனியம்' என்ப. பதிற்றுப் பத்தில் (69:14) விண்மீன் 'ஆனியம்' என்னும் பெயரால் வழங்கப்படுகின்றது. 'ஆய்' 'ஆயம்' என்னும் பெயர்கள் 'தாய்' 'கூட்டம்' என்னும் பொருள்களில் வழங்குதலும் நினைவுகூர்க. இங்ஙனம் பற்பலவாம்.

ஆவும் ஆவின் பயனுங் கருதி இவ்வளவு மிகுதியான வழக்குகள் பெருவாரியாக வழங்கிவந்திருத்தலை உற்றுநோக்கினுல், தமிழ் மக்கள் அவற்றை நுகர்ந்த திறமும், அவற்றின்பால் வைத்த பெருமதிப்பும், அவற்ரேடு பழகிய பன்னெடுங் காலப் பழக்கமும், பிறவும் நன்கு புலனுகின்றன. ஆக்களைச் 'செல்வம்' என்னும் பெயரால் 'மாடு' எனத் தமிழர் வழங்கியதும், பிறர் ஆ வதைத்து வேள்வி செய்ததை மறுத்து அவர்க்கும் ஆவின் மேன்மையை இவர்கள் அறிவித்ததும், பிறவும் இங்கே அறிந்து மகிழ்தற்குரியன.

## 2. பாலின் பெருமை

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா.

—ஔவையார்

உலகத்தில் உயிர்கள் தோன்றிய நாள் முதல் அவைகட்குப் பால் முதலுணவாகவும், முதன்மை யான உணவாகவும் பயன்பட்டுவருகின்றது. உயிர்கள் உணவினால் வளர்ச்சியடைந்து வலுப் பெறுகின்றன. பாலே அவைகட்கு முதலுண வாகும்போது, அப் பாலில் உணவுப்பொருள்கள் யாவும் அடங்கியிருக்க வேண்டுமன்றோ! அவ் வாறே, உயிர்களின் வளர்ச்சிக்கும் ஊக்கத்துக்கும் வேண்டிய பொருள்கள் எல்லாம் பாலில் காணப் படுவதாகப் பொருளாராய்ச்சி வல்லார் தெளிவு படக் காட்டியிருக்கின்றனர். ஆகவே, பால் ஒரு முழு உணவுப் பொருள் என்பதனை மக்கள் எவ ரும் மறுக்கமுடியாது.

பால் உணவுப் பொருளாவதுமன்றி, நோய் தீர்க்கும் மருந்தாகவும் மக்கட்குப் பெரும்பயன் அளிக்கின்றது. நோயாளிகட்கு வைத்தியர்கள் பால் பத்தியம் வைப்பது முறையாக இருக்கின் றது. பால் பத்தியத்தினாலேயே நோயாளி நோய் நீங்கி வலுவடைகின்றான். இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னிருந்த கெல்சாய் என்ற மருத்துவர்

காசநோய் தீர்க்கும் மருந்தாகப் பாலை மக்கட்குக் கொடுத்துக்கொண்டு வந்தனர்.

பால் உயிர்களின் உடலை வளர்க்கின்றது ; அவ்வுடலுக்கு உரம் கொடுக்கின்றது ; உடல் நோயினால் நலிந்து மெலிவடையும்போது, பால் தனியுணவாக நின்று அதன் நோயைத் தீர்த்து முன்னுள்ள வலுவையும் கொடுக்கின்றது. உடல் நோயடையும்போது மற்றை அன்றாட உணவுகளெல்லாம் அகன்றுபோக முதலுணவாக இருந்த பாலே அப்போது முதன்மையுணவாகத் தோன்றி அதனைச் சீர்திருத்திச் சிறக்க வைக்கின்றது. ஆகையால், மக்கள் பாலுணவு ஒன்றினாலேயே நோயின்றி உரம்பெற்று உயிர் வாழலாம் என்பது தெள்ளத் தெளிய விளங்குகிறதல்லவா ! பால் சேராத உணவு உணவாகாது.

இந்நாட்களில் மக்கள் பாலின் சிறப்பை நன்றாக உணர்ந்து அதனை மிகுதியாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இதற்குப் பல காரணங்கள் உண்டு, அவையாவன :—

1. பாலும் பால் சேர்ந்த பொருள்களும் சிறந்த உணவாகின்றன.
2. அடுப்பின்மேல் வைக்காமல் பாலைப் பச்சையாகவே உட்கொள்ளலாம்.
3. பால் முழுவுணவு ; எந்த உணவுப் பொருளும் பாலுக்கு ஈடாகாது.
4. உடலுக்கு உரம் கொடுக்கும் மற்றைய உணவுப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் ஈடாகப் பால் ஒன்றினையே பயன்படுத்திக் கொள்ளலாம்.

5. பால் தரும் உயிர்களை வளர்த்தலும் காத்தலும்; பால் கறத்தலும் சேர்த்தலும்; அதனை இடத்துக்கிடம் அனுப்புதலும் எல்லாம் உடல்நல விதிகளுக்கு உட்பட்டே நடந்தேறுகின்றன.
6. பாலினை மக்கட்கு ஏற்ற உணவுப் பொருளாக்குவதற்குப் பற்பல வழிகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவ்வாறே பற்பல உணவுப் பொருள்களும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன.
7. பாலிலிருந்து உண்டாக்கப்படும் வெண்ணெய் முதலிய [1]உடன்படு பொருள்களும் உரம் தரும் உணவாகின்றன.
8. பொருளாராய்ச்சி வல்லாரால் இப்போது கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் [2]உய்வனவுகள் எல்லாம் பாலில் காணப்படுவதாக அவர்கள் விளக்கிக் காட்டியிருக்கின்றனர். ஒவ்வொரு பொருளில் ஒவ்வோர் உய்வனவே சிறப்பாகக் காணப்பட, பாலில் எல்லா உய்வனவுகளும் அமைந்து கிடப்பது பெரியதோர் நன்மையன்றோ!

மக்கள் உடல்நலத்தோ டிருக்கும்போதும் உடல் நலம் சிறிதோ பெரிதோ குறைவுபட்டிருக்கும்போதும் பாலினையே உணவாகக் கொள்வதும் இழுக்கு ஆகாது. ஏனெனில், பாலுணவு நன்று டன் உடலிற் படும் அழுக்குகளை யெல்லாம் அவ்வப்போதே போக்கிவிடுகின்றதென்பதனை நாம் பழக்கத்தி (அநுபவம்) னாற் கண்டுகொண் டிருக்கின்றோம். பல நோய்கள் மருந்தின்றிப் பாற் பத்தியத்தினாலேயே தீர்ந்து விடுகின்றன என்பதனை வைத்தியர்கள் தம் பழக்கத்தினாலுந் தெரிந்துகொண்டு நமக்கு அறிவித்திருக்கின்றனர்.

1. By-products.
2. Vitamins.

சில நோய்களினால் உடல், செந்நீர் (இரத்தம்) வறண்டுபோய் எலும்புந் தோலுமாக நிற்கின்றது. அப்போது அவ்வுடலுக்குப் பாற் பத்தியம் வைத்தால் செந்நீர் செம்மைப்பட்டுப் பெருக, அது தசை வளர்ச்சி யடைந்து முன்னிலையாகிய நன்னிலையை அடைகின்றது. அஃதன்றியும், பெருண்டியினாலேயோ, வேலையின்மையினாலேயோ பருத்துக் கொழுத்த உடலுக்கும் பாற்பத்தியம் வைத்தால், அது தசைத் தளர்ச்சி யடைந்து, கொழுப்பும் வற்றிப் போய்ப் பழைய நிலையைப் பெற்றுப் பதப்பட்டுவிடுகின்றது. உடலின் மலிவுக்கும், மெலிவுக்கும் ஒரே மருந்தாகப் பயன்படுகின்றது பால் என்றால், அதற்குப் பெருமை கொடுக்க வேறென்ன வேண்டும்! உணவுகட்கெல்லாம் உணவும், மருந்துகட்கெல்லாம் மருந்தும் ஆவது, சிறந்த பொருளாகிய பால் என்னும் அமிழ்தமே !!

---

# 3. பாலில் உள்ள உடலுணவுப் பொருள்கள்

பாலில் எல்லா உய்வனவுகளும் உண்டு—மே. நா. ம

ஊன் செய் பொருளும், சர்க்கரையும், நிலவுப்புகளும், இவைகளோடு கொழுப்பு நுண்துளிகளும் சேர்ந்து நீர் மயமாய் இருக்கின்ற ஒரு பொருள் பால். இதன் நிறம் வெண்மை. வெண்மை ஏழு நிறங்களும் சேர்ந்த கலப்பு நிறம் என்பது பூத (இயற்கை) நூலார் கண்டறிந்துள்ள ஓர்

உண்மை. ஆகையால், பாலில் ஏழு நிறங்களும் கலந்துள்ளன என்பது தெளிவு. நிறங்களில் உய்வனவுகள் உண்டென்று அறிவியலார் கண்டறிந்து தெரிவித்துள்ளனர்.

பாலில் உள்ள [1]ஊன்செய் பொருள் மிக இலேசில் பிரிவுபடும்படியான தொன்று. ஆகையால் அது மிகு விரைவிற் செந்நீரிற் கலந்து கொள்கின்றது. உடலுக்குச் சூடும், வலுவும் கொடுக்கத் தக்க பொருள்கள் பாலில் உள்ள கொழுப்பும் சர்க்கரையுமாம். இக் கொழுப்புப் பொருளை வெண்ணெய் என்கின்றோம். இவ் வெண்ணெய் பாலில் மிக நுண்ணிய துளிகளாக இருக்கின்றன. நாம் கண்ணுற் காணும் ஒரு துளிப்பாலில் 15,00,000 கொழுப்பு நுண் துளிகள் இருக்கின்றன வென்றால், குழந்தைகளும் நோயாளிகளும் எவ்வளவு விரைவில் பாலில் உள்ள கொழுப்பைச் செரிப்பித்துக் கொள்ளக் கூடியவர்களாவார்கள் என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

பாற் கொழுப்புப் போன்ற மேன்மையான கொழுப்பு வேறெப் பொருளிலும் இன்று. பாலில் இருக்கும் சர்க்கரையும் மற்றச் சர்க்கரைகளைக் காட்டிலும் வேறுபாடுடையது. இச் சர்க்கரை மிகத் தித்திப்புக் கொண்டதன்றாயினும் பாலுக்கு ஓர் இன்சுவை கொடுத்து நிற்கின்றது. கரும்பு முதலாகிய மற்றச் செடி கொடி கிழங்கு வகைகளினின்றும் எடுக்கப்படும் சர்க்கரை இப் பாற்சர்க்கரையைப் போன்று அவ்வளவு இலேசாக உடலிற் செரித்துச் செந்நீரொடு சேரக் கூடியதன்று.

1. Casein.

ஆகவே, பாலில் உள்ள ஊன்செய் பொருளும், கொழுப்பும், சர்க்கரையும் அப் பாலுக்கே உரியன வாகும்.

இன்னும் கனியுப்புக்கள் பல பாலிற் கலந்து கொண்டிருக்கின்றன. அவையாவன :—

1. சுண்ணும்பு—Calcium.
2. எரியம்—Phosphorus.
3. உவரம்—Sodium.
4. வாரியம்—Fluorine.

இவைகளெல்லாம் உடலுக்கு இன்றியமையா தன. இவைகளில் சுண்ணாம்பும் எரியமும் [1]மூளையையும், [2]நரம்புக் கூடுகளையும் சரியாக வேலை செய்ய வைக்கின்றன. இவ்விரண்டு உப்புக் களுடன் உவரமும் சேர்ந்து [3]தூம்பற்ற சுரப்பிக ளுக்கு [4]எழுச்சி மருந்தாக உதவுகின்றன. இவ் வாருகவே எலும்புகளும், பற்களும் உறுதிப்பாடு அடைவதற்குச் சுண்ணாம்பு, எரியம், வாரியம் ஆகிய இவைகளே துணை செய்கின்றன. இவைகள் எல்லாம் பாலில் சேர்ந்திருக்கின்றபடியால் அது ஓர் முழுவுணவுப் பொருளாகச் சிறப்படைந்து வருகின்றது.

இன்னும், இப் பாலினைப் பற்றிய இன்னொரு சிறந்த செய்தியுண்டு. அது யாவது உடல் வளர்ச்

1. Brain.
2, Nerve cells.
3. Ductless glands.
4. Stimulant.

சிக்கும் நோய் வராமற் காப்பதற்கும் மூலப் பொருளாயிருக்கின்ற செந்நீரின்கண் [1] சிவப்புச் செந்நீர் அணுக்கள் [2] வெள்ளைச் செந்நீர் அணுக்கள் என இருவகை அணுக்கள் உண்டு. இவ் வெள்ளைச் செந்நீரணுக்களே உடலில் உண்டாகும் நோய்களைத் தடுப்பனவும், ஒழிப்பனவுமாகும். இவ் வெள்ளைச் செந்நீரணுக்கள் பாலில் ஏராளமாகக் காணப்படுகின்றன. உடற்குள் பால் சென்றவுடனே செந்நீரின்கண் வெள்ளணுக்கள் ஒன்றுக்கு நான்காகி விடுகின்றன. இதனால் பாலுண்ணும் உடலில் நோய்கள் அணுகா என்பது திண்ணமாகின்றது.

இன்னும் பாலின்கண் பல்வகைப்பட்ட [3] காடிப் பொருள்கள் உண்டு. உணவுப் பொருள்கள் மாற்றமடைந்து செரித்துச் செந்நீரிற் சேர்வதற்கு இவை பேருதவி செய்கின்றன. இக் காடிப் பொருள்களுக்கும் உடலின்கண் இயற்கையாக உண்டாகும் காடிப் பொருள்களுக்கும் யாதொரு வேறுபாடுமின்று.

பாலில் இலேசில் செரிக்கக்கூடிய பொருள்களே அடங்கியிருக்கின்றன ; உடலுக்கு ஊறுசெய்யும் பொருள்கள் ஒன்றும் அதன்கண் இல்லை. அதன் விலை வாங்கமுடியாததொன்றும் அன்று. மேலும் பாலில் ஓரணுவாவது உடலுக்குப் பயன்படாமல் வீணே போய்விடுவதில்லை. உடற் கூறுகளை உண்டாக்கும் பொருள்களும், அவை எவ்வகை

---

1. Red corpuscles.
2. White corpuscles.
3. Ferments.

யேனும் ஊறுபாடடைந்தால் அவற்றைப் பழுது பார்த்துச் சரிப்படுத்தும் பொருள்களும் பாலில் உள; பாலில் சுண்ணும்புச் சத்தும், எரியச்சத்தும் நிறைந்திருக்கின்றபடியால் அது மற்றைய உணவுப் பொருள்களிற் காணப்படும் குறைபாடுகளை யெல்லாம் நிறைவுபடுத்தி விடுகிறது. இவைகள் எல்லாம் பாலின்கண்ணுள்ள தனிப்பட்ட சிறப்புக்கள். ஆகவே வேண்டியவளவு பாலுண்டே உயிர் வாழலாமென்பது பாலின் தன்மைகளை நன் கறிந்தவர்களுக்குத் தென்படாமற் போகாது.

பாலினிடம் உடல் வலிவுண்டாகத்தக்க பொருள்கள் இருக்கின்றன. ஆனால், அவை நரம்புகளுக்கு எழுச்சியைக் கொடுத்து உண்பவனுக்கு [1]மதுச் சாறுகள் போன்று மீக்கிளர்ச்சி கொடுப்பதில்லை. மீதூண் விரும்பி மீளா நோய்ப்பட்டவர்கள் மற்ற உணவுகளைச் சுருக்கிப் பாலுணவைப் பெருக்கிக் கொள்வார்களானல் சீரிய உடல் நலம் பெற்று வாழ்வார்களென்பது உண்மையான தொன்று.

இறைச்சி முட்டைகளையே உட்கொண்டு பாலைத் தள்ளுபடி செய்பவர்கள் வலிவுடையவர்களாக மாட்டார்கள். ஆனல் பாலையும் பால்படு பொருள்களையும் தள்ளாமல், காய்கறிகளையும் அளவாக உண்பவர்கள் மிக்க வலிவுடையவர்களாகக் காணப்படுவார்கள்.

பால் உண்ணுமல் மற்ற உணவுப் பொருள்களைக் கொள்பவர்கள் தண்ணீரோ வெந்நீரோ

---

1. Alcohol.

தள்ளாமல் நேரத்துக்கு நேரம் உட்கொள்ள வேண்டும். ஆனால், மற்ற உணவுப் பொருள்களைத் தள்ளிப் பாலையே உணவாகக் கொள்பவர்களுக்கு நீரே வேண்டியதில்லை. ஏனெனிற் பாலில் முக்காலே அரைக்கால் $\left(\frac{7}{8}\right)$ பங்கு நீருண்டு. இச்செய்தி கடவுட் படைப்பில் மிக வியப்பானது. பாலே குடித்து உயிர் வாழ்பவர்கள் குழந்தைகளும் சில நோயாளிகளுமே. குழந்தைகள் நீர் குடிப்பதில்லையென்பது நாம் கண்ணாரக் கண்டது. சில நோயாளிகள் நீர் குடிக்கக்கூடாதென்பதற்காகவே வைத்தியர்கள் அவர்கட்குப் பாற்பத்தியம் வைத்துவிடுகிறார்கள். இதனாலும் பாலின் உணவுச் சிறப்பு நன்கு விளங்குகின்றதல்லவா!

தானிய வகைகளிலும், கிழங்கு வகைகளிலும், கறிகாய் வகைகளிலும் சாதாரண சர்க்கரைகளிலும் காணப்படாத உடலூட்டப் பொருள்கள் பாலில் உண்டு. பால எவ்வகை உணவுப் பொருளோடும் கலந்து உடலுக்கு ஊட்டத்தை மிகுவிக்கும். மக்கள் பாலை மிகுதியாகவே உட்கொள்ள வேண்டும். குழந்தைகள் ஒரு நாளில் அரைப்படி பால் உண்ண வேண்டும். ஸ்வீடன் நாட்டு மக்கள் நாளொன்றுக்கு ஒருபடி பால் குடிக்கிறார்களாம்.

பால் எலும்பை வளர்க்கிறது; வளர்ச்சி முற்றிய பின் அதைத் ஊறு படாதபடி பாதுகாக்கிறது. பற்கள் சிராய்ப் பட்டுப் போகாதபடி பால் அவற்றிற்கு உரம் கொடுக்கின்றது. பால் குடிநீரன்று; உணவுப் பொருளே. மக்கள் தொகுதிக்குப் பால் இன்றியமையாதது.

சென்ற பெரும் போரில் பாலுக்கு விலை அளவு கடந்து ஏறிவிட்டது. டென்மார்க்கு நாட்டார் தங்கள் பாற்படு பொருள்களையெல்லாம் இரண்டாண்டுக்காலம் ஜெர்மனிக்கு விற்றுவந்தார்கள். அக்காலத்தில் அந்நாட்டு மக்களும் குழந்தைகளும் கட்டியாலும் காசநோயினாலும் பீடிக்கப்பட்டுக் கும்பல் கும்பலாக மாண்டு போயினர். இதனைக் கண்டு அரசியலார் பால் விற்பனையைத் தடுத்துவிடவே மக்கட் சாக்காடு குறைந்துபோய் முன் நிலைக்கு வந்து விட்டது. அப்போதுதான் மேல் நாட்டார் பாலின் அருமையை நன்கறிந்துகொண்டனர்.

---

## 4. பாலின் வகைகளும் குணங்களும்

பாலினைப் பற்றிச் சில பொதுவான செய்திகளை அறிந்தோம். பலவகையான பால்களின் தன்மைகளைப் பற்றி அறிஞர்கள் மக்கட்குத் தெரிவித்திருக்கின்றார்கள். அவைகளை இங்கெடுத்துக் கூறுவோம் :—

1. தாய்ப்பால் :—இது குழவிகட்குத் தனியுணவு ; நோயாளிகள் மருந்துண்ணத் துணைப்பொருளுமாகின்றது. இத் தாய்ப்பால் இன்னும் நோய் தீர்க்கு மருந்துகளிலொன்றுமாகும். இது வெப்ப நோய்கள், வாத பித்த சிலேத்துமக் காய்ச்சல்கள், நாவறட்சி ஆகிய இவைகளை விலக்கி உடலுக்கு உரம் கொடுக்கும். அளவுகடந்து மீறின காய்ச்சல்களுக்குத் தாய்ப்பால் தக்க மருந்தாகின்றது. மக்கள் பிறந்தவுடன் குடிப்பதும், எவ்

வகையுணவும் உட்செல்ல மாட்டாமல் சாகுந் தறுவாயில் மக்கட்கு உட்செலுத்தக் கூடியதும் இத் தாய்ப்பாலே. இத் தாய்ப்பாலைக் கொண்டே தலையில் நீர் ஏறி நோய்ப்படும்போது, மக்கள், கண்ணுக்குக் கலிங்கமும் நெற்றிக்குப் பற்றும் போடுவர். தாய்ப்பால் தூய்மையான உணவு; உண்பதற்கு இனிப்பும்; செரிப்பதற்கு இலேசும்; உடலுக்கு ஒளியும் வலிவும்; உணர்ச்சிக்குக் கிளர்ச்சியுமாம். நோயாளிகளும், நோய்வாய்ப் பட்டவர்களும், கிழத்தன்மையினால் வலிவு குறைந்தவர்களும் இத் தாய்ப்பால் உண்டால் மிக விரைவில் வலுவிலும், ஆண்மைத் தன்மையிலும் வீறு அடைவார்கள். இப் பால் கண் காது நோய்களுக்கு நுண்மருந்தாகும்.

2. பசுப்பால்:—மனிதர் விலங்குகள் ஆகிய இவர்களின் உடல் நலத்துக்கும் வளர்ச்சிக்கும் பசுப்பால் மிக வேண்டப்படுவது. எல்லாப் பால்களினும் மேன்மையானது இது. இது, பிள்ளைகளுக்கு உயிர்; வாலிபர்களுக்கு நலம்; கிழவர்களுக்கு வலிவு. இது, நாவுக்கு இனிப்பானது; நன்மணமுள்ளது; விரைவிற் செரிக்கத்தக்கது; உடல் நீர்களை மீறவொட்டாமற் சரிப்படுத்துவது. மேலும் பசுப்பால் இனிமையும் குளிர்ச்சியும் வாய்ந்த குடிநீராகும். இது மலச்சிக்கல், உடல் மெலிவு, மூலநோய் முதலியவைகளைப் போக்கும். வலிவுதளர்ந்த கிழவர்களுக்கு இது மிக வாய்ப்பானது. பசுப்பால் உடலுக்கு உதவாத உணவுச் சக்கைகளை வெளிப்படுத்திவிடும்; செந்நீர்ச் சுழற்சியைத் திட்டப்படுத்தும். இப் பசுப்பாலின் சிறப்

யைப்பற்றி உணவுப் பொருளாசிரியர் சொல்லுவதாவது :

## பசுப்பாலின் பொதுக் குணம்

*பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணுளி*
*சூலையர் மேகத்தோர் தூர்ப்பலத்தோர்—எலுமிவர்*
*எல்லார்க்கு மாகும் இளைத்தவர்க்குஞ் சாதகமாம்*
*நல்லாய் பசுவின்பால் நாட்டு.*

## பசுப் பாலின் வகைகள்

காராம்பசுப் பால் :—பசுப்பால் பல்வகைப் பால்களிலெல்லாம் சிறந்ததானாற்போல, காராம்பசுவின் பால் பசுப்பால்களெல்லாவற்றினுஞ் சிறந்தது. உண்ணும் பாலுக்காகப் பசுவளர்ப்பவன் சிறிது கூடுதலாக விலை கொடுத்தாயினும் காராம்பசுவையே வாங்கவேண்டும். இஃது உடற்கு வரும் எவ்வகை நோயையும் வரவொட்டாமற் காக்கும்; வெவ்வேறு உடற்கூற்று நீர்களைத் தத்தம் அளவிற்கு மீறவொட்டாமற் செய்யும் ; வாதக் கொடுமையால் உண்டாகும் நோய்களுக்கு வலுத்த மருந்தாகும். மேலும் இப்பாலினால் கண்ணோய், நுரையீரலநோய், செந்நீர்க் கொதிப்பு இவைகள் நீங்கும். இன்னும் மற்றப் பால்களினாலுண்டாகும் குற்றங்களுக்கும் இது மாற்றாகும்.

செந்நிறப் பசுவின்பால்:—இப் பால் காராம்பசுப் பாலுக்கு இரண்டாந்தரமானது. இதுவும் வாதக் கொடுமையைப் போக்கும்; கோழை கட்டும் நோய்களைத் தீர்க்கும். இவை பட்டைப் (கீற்று) பசுக்களாயினும் அவற்றின் பாலும் நல்லதே.

வெள்ளைப் பசுவின் பால் :—கோழை கட்டும் தன்மை யுடையவர்களும், சதைப்பற்றுடைய பேருடல் உடையவர்களும், வெண்பசுவின் பாலை உண்ணல் கூடாது. ஏனெனில் அஃது இந் நோய்களை மேலும் பெருக்கும். இவ் வெள்ளைப் பசு மயிலையா யிருந்தால குற்றமில்லை.

பல்வகைப் பசுக்களின் பால் கலப்பு :— வெவ்வேறு நிற முடையனவும், வெவ்வேறு வயதுடையனவுமான பசுப்பால்களை மக்கள் கலந்துண்டால் அஃது உடல் நலத்தைச் சிறப்பிக்கும். இதனைப் பற்றி உணவுப் பொருள் நூலாசிரியர் சொல்வதாவது :—

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை; மெய்சிவந்த
வன்பசுவின் பால்போக்கும் வாதத்தை;—கண்சிவந்த
காராவின் பால்போக்கும் ஐயம்; கபிலைப்பால்
ஆரமிர்தாம், தோஷ மறுக்கும்.

## பசுப்பாலைப் பற்றிய சில எச்சரிக்கைகள்

1. ஈன்றணிமையில் (கன்றுபோட்ட சில நாட்கள் வரை) பசுப்பால் தூய்மை (சுத்தம்) யுள்ளதாக இராது. அந்தப் பாலில் நச்சுக் காடிப் பொருள்கள் சேர்ந்திருக்கும். ஆகையால்தான் அடுப்பின்மேல் வைத்தவுடன் அது கட்டிப்போய் விடுகின்றது. இதனைச் **சீம்ப்பால்** என்பர். கன்று போட்டு 10-15 நாட்கள் வரையில் இப் பாலை உண்ணக் கூடாது. காய்ச்சிக் கட்டிப் போன இப் பாலைச் சிலர் உண்கிறார்கள். இது நஞ்சையுண்பதுபோ லாகும். மற்ற விலங்குகளின் பாலும் இவ்வாறனதே.

2. கன்றையிழந்த பசுவுக்கும் மக்களைப்போல மன வருத்தமுண்டு. அவ் வருத்தத்தினால் அதன் பாலில் நச்சுப் பூச்சிகள் பிறந்துவிடும். ஆகையால் அத்தகைய பாலையும் சில நாட்கள் அருந்துதல் கூடாது. இதனை நம்மவர்கள் கருத்தில் வைப்பதே யில்லை.

3. எப்போது ஒரு பசு தீனி எடுக்காமல் தண்ணீரும் குடிக்க வில்லையோ, அப்போது அது நோய்ப் பட்டிருக்கிறதென்று கண்டுகொள்ள வேண்டும். அப்போது அப் பசுப்பாலை நாம் உட்கொள்வது நோய்க்கிடங் கொடுத்ததுபோலாகும். தாய் நோயடைந்திருக்கையில் அவள் தன் குழவிக்குப் பாலூட்டமாட்டா ளன்றோ ?

4. பசு சினைப்பட்டுப் போனால் சில திங்கட்குள் அதன் பால் சுவைமாறிப்போய்க் கறக்கும் பாலள வுங் குறையும். அந்தப் பாலையும் அப்போது உண்ணாது விடுதல் நல்லது.

5. உடல் நலத்துக்கும் ஊட்டத்துக்கும் கிழப் பசுவின் பாலைவிட இளம்பசுவின் பாலே மேலானது.

6. நகர மக்கள் கறவைப் பசுக்களை வீட்டிலேயே கட்டி வைத்துக்கொண்டு வைக்கோலும் சிறிது புல்லும் போட்டுக்கொண் டிருக்கிறார்கள். நாட்டுப் புறங்களிலோ பசுக்களை வெளியிடங்களில் ஓட்டிப் புல்லுந் தழையும் மேய வைக்கின்றார்கள். வெளியே போய் மேய்ந்துவரும் பசுவின்பால் வீட்டிற்குள்ளேயே அடைப்பட்டுக் கிடக்கும் பசுவின் பாலைவிட மிகச் சிறந்ததென்று அறிதல் வேண்டும்.

7. புல்லுந் தழையும் மேயும் பசுவின் பாலில் உய்வனவுகள் நிறைந்து கிடக்கும். இவ்வுய்வனவுகள்

மக்கள் உடல் நலத்துக்கும் வலிவுக்கும் மிகச் சிறந்தனவல்லவா! பசுக்கள் வெளியிடங்களுக்குச் சென்று மேயும்போது அவைகளை நடுவெயில் நேரத்தில், மரநிழலில் தங்கியிருக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

---

## ௪. பாலின் வகைகளும் குணங்களும்

(தொடர்ச்சி)

### மற்ற விலங்குகளின் பால்

எருமைப் பால்:—மேல் நாடுகளில் எருமைகளே கிடையா. பசுக்களே அங்குப் பால் தருகின்றன. இந்தியாவிலோ பசுக்களைவிட எருமைகளே மிகுதியாய்க் காணப்படுகின்றன. பசுப்பாலைவிட எருமைப் பால் ஊட்டத்தில் மேன்மைப்பட்டுள்ளது; இப்பாலில் தசை வளர்ச்சிக்குரிய பொருளும் கொழுப்பும் மிகுதியாகவே இருக்கின்றன. ஆகையால் எருமைப் பால் தடிப்புள்ளதாகவும், உடலிற் செரிப்பதற்குக் கடினமாகவும் இருக்கின்றது. இது பசுப்பாலினும் இனிமை யுடையதென்பர் சிலர். இந்நாட்டில் கூலியாட்கள், பயிர் செய்வோர் முதலிய உடலால் உழைப்பவர்கள் எருமைப் பாலையும், அறிவுத்துறையில் உழைப்போர் பசுப்பாலையும் உட்கொள்கின்றனர். எருமைப்பால் வலிவுண்டாக்கத் தக்கதென்பது உண்மையே. இஃது உடற் கட்டுக்களை உறுதிப்படுத்துந் தசை நரம்புகளுக்கு ஊட்டங் கொடுக்கின்றது. இதனாலேயே கோல் விளையாடிகளும் மல்லர்களும் பசுப்பாலினைத் தள்ளி எருமைப் பாலினையே உண்கின்றார்

கள். ஆனால் குழந்தைகளும், பெண்களும், நோயாளிகளும், நோயடைந்து மெலிந்தவர்களும், பருவுடலோரும், சளி பிடித்தவர்களும், அறிவுத் துறையில் உழைப்பவர்களும், கிழவர்களும் எருமைப்பாலை உட்கொள்ளக் கூடாதென்று இந் நாட்டு வைத்தியர்கள் வற்புறுத்திச் சொல்லுகிறார்கள். இப்படி அவர்கள் சொல்வதற்குத் தக்க காரணங்கள் இல்லாமற் போகவில்லை.

வெள்ளாட்டுப் பால்:-வெள்ளாட்டுப்பால் இனிப்பிற் குறைவுபட்டதென்கிறார்கள். ஊன் செய் பொருளும், கொழுப்புப் பொருளும் இப் பாலில் குறைவாக விருக்கின்றதனால், இது பசுப் பாலினைப் போல நல்ல உணவுப் பொருளாகாதென்றுஞ் சொல்லுகின்றனர். ஆதலால் இது விரைவிற் செரிக்கக் கூடியதென்பது சொல்லவேண்டுவதின்று. இஃது உடலிற் சூடுண்டாக்கத் தக்கது ; இதனால் வாயு நோய்கள் கொடுமையிற் குறைவு படும். இரைப்பு, குளிர்மை, நீரிழிவு, உள்மேலுறு புண்கள் ஆகிய இவைகளை இவ் வெள்ளாட்டுப் பால் போக்கிவிடும். மருந்துண்ணும் நோயாளிகளுக்கு இப் பால் சிறந்த பத்தியப் பொருளாகும். மிகச் சூட்டினால் நீர் மஞ்சள் நிறப்பட்டு அடை படும்போது மக்கள் இப் பாலை உண்டால் விரைவில் நலமடைவார்கள். மேலும், இது மேக வெட்டை, சீதபேதி, வயிற்றுப்போக்கு, மூலநோய், பித்தக் காய்ச்சல், இருமல், ஈளைநோய் ஆகிய இவைகளைக் குணப்படுத்தத் தக்கது.

செம்மறியாட்டுப் பால் :—செம்மறியாட்டுப் பால் உவர்ப்புக் காட்டும். இப் பாலின் மணம் அருவருக்

கத்தக்கது. ஆனாலும் இது கொழுப்புப் பொருள் நிறைந்துள்ளது; உடலுக்கு வலிவு கொடுக்கும். நீரிழிவையும், வயிறு மூத்திரப்பைகளிலுண்டாகும் சில நோய்களையும் சிறிது நீக்கும். எனினும் இதனால் வாயுநோய் பெருகும்; குளிர்மை யுண்டாகும்; பத்தியத்துக்காகாது.

கழுதைப் பால்:—கழுதைப்பால் மக்கள் உடலுக்கு வெப்பத்தைத் தணித்துக் குளிர்மை (சிலேத்துமம்)யைத் தடுத்துக் குளிர்ச்சியைக் கொடுக்கக் கூடிய தென்பது மேல் கீழ் நாடுகளின் வைத்திய நிபுணர்களுக்கெல்லாம் ஒப்ப முடிந்த கொள்கையாகும். மேல்நாட்டு மருத்துவமணி யொருவர் ஈளைநோய்களுக்குக் கழுதைப்பாலே வேண்டிய வரைக்குங் கொடுக்கவேண்டு மென்கின்றார். நம் நாட்டிலுள்ள கைதேர்ந்த வைத்தியர்களும் நுரையீரல் நோய்களுக்குக் கழுதைப்பால் மிகவும் அடுத்ததென்கின்றார்கள். இன்னும் இப் பால் வாயு நோய்கள், கரப்பான், மேகப்புண்கள், கல்லடைப்பு, பிழ்மேகம், சொறிசிரங்கு, [1]படர்தாமரை, உள் மேல் கட்டிகள், பைத்தியம் ஆகிய இவைகளை யெல்லாம் அறவே கண்டிக் தொழித்துவிடும்.

நாடோடிகளாகிய குருவிக்காரர்கள், குடுகுடுப்பைக்காரர்கள், குறவர்கள் தங்களுக்கு வேண்டிய துணைப்பொருள்களை யெல்லாம் சுமந்து இடத்துக்கிடம் கொண்டுபோகக் கழுதைகளைக் கூடவே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவைகளின் பாலை அம் மக்கள் அவ்வப்போது அருந்துகின்றார்கள். தங்களுக்கு ஈளை நோய்களை வருகிறதில்லை

1. Ringworm.

யென்று அவர்களே சொல்லுகிறார்களாம். இக் கழுதைப்பால் மிகத் தித்திப்புள்ளதுமாகும். கழுதைப்பாலும் தாய்ப்பாலுக்கு அடுத்தது என்னலாம்.

குதிரைப் பால் :—குதிரைப்பால் கழுதைப்பால் போலவே உடலுக்குக் குளிர்ச்சி தரத்தக்கது. இக் குதிரைப்பாலைக் கழுதைப்பாலுக்குச் சமமாகக் கொள்ளலாம். இப் பாலில் தித்திப்பில்லை; கொழுப்பும் இல்லை. நோயாளிகட்கு இதுவும் அடுக்கத்தே. குதிரைப்பாலைக் குடித்தால் அழகும் வலிவும் உண்டாகும்.

ஒட்டகப் பால்:—ஒட்டகப்பாலில் உவர்ப்புண்டு, கொழுப்பில்லை. இதனைப்பற்றி மேல்நாட்டார் சொல்வதென்னவென்றால் :—ஒட்டகம் கண்டபடியெல்லாம் பலவகையாகிய புல் தழைகளை மேய்கிறபடியால் அதன் பால் சில நோய்களைத் தீர்க்கத்தக்கது : அவையாவன :—மேல்தோல் நோய்கள், வயிற்றுப் பூச்சிகள், இருமல், மார்ச்சளி, வயிற்றுப் புண்கள் என்பனவாம். ஆனால் இவ்வொட்டகப்பாலைப்பற்றி நமது உண்பொருள் நூலாசிரியர் சொல்வதாவது :—மந்தம், வாதம், சூலை, கரப்பான், காந்தரச்சல், மந்தமதி, ஈளை, பெருமூர்ச்சு ஆகிய இந் நோய்களெல்லாம் ஒட்டகப் பாலினால் உண்டாகுமென்கின்றார். இதனைப்பற்றி மக்கள் ஆராய்ந்து சிந்தித்துக் கேட்டறிந்து கொள்வார்களாக.

யானைப் பால் :—மிகவும் உடலுக்கு ஊட்டங் கொடுக்கத் தக்க பொருள்கள் யானைப்பாலில்

இருக்கின்றதனால் இந்த இலேசில் செரிக்கக் கூடியதன்று. இந்த உடலுக்கு மிக்க உரமும், உணர்ச்சிக்கு மிக்கவளர்ச்சியும் கொடுக்கக் கூடியது. தேனும் பாலுங் கலந்தது போன்ற இனிப்பு யானைப்பாலுக்குண்டு. இது கண்ணின் நோய் போக்கி முகத்துக்கு அழகு கொடுக்கும். பன்மணங் கொள்ளும் அரசர்கள் பெருஞ் செலவையுஞ் சட்டை செய்யாமல் பல யானைகளை வைத்து வளர்த்துக் காத்து அவற்றின் பாலை அடிக்கடி அருந்துவார்களாம்.

மேற்கூறிய விலங்குகளின் பாலேயல்லாமல் இன்னும் சிங்கம், மான், நாய், பூனை முதலாகிய விலங்குகளிடமும் பாலுண்டல்லவா? அப் பால்கள் இலேசில் கிடைக்கக் கூடியவைகளுமன்று, அவற்றை விருப்பத்தோடு உட்கொள்ளும் மக்களுமிலர். ஆகையால் அவ் விலங்குகளின் பாலின் உள்ள குணகுணங்களை எடுத்துச் சொல்வாரும் இலராயினர் போலும்.

---

## ரு. பாலின் வகைகளும் குணங்களும்
## (தொடர்ச்சி)

### மரப்பால் வகைகள்

தேங்காய்ப் பால் :—தேங்காய்ப் பால் நாவுக்கு மிக்க இனிமை கொடுத்தலால் அது சேர்த்த உணவை மக்கள் ஆசையோடு உண்கின்றனர். தேங்காய்ப் பாலால் உடல் மிக வலுக்கும்; வாய்ப்புண் குடற்புண் இவைகளைப் போக்கும். ஆயினும் அது வாத பித்தங்களை எழுப்பும்; கரப்

பான் படரச் செய்யும். தேங்காய்ப்பா லுண்ணும் மக்கள் அதனாலுண்டாகும் இப்படிப்பட்ட நோய் கட்கு மாற்றுந் தேடிக்கொள்ள வேண்டும்.

ஆலம் பால் :—ஆலம் பால் மேக நோய்களுக்கு மிக நல்லது. ஆடும் பற்களை இறுக்கிக் கட்டி விடும். மூளையழற்சியைத் தணிக்கும். உடலுக்கு வலிவும் கொடுக்கும்; தோலிற் பட்டால் புண்ணு கும்.

அத்திப் பால் :—அத்திப் பால் பித்தம், நீரிழிவு, சூலை, செந்நீர்மூத்திரம் ஆகிய இந் நோய்களைப் போக்கும்.

பேயத்திப் பால்:—பேயத்திப் பால் கால்வெடிப்பு, மேகப்படை, பெருநோய் தடிப்பு, மூளைப்புண் ஆகிய இந்நோய்களை நீக்கும்.

பிராயன் பால் :—பிராயன் பால் பல்வலியை ஓட்டிவிடும்.

புங்கம் பால்:—புங்கம் பால் புண்ணைற்றும்; வாயு வைக் கெடுக்கும்; உடம்பொளி கொடுக்கும்.

சங்கம் பால்:—சங்கம் பால் நீரேறிய வீக்கத்தை யும், காய்ச்சல் வேகத்தையும் ஒடுங்கச் செய்யும்.

கள்ளிப் பால் :—கள்ளிப் பால் கைகால் பிடிப்பு, மேகப்புண், பெருநோய், குளிர்மை, உடற் பூச்சி கள் ஆகிய இவைகளை ஒழிக்கும்.

சதுரக்கள்ளிப் பால் :—சதுரக் கள்ளிப் பால் பெருநோய், கடுஞ்சூலை, வாதநோய்கள், உடல் வெட்டை, புழுநெளியும் புண்கள், கரப்பான் இவைகளைத் தீர்த்துவிடும்.

இலைக்கள்ளிப் பால் :—இலைக் கள்ளிப் பாலால் செங்கரப்பான், காது நோய்கள், பெருஞ்சூலை, உள் மேற் புண்கள் ஆகிய இந்நோய்கள் இல்லாமற் போய்விடும்.

கோடிக்கள்ளிப் பால் :—கொடிக்கள்ளிப் பால் கரப்பான், சொறிசிரங்கு, பெருநோய்ப்புண், பூச்சிக்கடி, குன்மநோய் ஆகிய இந்நோய்களைத் தீர்க்கும்.

எருக்கம் பால் :—எருக்கம் பால் வாயுக் கட்டிகளைக் கரைக்கும்; வாதநோய், மீறின காய்ச்சல், வலிநோய்கள் ஆகிய இவைகளையும் போக்கும். சில மருந்துகள் செய்யத் துணைக்கருவியுமாகும்.

வெள்ளெருக்கம் பால்:-வெள்ளெருக்கம் பாலால் பலவகை வலிநோய்களும், மீறின வாதக் காய்ச்சல்களும், குளிர் காய்ச்சலும் தீர்ந்துவிடும். மேலும் இப் பால சுளுக்கை நீக்கும்; எலிக்கடியால் நேர்ந்த நச்சுத் தன்மையையும் போக்கிவிடும்.

காட்டாமணக்கம் பால்:—காட்டாமணக்கம் பால் வெண்மேக நீரையும், குன்மநோய், குறிப் புண், மேற்மேறல் கட்டிகள் ஆகிய இவைகளையும் இடந்தெரியாமல் ஓட்டி விடும்.

சிற்றாமணக்கம் பால் :-சிற்றாமணக்கம்பால் எலிக்கடி நஞ்சு, குறிவீக்கம், வண்டுக்கடி, வயிற்றுவலி, குன்மம் இவைகளை நீக்கும்; சிறிது வயிற்றுப் போக்குண்டாம்.

பிரமதண்டிப் பால் :-பிரமதண்டிப் பாலால் கண் கூசல், கண்ணருகல், கண்ணீர்வடிதல், கண் சிவத்

தல் ஆகிய கண்ணில் உண்டாகும் எல்லா நோய்களும் ஏகிவிடுமென்பது திண்ணம்.

மேற்போந்த மூன்று பகுதிகளிலும் விலங்குப் பால், மரஞ்செடி கொடிகளின்பால் ஆகிய இவைகளின் தன்மைகளைப்பற்றியும், அவை மனிதர்க்கு உணவாகவோ, மருந்துகளாகவோ எவ்வாறு ஆகின்றன என்பதைப்பற்றியும் ஒருவாறு சொல்லி வந்தோம்: மரஞ் செடி கொடிகளின் பால் எல்லாமே நோய் தீர்க்கும் மருந்துகளாகின்றன என்பதையும் கண்டோம். ஆகவே உணவுக்கும் மருந்துக்கும் ஆகும் விலங்குப் பால்களையும், மருந்துக்காகும் விலங்குப் பால்களையும், மரஞ்செடி கொடிகளின் பால்களையும் கொண்டே மக்கள் உடலுக்கு உரந் தேடிக்கொள்ளலாம் என்பதும், அவ்வுடலுக்கு நேரும் எவ்வகை நோய்களையும் தீர்த்துக் கொள்ளலாமென்பதும் நமக்குத் தெளிவாய் ஏற்படக் கூடியனவாம்.

**இரப்பர் மரப் பால்:-** இம்மரம் பசிபிக் கடல் தீவுகளிலும், அக் கடற்கரையை யடுத்த நாடுகளிலும் பயிராகின்றது. இம் மரப் பால் கட்டிப்போய்விட்டால் இழுத்தால் நீளும், உடனே முன்னளவுக்கு வந்துவிடும். இதனைக் காகிதத்தின் மேல் எழுதிய, எழுத்தைத் துடைத்துவிடப் பயன்படுத்துகிறார்கள். இதனால் தாள், தப்பட்டிகள் போன்ற பொருள்கள் செய்து அவற்றைப் பற்பல வேலைகளுக்குப் பயன்படுத்துகிறார்கள். இதனை வேண்டிய வளவு மெல்லியதாகவும் கனமாகவும் செய்து கொள்ளளலாம். இதனை மிதி வண்டிகள், உந்து

வண்டிகள், குதிரை மாட்டு வண்டிகள் முதலியவைகளின் உருளைக்கட்டுகளாகப் பயன்படுத்துகிறார்கள். இரப்பர் சக்கரத்துக்குள்ளிருக்கும் காற்றுக்குழாய்கள் இப் பாலினாலானவைகளே. இதன் உதவியின்றி அவ் வண்டிகளுக்கு விரைவு ஓட்டம் கூடாது. தற்காலப் போரில் இப் பாலினால் படகுகள் செய்து அவைகளைப் பெருங் கால்வாய்களின் குறுக்கிலிட்டு நீரைத் தாண்டி விடுகிறார்கள். இதனாலேயே பாதைகளும் போட்டுக் கொள்ளுகிறார்கள். இன்னும் பொம்மைகள் முதலிய விளையாட்டுப் பொருள்களும் இதனாலேயே செய்யப்படுகின்றன. இப் பாலின் தாள்களில் நீர் சுவறாது. ஆகையின் இது மழைக்காலப் போர்வைகளாகவும் பயன்படுகின்றது. சுருக்கமாகச் சொல்லுமிடத்து இதனால் உலகத்தின் நாகரிக வளர்ச்சியில் மக்கள் பெரிய பெரிய நன்மைகள் அடையக்கூடுமென்னலாம்.

---

## சு. பசுப்பா லுணவு

பாலர் கிழவர் எல்லார்க்கும் ஆகும்—ப சி.

பல்வகைப் பால்களில் பசுப்பால் எவ்வகையிலும் சிறந்தது என்பது உலகமறிந்த உண்மையாகும். இப் பகுதியில் பசுப் பாலே தனியுணவாகும் என்பதைப்பற்றி மக்கள் நேரில் தம் [1]பழக்கத்தினாற் கண்டறிந்த செய்திகளைப் பற்றிக் கூறுவோம்.

---

1. Experience.

உடற் கூறுகளை நன்கறிந்து, அவைகளின் சிறப்பான செய்திகளைப் பற்றிப் பற்பல நூல்களும் எழுதியுள்ள ஒரு பெரியார் சொல்வன :—

"ஒரு நகரில் இரண்டு ஆண் குழந்தைகளும், ஒரு பெண் குழந்தையுங் கொண்ட ஒரு குடும்பம் இருந்தது. இரண்டொரு ஆண்டுகளுக்குள்ளேயே குழந்தைகள் சோறு கறிகள் தின்னுமல்லவா? அக் குழந்தைகள் பிறந்தது முதல் ஆறாண்டுக்காலம் பசுப்பாலுணவே உண்டு வளர்ந்தன. அவைகட்கு ஒரு குறைவும் நேர்ந்ததில்லை. அவைகள் மற்றக் குழந்தைகளைவிட நன்றாய்ப் பருத்துயர்ந்து வளர்ந்து, பார்ப்பதற்கு மிக அழகாகவும் இருந்தன. காய்ச்சலாவது, மலச்சிக்கலாவது, தலைநோய், வயிற்றுவலி, மூக்கொழுக்கு முதலிய நோய்களாவது அவைகட்கு வந்ததே கிடையாது.

"ஒரு பள்ளிக்கூடத்தில் பிள்ளையாண்டான் ஒருவன் இருந்தான். பசுப்பால் மிகச் சிறந்த உணவென்றும், அதற்கு மேலான உணவுப் பொருள் வேறொன்றுமில்லை யென்றும், பசுப்பால் உட்கொண்டால் படிப்பில் மற்றப் பிள்ளைகளுக்கு மேலாகலா மென்றும் அவனுக்கு எப் பெரியார் சொன்னாரோ தெரியாது. அவன் அவ்வறிவுரையையே மேற்கொண்டு, கலாசாலைக் கல்வி முடிவடையும் வரை மற்ற உணவுகளையெல்லாம் அறவே தள்ளிப் பாலினையே உணவாக உட்கொண்டு வந்தான். அப் பெரியார் சொல் சிறிதளவும் தவறவில்லை. அப் பிள்ளையாண்டான் ஆண்டாண்டுதோறும் கலாசாலைத் தேர்வு

(பரீட்சை)களிலெல்லாம் முதன்மையாக நின்று, [1]கல்விக் கழகத் தேர்வுகளிலும் தவருமல் முதற் கண்ணேயே நின்ருன். மற்றப் பிள்ளைகளுக்கெல் லாம் மேலே தான் நிற்க வேண்டுமென்றும், கல்விக் கழகத் தேர்வுகளில முதன்மைப் பட்டங்கள் பெற வேண்டுமென்றும் அவன் ஏற்கெனவே கொண்டி ருந்த பேராவல் பசுப்பா லுணவாலன்றே நிறை வேறியது !

"பாஞ்சால நாட்டிலே சிற்றூரிலே ஒரு மனிதன் இருந்தான். அவனை ஒரு நாள் நான் பார்க்க நேர்ந்தது. அவன் ஐந்தே முக்கா லடிக்கு உயர்ந்த வீமன் என்று சொல்லத்தக்க உடற்கட்டு முள்ளவன். அவன் பாலுணவையே உட்கொண்டு உயிர் வாழ்பவன் என்று அவனுடன் வந்தவர் எனக்குத் தெரிவித்தார். அதனைப்பற்றி அவனை யான் கேட்டதற்கு அவன் என்ன சொன்ன னென்ருல் :—

"எங்கள் குடும்பத்தில் உணவுக்குக் குறைவில்லை. எங்கட்கு நான்கு எருமைகளும் மூன்று பசுக் களும் உண்டு. இரண்டாண்டுகட்கு முன்பு என் பெற்ருேர் என்னைத் தனியே விட்டுவிட்டுப் புண் ணிய நீராட (ஸ்தலயாத்திரைக்கு)ப் போய்விட்ட னர். அப்போது பயிர் பச்சைகளையும், மாடுகளை யும் யானே பார்த்துக்கொண்டிருக்க நேர்ந்தது. எனக்கு அடுப்பு மூட்டி அட்டுண்ண (சோருக்க)த் தெரியாது ; அவ்வூரில் [2]உணவு விடுதிகளும் கிடையா. ஆகையால எனக்கு வேறு வழியின்றிப்

---

1. University.
2. Hotel.

பாலையே குடித்துக்கொண் டிருக்க நேர்ந்துவிட்டது. என் பெற்றோர் திரும்பி வருவதற்கு ஒரு மாத காலம் ஆயிற்று. அந் நாட்களில் பாலுணவே தவிர வேறொன்றும் யான் கொண்டதில்லை. அப் பாலுணவு எனக்குப் போதுமானதாகியும், உடல் நலத்துக்குக் குறைவில்லாததாகியும் இருந்தபடியால் அதுமுதல் யான் பாலுணவே எடுத்துக் கொண்டு வருகின்றேன். இப்போது எனக்கு உடல் நலமும் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டு வருகின்றது; மனவூக்கமும் திடங்கொண்டு வருகின்றது" என்றான்.

நீங்கள் கண்ணால் கண்டு வருகின்ற செய்தியொன்று கேளுங்கள்:—சில துறவி (சாமியார்)கள் பாலும் பழமுமே உட்கொண்டு வருகின்றார்கள்; மற்றுஞ் சிலர் பழத்தையுந் தள்ளிப் பால் மாத்திரமே கொள்கின்றனர். அவர்கள் உடல் வன்மையிலும் மனவன்மையிலும் குறைவுபட்டிருக்கின்றார்களா? இல்லை, இல்லை. இப்படித் துறவிகள் பழக்கப்படுத்திப் பாலே உணவாகக் கொண்டு உடல் நலத்தோடு உயிர்வாழ்ந் திருப்பதனால் அவர்கட்கு ஒரு பெருமையுமில்லை; அதனைப்பற்றி நாம் மலைக்கவேண்டியதுமில்லை. இது பாலில் உள்ள சிறந்த தன்மையினாலாகின்றதே யொழிய மக்களா லொன்றுமில்லை. அதனை அவர்கள் பழக்கத்திற்குக் கொண்டுவர வேண்டிய தொன்றுதான்.

"அமெரிக்க நாட்டு மருத்துவர் ஒருவர் தம்மிடம் ஒரு நோயாளி பதினெட்டுத் திங்கள் பாற் பத்தியத்திலேயே இருந்தானென்றும், அதனால்

அவனுக்கு ஒரு குறைபாடும் நேர்ந்ததில்லை யென்றும், நோய் நீர்ந்து உடலுறுதியு முள்ளவனுனென்றும் சொல்லுகிறார்.

ஆங்கில நாட்டின்கண் ணுள்ள கிராய்டன் என்னும் நகரில் இரண்டு நூற்றுண்டுகட்கு முன்னிருந்த [1]டெயிலர் என்னும் வைத்தியரொருவர், தமக்குக் காக்கைவலி என்னும் நோய் கண்டு எம்மருந்தினுலும் ஒழியாமல் இரண்டாண்டுக் காலம் பாற்பத்தியமே கொள்ள அந் நோய் அற்றுப் போய்ப் பிறகு பத்தாண்டு வரைப் பாலே உணவாகக் கொண்டு தாம் உயிர்வாழ்ந்ததாகச் சான்று பகர்ந்துள்ளார்"

பாலுணவு ஒன்றினுலேயே ஒருவன் உடல்நலத்தோடு உயிர்வாழ்தல் முடியாது என்று எண்ணுபவர்களெல்லாம் இக் காட்டு (உதாரணம்) களைப் பசுமரத்தாணிபோல் தம் மனத்திற் பதித்துக் கொள்வார்களாக. மற்ற உணவுகளெல்லாமின்றிப் பாலுணவே கொள்பவன் பிறரைக்காட்டிலும் மேம்பட்ட உடல்நலங் கொண்டு வேலைகளையும் மிக ஊக்கத்தோடு செய்வானென்பது திண்ணம். தட்டுத் தட்டாகச் சோறு கறிகளைத் தின்றால்தான் உடலவலிவோடிருக்கலாம் என்னும் எண்ணத்தை நாம் அடியோடு போக்கிவிடவேண்டும். சோறு கறிகளிலுள்ளனவெல்லாம் அப்படியே உடலோடு ஒட்டிக்கொள்கின்றன வென்று எண்ணுவது மிகத் தவறு. ஆனல் பாலிலோ உடலோடு உடலாகச் சேர்ந்து கொள்ளாதது அதன் நீர்ப்

---

1. Taylor.

பகுதியே. அதுவும் உடலுக்குக் குடிநீர் செய்யும் வேலைகளைத்தான் செய்து முடிக்கின்றது.

"மேல் நாட்டில் குடும்பி ஒருவர் இருந்தார். அவர் இரண்டாவதாண்டில் தெரியாமல் [1] நச்சு மருந்து நீர் ஒன்றினை உட்கொண்டுவிட்டார். அதனால் அவர்தம் உடலின் உணவுக்குழாய் மிகச் சுருக்கமடைந்து போய்விடவே, அவரால் சோறு கறிகள் விழுங்க முடியவில்லை. என் செய்வார்! அவர் அதுமுதல் பாலினையே உணவாகக் கொள்ளவேண்டியதாயிற்று. அவர் வேளைக்கு முக்காற்படி பாலினையே அருந்திக்கொண்டு வந்தார். அவர் அவ்வாறே ஐம்பது ஆண்டுகள் உயிரோடிருந்தார். இந்நாட்களிலெல்லாம் அவருக்கு ஒரு நோயும் வந்ததே கிடையாது. அவர் உடல் நலத்துக்கும் உடலுரத்துக்கும் குறைவு நேர்ந்ததில்லை. அவருக்கு உடல் வலுவில் குறைவுபடாத நான்கு பிள்ளைகளும் இருந்தனர். உடலுக்கு வேண்டுவனவெல்லாம் பாலில் உண்டென்று இதனாலுந் தெரிகின்றதல்லவா! ஆகையால் உடலுக்கு வேண்டிய அளவாகப் பாலினை உட்கொள்ள வேண்டுமே தவிர அதனில் உணவுப் பொருள்களில்லையென்று சொல்வதற்கில்லை."

பாலினையே உணவாகக் கொண்டிருக்க மனவுறுதி ஏற்படாதவர்கள் முதன்முதல் ஒவ்வொரு வேளையிலும் மற்ற உணவுகளைத் தக்கபடி குறைத்துக்கொண்டு பாலினையும் ஓர் உணவாகச் சேர்த்துக்கொண்டு வரலாம். பிறகு ஒருநாளையில் ஒரு வேளை பாலுணவே கொண்டிருக்கலாம். அதன்

1. Lye.

பிறகு ஒன்றுவிட் டொருநாள் பாலேயே உட் கொண்டுவரலாம். இவ்வாறில்லா விட்டாலும் அவ்வப்போது ஒருநாள் முழுதும் பாற்பத்திய மாகவே இருக்கலாம். இவ்வாறெல்லாம் ஏன் சொல்லுகிறோமென்றால், எந்தவகையிலாவது பால் மிகுதியாக உடலுக்குட் செலலவேண்டுவது இன்றி யமையாததென்று கருதியே. பாலொன்றி னாலேயே மக்கள் நோயற்றுத் திடமுமுற்று உயிர் வாழலாமென்று கண்டபோது அதனிடம் உட லுக்கு வேண்டிய ஊட்டப் பொருள்களும், நோயணுகாதிருக்கச் செய்யுந் தன்மையும் உண் டென்று உள்ளங்கை நெல்லிக் கனிபோல் கண்டு கொள்ளலாமன்றோ! ஒருவன் தனிப்பாலுணவே கொள்ள விரும்புவானாகில் சிறிதளவும் மனத்தில் கவலை வைத்துக் கொள்ளாமல் அவன் தன் எண் ணத்தை நிறைவேற்றிக் கொள்ளத் திண்ணிய கருத்து அவனுக்குண்டாக வேண்டுமென்றே இவ் வளவும் யாம் சொல்லப் புகுந்தது.

தனிப்பாலுணவினால் ஒருவன், வேண்டிய உடல் திண்மை பெறலாம். சிறந்த அறிவுச் செயல் களும் ஆற்றலாம். சுறுசுறுப்பாகவும் இருக்கலாம். மற்ற உணவுகள் கொள்பவர்க்கு மேலாகவே கொடு வெயிலேயும் தாங்கலாம்; கடுமழையையும் சட்டை செய்யாமல உழலலாம். ஆண்டெல்லாம் குளிரே கொண்ட வடகோடிநாட்டில் உள்ள எஸ்கிமோக் களைப் போன்ற மக்களெல்லாம் தனியுணவாகக் கொள்ளும் பத்துப்பலம் திமிங்கில மீன் கொழுப் பில் எவ்வளவு உடலுக்கு வேண்டிய பொருள்கள்

உளவோ அவ்வளவும், ஒரு படி பசுப்பாலில் உண்டு என்பதனை யறிய, நமக்கு மன எழுச்சியும் மகிழ்ச்சியும் உண்டாகின்றன பாருங்கள்!

---

## எ. பசுப்பால் மருந்து

"பாலும் நெய்யும் உணலுற்ருர்
பாரிற் கொடிய பிணியற்ருர்"

"அமுத மதுரப் பால்"

—சேக்கிழார்.

பசுப்பால் மக்கட்கு உணவாவது மல்லாமல் மருந்துமாகுமென்று சொன்னோம். அஃது உணவா வதைப் பற்றி மேற்பகுதியில் விளக்கினோம்; மருந் தாவதைப் பற்றி இப் பகுதியில் விவரிப்போம். இஃதும் அப் பெரியார் வாக்கின் கருத்துக்கள் அடங்கியதே.

பாலைக் கொடுத்து நோயைப் போக்கு — என்பது பழங்காலத்து வைத்தியர்களின் வாக்கு. இக்காலத்தில் இந்நாட்டு வைத்தியர்களும் அவ்வாறே நோயாளிகளுக்குப் பாற்பத்தியம் வைக்கின்றதனை நாம் காண்கின்றோம். அரபிநாட்டின் மருத்துவர்கள் நோயாளிகட்குப் பாற்பத்தியம் வைப்பதேயன்றி, மோரினையும் ஒரு பத்தியப் பொருளாகப் புகழ்ந்து பேசுகின்றனர். ஜெர்மானியப் பெருமருத்துவர்களும் பாற்பத்தியத்தையே சிறப்பாகக் கையாளுகின்றனர். இவர்களில் ஒருவராகிய பாயர் என்பவர், "சில நோய்கள் மற்றெதனுலு மன்றித் திட்டமான பாற் சிகிச்சையினாலேயே குணப்பட்டு விடுகின்றன வென்பது மறுக்கொ

ளுதகொன்று" என்கின்றார். இது போன்றே பற்பல மேனாட்டு வைத்தியர்கள் பாற்பத்தியம் வைத்து ஆயிரக்கணக்கான வெவ்வேறு நோய் வாய்ப்பட்டவர்களைக் குணப்படுத்தியிருக்கின்றார் களென்பது ஒரு வியப்பான செய்தியே. எல்லா நோய்களுமே திட்டமான பாற்பத்தியத்தினாலேயே தீர்ந்துவிடுமென்பதனை இதனாலறிகின்றோம்.

இப் பாற் பத்தியத்தினால் தீர்ந்துவிடும் சில தொந்தரைக் கிடமான நோய்களாவன:—

1. வயிற்றில் உண்டாகிற செரிப்புக் குற்றங்கள் யாதொரு விலக்கு மில்லாமல் எல்லாமுமே.
2. ஈரற்குலை மந்தம், வயிற்றுக்கடுப்பு, குடல் வயிற்றுப் புண்கள், வயிறு உப்பல்.
3. முகப்பரு, தலைச்சுண்டு, சொறிசிரங்கு, பெருங் கட்டிகள் முதலிய மேற்றோல் நோய்கள்.
4. நாடிக்கொதிப்பு, நாடிச்சோர்வு, தூக்கமின்மை, தலைநோய் முதலிய நரம்பு நோய்கள்.
5. தொண்டைக்கட்டு, இரைப்பு, காசம், குடிநோய் கள்.
6. நீரிழிவு, சீதபேதி.
7. கைகால் பிடிப்பு, இடுப்புவலி.
8. பெண்களுக் குரிய நோய்கள், மேகநோய்கள் யாவும்.
9. நச்சுப்பூச்சிகள் செந்நீரிற் கலந்துண்டாகும் நோய் கள். இன்னும் பாலுணவினால் நீங்கும் நோய்கள் பழக்கத்தினால் உங்கட்கே தெரியவரும்.

பாலுக் குள்ள இச் சிறப்பெல்லாம் அதன்கண் காணப்படும் வெள்ளணுக்களா லென்றறிக. உடலில் சிறிதளவு வலிவு குறைபட்டிருப்பதாகத்

தென்பட்டால் உடனே பாலினை மிக உண்ணுங்கள். முட்டை முழு உணவு என்கின்றார்கள்; ஆனால் அது பாலைப்போல் அவ்வளவு வலிவு கொடுப்பதன்று; நோய்களைத் தீர்ப்பதுவுமன்று. நோயணுக வொட்டாமல் உடலைக் காக்கும் பொருள் பால்.

பிறந்தநாள் முதற்கொண்டு ஒல்லியாகவே இருப்பவர்களும் நோய்வாய்ப்பட்டு எலும்புந் தோலுமானவர்களும் இப் பாற்பத்தியங் கொண்டால், இலேசாகச் செரிக்கும் பாலின் தன்மையினால் தசை நரம்புகளுக்கெல்லாம் வலிவேறி வர வரச் சில மாதங்களுக்குள்ளாகவே போதுமான உடலெடையுள்ளவர்களுமாகிறார்கள். இம் முறையால் அவைசநார்கள் வலுத்து உடலழகும் முக வொளியுமுண்டாகின்றன. இப் பாற்பத்தியத்துடன் அவர்கள் உடற்பயிற்சியும் எடுத்துக் கொள்வார்களானால் அது மிக விரைவில் நற்பயனளித்து நம்மைத் திடுக்கிடச் செய்யும். நூற்றுக்கு எண்பத்தேழு பங்கு நீரே கொண்ட இப் பசும்பாலுக்கு இவ்வளவு உடலூட்டங் கொடுக்கத்தக்க வன்மை ஏது என்று நீங்கள் ஐயப்படலாம்! ஆனால் பாற்பத்தியங் கொள்பவன் அரைமணி நேரத்துக் கொருதரம் உழக்குழக்குப் பால் உட்கொள்கின்றான் என்பதை நீங்கள் அறிந்தால் உங்கள் ஐயம் ஒழிந்துபோய் விடும். மெல்லர் என்னும் மேனாட்டுப் பெரியார் ஒருவர் பாலின் மருந்துக் குணத்தைத் தாமே நுகர்ந்து அதன் பயனைத் தெரிவிக்கின்றார் :

"என்னுடைய அறிவில்லாப் பழக்கத்தினால் என் உடல்நலங் கெட்டு, வலியற்றுப் போய்விட்

டது. எந்த மருந்து சாப்பிட்டும் எனது உடல்நிலை மாறவேயில்லை. நான் கெட்டே போயினேன் என்று எண்ணிவிட்டேன். இப்படியிருக்கும்போது, யாவருக்கும் நலம் என்ற தலைப்புக் கொண்ட ஒரு மருத்துவச்சாலை விளம்பரம் ஒன்றினைக் கண்டேன். கண்டதும் நான் அவ்விடத்துக்குச் சென்றேன். அப்போது எனது உடல்நிலை எப்படி இருந்த தென்றால்:—உணவிறங்கம் இல்லை; சிறிது உணவு வேண்டாமல் எடுத்துக்கொண்டால் மந்தமும் மலச் சிக்கலும் காணும்; செந்நீரும், தசையும் வற்றிப் போய்ப் பேச்சுக்கும் வலியற்றுப் போய் விட்டது. உடலெடையும் நேரத்துக்கு நேரம் குறைந்துகொண்டே வந்தது.

"அங்கே போன முதல் நாள் பழச்சாற்றோடேயே நின்றேன். மறுநாள் சிறிது பசுப்பால் கொண்டேன். இப்படியே இருபதுநாள் சிறிது சிறிதாகப் பசுப்பாலை உண்டுவந்தேன்; பால் நாளுக்குநாள் சிறிது சிறிது மிகுதியாகவே கொடுக்கப்பட்டது. இப்போது நான் நாள் ஒன்றுக்கு இரண்டரைப் படி பால் சாப்பிட்டுச் செரித்துக் கொள்ளத் தக்கவனுமேனன். பிறகு நாலுநாள் ஒருணவுங் கொள்ளாமலே இருந்தேன். அப்போது எனது உடல் வலுவெல்லாம் போய்விட்டது. ஆனல் எனது வயிறு தூய்மையடைய, செந்நீரைக் கெடுத்துக்கொண்டிருந்த நச்சுப் பொருள்கள் யாவும் ஒழிந்தன.

"எனது பட்டினிப் பொழுதின் பின்பு மறுபடியும் சிறிது சிறிதாகப் பாலுணவு கொள்ளத் துவங்கினேன். வரவர முன்னளவே பாலினைக் கொள்ள

வயிறு இடங்கொடுத்தது. நாளேற ஏறப் பாலுணவுக்காரன் ஒருவன் நாளொன்றுக்கு உட்கொள்ள வேண்டிய மூன்று படிப் பாலையும் உண்ணத் தொடங்கினேன். இப்போது நாளுக்கு நாள் எனது உடலில் உரமேறத் தொடங்கி மூன்று மாதங்களுக்குள் எடையும் மிகுந்து, அள்திட்டத்துக்கு வந்துவிட்டேன். இந்த ஒரு புதுமையான போதிலும், அறிவியல் வழியில் தேர்ந்த மக்களால் ஆக்கக்கூடிய தொன்றே. இவ்வாறாகவே எவருஞ் செய்யலாம். இப் பசும்பாற் சிகிச்சை தவிர மற்றெதுவும் இவ்வளவு விரைவில் என்னைக் குணப்படுத்தியிராது—யான் சாநெறி விட்டு உயிர் நெறிக்கு வந்ததற்காக மகிழ்கின்றேன்."

மெலிந்த உடலை வலுப்படுத்தப் பால் ஓர் அமிழ்தமாவதை யறிந்தோம். கொழுத்த உடலை வற்றச் செய்வதற்கும் அதுவே மருந்தென்றால் நீங்கள் வியப்படைவீர்கள். இந்த ஏறுமாறாகக் காணப்பட்டாலும், உண்மையான தொன்றே. எப்படியெனில், கொழுப்புக் கொண்ட உணவுப் பொருள்களை உண்பதனாலேயே உடல் பருக்கின்றது; பாலில் அளவுக்கு மிஞ்சிய கொழுப்பில்லை; இப் பருத்த உடலோருக்குப் பாற் பத்தியம் வைத்தால் உடனே அவர்கட்குத் தசை வற்றிப் போகின்றது. சோறு கறிகள் முதலான அளவின் மிக்க உணவுப் பண்டங்களை ஏற்றுக்கொண்டிருந்தவர்கள் அளவில் மிகக் குறைந்த பாலுணவை மிக விரைவில் செரிப்பித்துக் கொள்கிறபடியால் அவர்கள் உடலெடை குறைகின்றது. இவர்கள் முழுப் பாலுணவில்லாமல் கொழுப்பற்ற முழுமோருணவு

கொண்டால் இவர்தம் உடல்நிலை மிக மேன்மையடையும் போலும்!

மூத்திரப்பைச் சுருக்கம், குடலிறக்கம் ஆகிய இந் நோய்களுள்ளவர்கள் பாலுண்டல் கூடாதென்கின்றார்கள். ஏனெனில், பாலில் நீர் மிகுதியா யிருப்பதே காரணம். இந் நோயாளிகள் பால் மிகுதியாகக் குடிக்குமிடத்து மூத்திரப்பையில் நீர் அளவுக்கு மிஞ்சிச் சேருவதனால், அதற்கும் குடற்கும் தொந்தரை நேரிடுகிறது. இந் நோய்கள் ஏற்கெனவே ஒருவனுக்கு இருக்கும்போது பாலுணவு வேண்டப்படாததாகும். ஆனால் இளமையிலிருந்து பால் மிகுதியுங் கொள்ளும் பழக்க முடையவர்களுக்கு இந் நோய்கள் அணுகவே யணுகா. மேலும், பாண்டு முதலிய நீர் நோயுள்ளவர்களும் பால் கொள்ளுதலைத் தள்ளவேண்டு மென்கின்றார்கள். இவர்களும் இளமைதொட்டுப் பால் அடிக்கடி அருந்தும் பழக்க முடையவர்களாக இருந்திருப்பார்களேயானால் அந்நோய்கள் இவர்களை அணுகியிரா. ஆகவே இளமைமுதல் பாலினையே முக்கியமான உணவாகக் கொண்டுள்ளவர்களிடம் எந்நோயும் அணுகாவென்பதே முடிவு.

---

## அ. பாற்பத்தியம் பழகும் வழி

ஒருவன் அன்றாடம் குடிக்கும் பாலளவிற்கு மேல் சிறிதளவு மிகைப்படக் கொள்வானானால் அது வயிற்றுப் போக்கை யுண்டாக்குகின்றது. அதனால் அவன் பாலையே உணவாகக் கொள்வதென்றால்

அச்சங் கொள்கின்றான். மனக்கலக்கமும் உடலுக் கொவ்வா விளைவும் ஒன்றுமில்லாமல் ஒருவன் நாளொன்றுக்கு மூன்று படி பாலே உணவாகக் கொண்டிருக்கலா மென்றால் அவன் சொல்வதற் கொன்றுமின்று. ஏனென்றால், மக்களிற் பெரும் பாலார் பாலை ஒரு குடிநீரைப்போல் எண்ணிப் பருகுகிறார்களே தவிர அதனில் உணவுப் பொரு ளுண்டென்பதை அறியார்கள். இதனால் அவர் கள் இரண்டு தவறுகள் செய்கின்றனர்: 1. பாலை மேற்கொண்டு குடிக்கும்போது மற்ற உணவுகளை அதற்குத் தகக் குறைக்கிறார்களில்லை. இவ்வாறு வயிறு அளவுக்கு மீறின உணவைக் கொண்டுவிடு கிறபடியால் அஃது அதனைச் செரித்துக்கொள்ள மாட்டாமல் துன்புறுகின்றது. 2. பாலைச் சப்பிச் சப்பிச் சிறிது சிறிதாக உட்கொள்ள வேண்டும். அதனை விட்டுப் பாலை நீரைப்போல் ஒரே வாயாக ஊற்றிக்கொள்கிறபடியால் அது மந்தத்தை யுண்டு பண்ணுகிறது. எவ்வுணவுப் பொருளையும் மென்று மென்று சப்பிச் சப்பியே உட்செலுத்த வேண்டும்; அப்போதுதான் உமிழ்நீர் அதனில நன்றாகக் கலக்கும். உமிழ்நீர், உணவை வயிற்றில் செரிப்பிப்பதற்கு வேண்டிய முக்கிய பொருள் களில் ஒன்று. இஃதின்றேல் வயிற்றுச் செரிப்பு அரைகுறையான தொன்றேயாகும். குடிநீரிலும் இவ்வுமிழ்நீர் சேரவேண்டிய தென்பதை இங் கறிதல் வேண்டும்.

பல்லாண்டுகளாக நமது வயிறும் குடர்களும் கெட்டிப் பொருள்களையே கொண்டு செரிக்க வைப் பதிற் பழக்கப்பட்டுப் போய்விட்டன. இப்போது

திடமெரன நீர் போன்ற பாலுணவை அவற்றிற் செலுத்தினால் அவை தாறுமாறடைகின்றன. ஆகையால் பாலுணவே கொள்ள எண்ணங் கொள்வோர்கள் திடமென்று அதனையே கொண்டு கெட்டியுணவுகளை அறவே தள்ளிவிடக் கூடாது. அவர்கள் முதன் முதல் செய்ய வேண்டுவது என்னவெனில்:—அவர்கள் உடலுரத்துக்குத் தக்கபடி அவ்வப்போது நன்னீர் தவிர வேறொன்றும் உட்கொள்ளக் கூடாது; அல்லது பழச்சாறு பத்தியங் கொள்ளலாம்; இதற்கு நல்ல கிச்சிலிப் பழங்களே (நாரத்தை) சிறந்தவை. இது பாற்பத்தியங் கொள்ள வயிற்றினையும் குடர்களையும் வழிப்படுத்தும்.

மக்கள் அப்போதைக்கப்போது பாற்பத்தியங் கொள்வது உடல் நலத்துக்கு இன்றியமையாததொன்று. மக்கள் உடலில் எப்படியாவது நச்சுப் பொருள்கள் கூடிக் குவிந்து அதற்கு ஏதாவதொரு ஊறுபாட்டினை யுண்டாக்கும். அதற்குப் பாற்பத்தியமே சிறந்த மாற்று மருந்தாகும்.

சிலர் தாங்கள் மிக எச்சரிக்கையோடு உணவு கொள்வதாகவும், அளவுடனே உண்பதாகவும், ஆதலால் தமக்கு எந்தப் பத்தியமும் வேண்டியதில்லை யென்றும் பெருமிதத்தோடு பேசுகின்றனர். ஆனால் அவர் வாய்ப்பேச்சை நம்பமுடியாது. ஏனெனில் இக் காலத்தில் நாகரிக வுணவுகள் மிஞ்சிப்போயின. எவ்வகையிலாயினும் உணவில் தவறுகள் உண்டாகாமலிரா. ஆகையால் எவரும் அடிக்கடி பாற் பத்தியங் கொண்டே தீர வேண்டும்.

*இந்நாட்களில் உடலுக்குக் காணும் நோய்கட்குக் கணக்கேயில்லை. நோய்வாய்ப் படாத குடும்பமே யில்லை. வாயாற் சொல்லொணா நோய்களும் பலவுண்டு. பாற்பத்தியம் இந்நோய்கட்கு இடங்கொடாமற் போவதுந் தவிர இவைகளை வேரோடு களையவுஞ் செய்யும்.*

*பாற்பத்தியக்காரர்களுக்கு இங்கே ஒரு எளிதான வழி காட்டப்படுகின்றது :—*

"பாற்பத்தியங் கொள்ள வேண்டுமென்று, என்று எண்ணுகிறீர்களோ அன்று முதல் உணவைச் சிறிது சிறிதாக நாளுக்குநாள் குறைத்துக் கொண்டே வந்து சில நாட்களில் அரைவாசிக்குக் கொண்டுவந்து விடுங்கள். இந்த நாட்களிலெல்லாம் உணவை நன்றாய் மென்று மென்று சப்பிச் சப்பித் தின்னவேண்டும். மேலும் பச்சைக் காய்கறிகளையே மிகக் கொள்ள வேண்டும். பிறகு இருபத்துநான்கு மணி நேரம் நன்னீர் தவிர வேறொன்றும் உட்கொள்ளாதீர்கள். அடுத்த ஏழு நாள் பாலும் பழமுமே உண்ணுங்கள்; காலையில் இரண்டு வாழைப்பழம், இரண்டு கிச்சிலிப்பழங்கள், நல்ல பசுப்பால் உழக்கு; மாலையில் ஒரு சீமை அத்திப்பழம், ஒரு வாழைப்பழம், பசுப்பால் உழக்கு. இப்போது வழக்கம்போல் வேலை செய்யலாம். உடற்பயிற்சியும் எடுத்துக் கொள்ளலாம். வேண்டிய மட்டும் நன்னீர் குடிக்கலாம். இப்போது நீங்கள் கடலைத் தாண்டி விட்டீர்கள்; இனித் தாண்ட வேண்டியது கால்வாயே.

இது முதல் காலையில் கீழ்ச் சொன்னபடியே பழமும் பாலும் சாப்பிடுங்கள்; மாலையில் ஒரு

கோதுமை ரொட்டி, ஆக்கின காய்கறி வகைகள் சில, பச்சைக் காய்கறி வகைகள் சில, பருப்புவகைகள், குழம்பு ஆகிய இவைகளை உண்ணுங்கள்.

இவ்வாறே குறைந்தது மூன்று மாதமும், உயர்ந்தது ஆறுமாதமும் செய்யுங்கள்; இன்னும் வேண்டுமானால் மேற்கொண்டும் செய்யலாம். பிறகு முன் வழக்கம்போல் இரண்டு வேளை உணவுக்கு வந்துவிடுங்கள். இப்படியே வேண்டும்போதெல்லாம் செய்து கொள்ளலாம். பாலைச் சப்பிச் சப்பிச் சிறிது சிறிதாகக் குடிக்க வேண்டும்; உணவை மென்று தின்ன வேண்டும் என்கிற இரண்டையும் எப்போதும் மறக்க வேண்டாம்."

மேகவெட்டை, கைகால் பிடிப்பு, சோறி சிரங்கு (தோல் பொருக்கு) ஆகிய நோய்கட்குப் பால் உட்செலுத்துதல் (Milk Injection) செய்தால் தீரும்.

---

## க. பசு வளர்த்தலும் காத்தலும்

*பதவு காலங் களில்மேய்த்தும்*
*பறித்தும் அளித்தும் பரிவகற்றி*
*இதமுண் துறையுள் நற்றண்ணீர்*
*ஊட்டி அச்சம் எதிர்நீக்கி*
*அதர்நல் லனமுன் செலநீழல்*
*அமர்வித் தமுத மதுரப்பால்*
*உதவும் பொழுது பிழையாமல்*
*உடையோர் இல்லந் தொறுமுய்த்தார்.*

*—சண்டேசுர நாயனார் புராணம்*

*பசு தெய்வத்தன்மை கொண்டதென்பது நம் இந்திய நாட்டு மக்களின் மனமார்ந்த கொள்கை.*

மேலும் அவர்கள் அதனிடம் தாயன்பு காட்டுகின்றார்கள். ஏனெனில் ஒரு தாய் தன் மக்கட்குப் பாலூட்டுவதுபோலப் பசு மக்கட் கூட்டங்கட்குப் பால் கொடுக்கின்றது. பசுவின் ஒவ்வொரு உறுப்பிலும் ஒவ்வோர் தெய்வம் குடியிருப்பதாகவும் நம்மவர்கள் என்றுகின்றனர். இஃது அவர்கள், பால் நலத்தைப் பற்றிக் கொண்ட சீரிய கருத்துமாகும்.

ஒவ்வொருவரும் தமக்கென்று பசு வைத்துக் கொண்டு, அதற்குத் தாமே தம் கையால் தீனி கொடுத்து, அதனைத் தம் தாயைப்போல் பாது காத்து, அது தரும் பாலினைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். இதுவே குற்றமற்ற பாலினைப் பெற்றுத் தாமும் தம் குடும்பத்தாரும் உடல் நலத்தோடு வாழும் வழி. மக்களின் ஆதி முதற்றொழில் பசு வளர்த்தலே என்பர்.

தமக்கென்று பசு வைத்துக்கொள்ள வேண்டுவது ஏன் என்றால் :—

1. விலைப்பாலில் ஏற்கெனவே தண்ணீர் கலந்திருக்கும் ; இதுவேயன்றி மாவோ, சர்க்கரையோ, சீமைச் சுண்ணம்போ, அல்லது எருமைப் பாலோ கூட்டியிருக்கும் ; மேலும், அஃது எவ் வகையிலும் தூய்மையாகவே இராது.
2. ஒரு பசு பல கன்றுகள் போடும் ; அவை பின்னால் நம் மாடுகளாம்.
3. சாணம், தோல், கொம்புகள், என்புகள் எல்லாம் நமக்குப் பயன்தரக் கூடியன.
4. தீர எண்ணிப் பார்ப்போமானால் வாங்கும் பாலை விடச் சொந்தப் பாலே மலிவானதாக ஏற்படும்.

5. விலைப்பாலைக் குறைவாகவே வாங்குவோம்; அரை குறையாகவே உண்போம்; ஆனால் சொந்தப் பாலையோ மிச்சம் பிடிக்காமல் வேண்டியவரை யுண்போம்.

முதன்முதல் பசு வாங்கும்போது அடியிற் காட்டப்பட்ட செய்திகளை நன்றாகக் கருத்தில் வைக்க வேண்டும்.

1. நல்லினப் பசுவாகப் பார்த்து வாங்கவேண்டும்; தாழ் இனப் பசு தீனி கொள்ளுமே தவிர, பால் கொடாது.

2. கன்று போட்ட பசுவையே வாங்கவேண்டும்; கன்றில்லாப் பசு வாங்குவது எப்போதும் இழுக்காகும்.

3. நல்ல கறவைப் பசுவுக்கு உடல் பெரிதாகவும், இடுப்பு அகன்றும், மார்பு அகன்று தாழ்ந்தும் இருக்கும்.

4. அதன் தலை சிறுத்திருக்கும்; கொம்புகள் சிறிது பின்னோக்கும்; முகமோ அகன்றிருக்கும்.

5. அதன் தோல் மேன் மயிர் நுண்மையும் பளபளப்பு முள்ளது.

6. அதன் வால் ஒல்லித்து, வளையக் கூடியதாகவும், நுனி மயிரடர்ந்து பளபளப்பாகவும் இருக்கும்.

7. அதன் கால்கள் குட்டையாகவும், தளர்நடை யுடையனவாகவும், தொடையோடு தொடை படாதனவாகவும் இருக்கும்.

8. பால்மடி பருத்து, பால் நரம்புகளை வெளிக்காட்ட வேண்டும். நான்கு காம்புகளும் உருண்டு திரண்டு, ஒரே அளவாக நீண்டு, ஒன்றோடொன்று படாமல் இருக்கவேண்டும்; காம்பு

நுனிகள் கண்மூடிக்கொண் டிருக்கக் கூடாது ; காமபிலிருந்து சுரைகள் தாராளமாகக் கனத்துச் சொரிய வேண்டும்.

9. கொழுத்த (சதையடர்ந்த) பசு பெருந்தீனி கொள்ளும் ; அத் தீனியெல்லாம் கொழுப்பாகவே மாறி விடும் ; பாலாகாது.

10. ஒரு நல்ல பசு மந்தநடை கொண்டது ; உருக்க முள்ளது ; கடுநடை கொண்டு துள்ளிக் குதிக்கும் பசு தொந்தரை கொடுக்கும்.

11. இளம்பசுவே கொள்ளத்தக்கது ; ஆனால் மற்ற ஈற்றுப் பசுக்களைவிட முதலீற்றுப் பசு வெடுவெடுப்புத் தன்மையுடையது ; பாலுங் காணாது. ஆகையால் இரண்டாமீற்றுக்கும் மேல் மூன்றாமீற்றுப் பசுவே நல்லது.

12. ஒரு பசு சாதாரணமாய் எட்டுக் கன்றுகள் போடும்; ஆனாலும் அது எட்டாண்டுக்குமேல் தீனிக்குத் தக்க பால் கொடாது.

13. ஒரு பசு முதன்முதல் சாக்கன்று போட்டாலும், அல்லது ஈன்றவுடன் கன்று நோயால் செத்துப் போனாலும் அது பின்னால் ஈனும்போதெல்லாம் அவ்வாறே நடைபெறக் கூடும்.

14. எப் பசுவுக்கும் கன்று போய்விட்ட பிறகு பால் குறைவுபடும்.

15. ஒரு தரம் கறக்கும்போதே மடிப்பாலை யெல்லாம் சுரக்க விட்டுவிடுவது ஒரு சிறந்த பசுவின் தன்மை.

16. பசுக்களின் நிறத்தையும் உடன் கவனிக்க வேண்டும் :—

க. எந்நிறப் பசுவினும் **கருநிறப் பசுவே** எல்லா வகையிலும் சிறந்தது ; குற்றமற்ற பாலுடையது.

உ. கபிலைப் பசுவும் செந்நிறப் பசுவும் நலமும் வலிவுமுடையன; செந்நிறப் பசுவின் பால் மற்றெல்லாப் பசுவின் பாலைக் காட்டிலும் மிக்க இனிமையுள்ளது.

௩. சாம்பல் நிறப் பசுவும், பால் வெள்ளைப் பசுவும் நல்ல கறவைகளல்ல. ஆனால் சாம்பல் நிறப் பசு மயிலையாயிருந்தால் நல்லது. பழுப்பு வெள்ளைப் பசுவுக்குச் செந்நீர்ச் செழுமையுண்டு. நீல வெள்ளைப் பசுவில் பாலருமை. பல நிறம் கொண்ட பசுவும் நல்லதே.

௪. காதுகளினுள்ளும் குளம்புகளின் சந்திலும் பளபளப்பான மஞ்சள் நிறங் கண்டால், அத்தகைய பசுக்களுக்குப் பாற் செழுமையுண்டு.

௫. சூடுபோட்ட பசுக்கள் கெடுதியானவைகளல்லவாயினும் அவைகட்குச் சூடு போட்ட காரணங்களை ஆராய்ந்தறிந்து கொள்ளவேண்டும்.

௬. சிறு நீலப் பாலைவிட மஞ்சள்நிறப் பாலே சிறந்தது.

வெளியூர்களிலிருந்து பசுக்கள் வாங்கி நாம் ஓட்டிக்கொண்டு வரும்போது அவைகளை நாளொன்றுக்கு அஃதாவது இருபத்துநான்கு மணி நேரத்தில் பத்துக் கல்லுக்கு (ஏழரை நாழிகை, மூன்றுமணி நேரம் வழி) மேல் நடக்க விடக்கூடாது. வழியில் போதுமான தீனி கொடுக்க வேண்டும்; போதுமான தண்ணீர் காட்டவேண்டும். பசுக்கள் வீடுவந்து சேர்ந்ததும் அவை

களைக் கொட்டகையில் மற்றப் பசுக்களோடு கட்டி வைக்கக்கூடாது. காலத்துக் கேற்றபடிக்கும், பசுக்களின் உடற்றன்மைக் கேற்றபடிக்கும் புதுப் பசுக்களை மூன்றுமாதம் வரைத் தனியாகவே நடமாட வைக்க வேண்டும்.

பசுக் கொட்டகைகள் வெளி மைதானத்தில் இருப்பது சிறந்தது. இருபது இருபத்தைந்து பசுக்களுக்கு மேல் வைத்துக்கொண் டிருப்பவர் கள் அப்படியே செய்யவேண்டும். ஒன்றிரண்டு பசுக்கள் வைத்துக்கொண் டிருப்பவர்களும் அவைகளை வீட்டுக் கப்புறத்தே ஒரு தனிக் கொட்டகையில் இருக்கச் செய்யவேண்டும். வீட் டுக்கும் கொட்டகைக்கும் யாதொரு தொடர்பும் இருக்கவே கூடாது. கொட்டகைக்குப் போக வர வழிகள் வீட்டைவிட்டு வேறாகவே இருப்பது பல்வேறு குற்றங்களை நீக்கும்.

பசுக் கொட்டகையின் தரை, பக்க இடங்கட்குக் குறைந்தது இரண்டடி உயரத்தில் நிற்கவேண் டும். முகவாயில் தெற்கு நோக்கியிருப்பது சிறந் தது. வடக்குச் சுவரில சிறு பலகணிகள் குறைந் தது ஐந்தாறு அடிக்குமேலேயே வைக்கப்படவேண் டும். பலகணிக்குப் பலகணி குறைந்தது ஆற டித் தொலைவு இருக்கவேண்டும். கொட்டகைத் தரையின் அகலம் காடி தள்ளிப் பசுவின் நீளமே இருப்பது நல்லது. ஒவ்வொரு பசுவும் நிற்க நான் கடி அகலம் பகுத்து விட்டுவிட வேண்டும். மேற் கூரை சிறிது ஒழுக்கலும் நேராதபடி யிருக்க வேண்டும். கொட்டகையில் உண்ணிகள் சேர்ந்து விட்டால் உள்ளே தீக் காட்ட நேரும். ஆகையால்

எதற்கும் கூரை நெருப்புப் பிடிக்கவொட்டாதபடி இருக்கவேண்டும். விழல் வைக்கோற் கூரைகள் இடுக்குறுக் கூடும். கொட்டகைத் தரையையும் மேடுபள்ளமில்லாமல் பத்துக்கொன்று வாட்டமாக வழுவழுப்பில்லாமல் கெட்டியாகத் தட்டிவிடவேண்டும். நீர்த் தாரைகளையும் கெட்டியாகக் கட்டவேண்டும். அவைகள் அகலமாயிருக்க வேண்டுமே யொழிய ஆழமாக இருக்கப்படாது; அப்படியிருந்தால்தான் கொட்டகையின் கழிவுகளை அடிக்கடித் தள்ளி விடுவதற்குத் தகுதியாக இருக்கும். பசுக்களை அவிழ்த்து நடமாடவிட அண்டையில் ஒரு தனியிடமும் இன்றியமையாதது. பசுக்களை ஒன்றோடொன்று உராய்ந்து கொள்ள விடப்படாது. ஒன்றின் தீனித்தொட்டியில் மற்றொன்று வாய்வைத்தல் கூடாது.

கொட்டகையில் காற்றோட்டமும் வெளிச்சமும் தாராளமாக வரவிட வேண்டும். பால் வைக்கும் அறை தூய்மையாகவும் மக்கள் நடமாட்டமில்லாமலும் இருக்கவேண்டும். பாலடைக்குப் பழுது நேராதபடி அவ்வறையைக் குளிர்ச்சியாக வைக்க வேண்டும். பாற்பானைகளைக் கழுவிச் சீர்செய்யும் அறை வேறொன்று தனிமையாக இருக்கவேண்டும். பால் கறக்கத் தொடங்குமுன்பு கொட்டகையின் எருநீர்களை அகற்றிக் கழுவி அதனைத் தூய்மைப் படுத்தவேண்டும்; ஏனெனில் அவ் வீச்சம் மிக விரைவிற் பாலிற் கலந்துகொள்ளும். பண்டசாலையையும் அடிக்கடி விளக்கித் தூய்மை செய்விக்க வேண்டும். கொட்டகை இடங்களையும், கழிநீர்க் கால்வாய்களையும் தூய்மை செய்யும்

பொடிகளேயோ, நீர்களேயோ கொண்டு கழுவ வேண்டும். இப் பொருள்கள் எருக்களின் தன்மை களே உயர்த்தவுங் கூடியன.

மழைக்காலத்தில் பசுக்களுக்குக் காய்ந்த வைக் கோற் படுக்கை கனமாகப் போடுவது நல்லது. பசுக்களுக்குத் தீனிவைக்க மின் முலாம்பூசிய துத்தநாகத் தொட்டிகளாவது, சிமெட் சுண்ணும் புத் தொட்டிகளாவது செய்துவைக்க வேண்டும்; இவை மரத்தொட்டிகளேவிட மேலானவை. கொட்டகையில் விட்டுக் கழுவும் தண்ணீர் எவ் விதத்திலும் குற்றமொன்றுமில்லாத தூய்மை யுடைத்தா யிருக்கவேண்டும். தூய்மையான நீரினலேயே பாற்பானேகளேயும் துலக்கிக் கழுவ வேண்டும். தண்ணீர்க்குக் குறைவில்லாத கிணறு ஒன்று கொட்டகையை அடுத்து வெளியே இருக்கவேண்டும். அஃது ஒருவாறு மேமேல மூடப்பட்டிருத்தல் நலம். கொட்டகைக் கால்-வாய்நீர் கிணற்றுநீரில் ஊறிக் கலந்து விடும்படி யான மட்டத்தில் ஓடப்படாது.

கனத்துக் கெட்டியான சுவர்களும் மேற் கூரை யும் பெருங் குளிர் காற்றடிக்கும்போது கொட் டகையிலுள்ள பசுக்களுக்குக் குளிர் காட்டா திருக்கச்செய்யும். நல்ல வெளிச்சம், நல்ல காற்று நடமாட்டம், நல்ல பாதுகாப்பு இவைகள் உள்ள கொட்டகையில் ஈக்களே காணப்படா. அவ்வப் போது காணப்படும் தும்பு தூசு அழுக்குக்களே அவ்வப்போது நீக்கிவிடத் தக்க ஏற்பாடுகளேக் கொட்டகையில் செய்துவைக்க வேண்டும். தூய் மைக்குப் பணச்செலவு சிறிது, ஆனல் அது கோடுக்

கும் பரிசு பெரிது! கொட்டகை இரவில் இருட்டாக இருக்கப்படாது.

தலைநிமிர்ந்து நிற்கவேண்டிய அளவுக்குப் பசுக்களைக் கயிற்றாற் கட்டிவைத்தால் போதும்; கயிற்றை மிக நீளமாக வைத்துக் கட்டப்படாது. ஏனெனில் அதனால் கால்கள் கயிற்றில மாட்டிக்கொண்டு பசுத் துன்புறும்; மேலும் கயிறும் விரைவில் நைந்தறுந்துபோகும். பசுக்கள் எந்நேரமும் கட்டிலேயே இருக்கப்படாது. கொட்டகை கழுவப்பட்டுத் தரை நன்றாய்க் காய்ந்தபிறகு அதனில் பசுக்களைத் திரும்பக் கொண்டுவந்து கட்டவேண்டும். ஒரு கூட்டப் பசுக்களின் பகுதிக்கு இரண்டு கொட்டகைகளோ, அல்லது ஒரு கொட்டகையும் ஒரு வெளியிடமுமோ இன்றியமையாதனவென்று இதனாற் புலப்படுகின்றதல்லவா? மிக்க நேரம் பசுக்களை ஈரத்தரையில் தங்கவைத்தல கூடாது. ஈரமும், முடைநீரும் காற்றும் நோய்நொடிகளை உண்டாக்கும்.

கோடைக்காலத்தில் கொட்டகையில் பசுக்களை நெருக்கமாகக் கட்டிவைப்பதனால் கறக்கும் பால் குறைவுபடும். இப்போது இரவில் பசுக்களை வெளியில் கட்டிவைக்கலாம்; பச்சைத் தழையும் புலலும் தின்னப் போட்டுவைக்கலாம. வெய்யிற் காலத்தில் பசுக்களின்மேலே தூறலோ, சிறு மழை நீரோ விழுந்தாலும் கெடுதியில்லை. மழைக் காலத்தில் பசுக்களை இரவில் வெளியே கட்டிவைக்கக்கூடாது; சதுப்பு நிலங்களிலும் மேய விடக்கூடாது. ஆனல் இப்போது சில நேரம்

(நடுப்பகல் தள்ளி) வெய்யிலில் கட்டிவைக்கலாம். மழைக்காலத்தில் பசுக்களுக்கு ஊட்டந்தரும் தீனியே வைக்கவேண்டும். மிகுதியாக வைக்கோலும் புல்லும் போடவேண்டும்.

இங்கே ஒரு முக்கிய செய்தியொன்றை உங்கட்குச் சொல்லவேண்டும். பசுப்பாலே நல்லுணவு, பசுப்பாலே நன்மருந்து என்று நமக்குத் தெரிய வந்திருக்கின்றது. பாலைப் பெருக்கவைக்கப் பசுக்களுக்குக் கண்டபடி தீனிவைத்தால் அப் பால் நல்லுணவுமாகாது; நன் மருந்துமாகாது. மக்கள் உடல் யாதொரு கெடுதியுமின்றி உரத்தோடிருக்க வேண்டுமானால் பால் கறக்கும் பசுவுக்கு வேண்டிய அளவு புல்லுந் தழையும் போடவேண்டும்; சிறந்த தானியத்தவிடும் வைக்கலாம்; அகத்திக் கீரையும் சிறிது தின்னக் கொடுக்கலாம்; நல்ல வைக்கோலைத் தேர்ந்தெடுத்துப் போடலாம். இவ்வுணவுப் பொருள்களில ஐந்து உய்வனவுகளும் உண்டு. இவ்வகையாகக் கொள்ளும் பாலே சிறந்த பால். இவ்வாறில்லாத விலைப் பாலால் நாம் பெருநன்மைகளைப் பெற முடியாது. இதனை மக்கள் தமது கருத்தில் ஊன்ற வைக்கவேண்டும்.

நோய் காணாமல் பசுக்களை வைத்துப் பாதுகாக்க வேண்டியது நல்ல பால் உண்ண வேண்டுவோர் கடமையாகும். பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் சில நோய்கள் வழக்கமாய் வருவதுண்டு. அந் நோய்களையும் அவற்றிற்குச் செய்ய வேண்டிய சிகிச்சைகளையும் பற்றி அடியில் ஒருவாறு குறிப்பிடுவோம்:—

1. **தும்மல், இருமல் :** இவை கண்டால் பசுக்களுக்குக் கற்பூரத் தைலத்தை உட்கழுத்தின்மேல் பூச லாம், சாம்பராணிப் புகை காட்டலாம்.

2. **கண்ணீரொழுக்கு :** இதற்கு நாலரை நெல்லெடை படிக்காரத்தை ஒரு அவுன்ச சுத்த தண்ணீரிற் கலந்து கண்களைக் கழுவிவிட வேண்டும். ஆமணக்கெண்ணெய், சுத்த மீன் எண்ணெய், பன்னீர் இவைகளைக் கண்ணில் விடலாம்.

3. **கண்சிவத்தல் :** இதற்குக் கீழ்ச்சொன்ன வகையே படிக்காரத் தண்ணீர் கொண்டு மூன்றுமணி நேரத்துக் கொருதரம் கண்ணைக் கழுவிவிட வேண்டும். ஈ, கொசுக்கள் நாடாதபடி வெள் ளைத் துணியால் கண்ணை மூடிவைக்க வேண் டும். உள்ளுக்குக் குளிர்ச்சி தரும் உணவு கொடுக்க வேண்டும்.

4. **தோற்பொருக்கு :** இஃது ஆடுமாடுகளுக்கு மேற்றோ லின்மேல் காணும் சொறிசிரங்கு போன்ற தொரு தொற்றுநோய். இதனை ஆங்கிலத்தில் மஞ்சி என்பார்கள். உடம்பில் நமைச்சல் எடுக் கும். மாடு சுவரில் உராய்ந்துகொள்ளும். இதற் குக் கந்தகமும் உப்பும் ஐந்தைந்து தோலா எடை எடுத்துத் தேங்காய் எண்ணெயிலாவது, தேனிலா வது, கிளிசரினிலாவது போட்டுக் கலந்து உடம்பின்மேல் அந்தந்த இடத்தில் தடவ வேண் டும். உள்ளுக்குக் கந்தகம் கொடுப்பது நல்லது.

5. **தோற்புண்கள் :** இதற்குத் தேங்காயெண்ணெய், கற் பூரத்தைலம், பிசின், கற்பூரம், நிலக்கந்தகம் (Ground Sulphur), நச்சுப் பூச்சி மருந்து (Phenol) ஆகிய இவைகளைத் தக்க அளவாகச்

சேர்த்துத் தைலம் செய்து மேலே தடவவும். புண்கள்மேல் ஈ மொய்க்க வொட்டாமற் பார்த்துக் கொள்ளவும்.

6. **எருச் சிக்கல் :** இரண்டுபயிண்டு சுடுதண்ணீரில் 1 அல்லது 1½ பவுண்டு உணவுப்பைக் கலந்து, அதனுடன் 2 அல்லது 2½ தோலா சுக்குப்பொடி சேர்த்து உள்ளே கொடுக்கவும். தண்ணீர் அதிகம் காட்டவேண்டும். இது 10, 12 மணி நேரத்தில் பேதியாகும். வயிற்றில் வலி காணப் பட்டால் இந்த மருந்துடன் 2 தோலா மிளகுத் தூளையும் சேர்த்துக் கொடுக்கவும். இப்படியும் பேதியாகாமல் நோய் போகாவிட்டால் 10 அவுன்சு விளக்கெண்ணெயுடன் நேர்வாள எண்ணெய் 30 சொட்டு அல்லது நேர்வாளக் கொட்டைப் பொடி சேர்த்துக் கொடுக்கவும். நோய் நீங்கும்வரை வைக்கோல் தீனி கூடாது; பச்சைப்புல் சிறிது கொடுக்கலாம். பேதியானவுடன் 1¼ தோலா சுக்குத்தூள், 1½ தோலா மிளகுத்தூள் ½ தோலா வறுத்த எட்டிக்கொட்டைத்தூள் சேர்த்து 7 நாள் கொடுத்துக் கொண்டு வரவும். கன்றுகளுக்கு 2 முதல் 4 அவுன்சு விளக்கெண்ணெய் கொடுத்தால் போதும்.

7. **கழிச்சல் :** முதலில் 10 அல்லது 20 அவுன்சு விளக்கெண்ணெய் கொடுக்கவும்; நிற்காவிட்டால் ½ முதல் 1 தோலா காசிக்கட்டி, 1½ முதல் 2 தோலா சீமைச் சுண்ணாம்பு, 1 தோலா சுக்கு இவைகளைப் பொடிசெய்து சூடான அரிசிக் கஞ்சி 1 பயிண்டில் சேர்த்துக் கொடுக்கவும். கன்றுகளுக்கு அளவு தக்கபடி குறைத்துக் கொள்ளவும்.

8. **வயிற்றுப் பொருமல்**: இது வயிற்றில் உணவு புளிப்பேறி விடுவதனால் வாயு அதிகப்பட்டு உண்டாவது. இது நனைந்த பச்சைப்புல் தின்பதனால் ஏற்படுவது. இதற்கு 20 அவுன்சு விளக்கெண்ணெயில் 2 அவுன்சு கற்பூரத் தைலத்தைச் சேர்த்துக் கொடுக்கலாம், அல்லது கற்பூரம் $\frac{1}{2}$ தோலா, பெருங்காயம் அரைதோலா இவைகளைப் பொடி செய்து கொடுக்கலாம். கன்றுக் குட்டிகளுக்கு அளவைக் குறைத்துக் கொள்ளவும். நோய் திரும்பினால் அரிசிக்கஞ்சி முதலாகிய இலேசான உணவு கொடுக்கவேண்டும். இரண்டு மூன்று நாள் பொறுத்து 2 தோலா சுக்குத்தூள், 4 தோலா சோடா உப்பு உணவிலாவது தண்ணீரிலாவது சேர்த்துக் கொடுக்கவும். அல்லது சுக்குத்தூள் 2 தோலா, நிலவேம்பு 2 தோலா, ஓமம் 1 தோலா, எட்டிக்கொட்டை $\frac{3}{4}$ முதல் 1 தோலா, இவைகளைப் பொடிசெய்து தீனியில் 3 முதல் 5 நாள் வரை கொடுக்கவும். இப்படியெல்லாம் நிற்காவிட்டால் இடது பக்கத்தில் அதிகமாக வீங்கியிருக்கிற இடத்தில் முதுகெலும்பிலிருந்தும், விலா எலும்பிலிருந்தும் சமபாகமான அளவிலுள்ள ஓர் இடத்தில் நல்ல கத்தியினால் ஆழப்படக் குத்தி வாயு பிரியும் வரை கத்தியை அந்த இடத்திலேயே வைத்துப் பிடித்துக்கொண் டிருக்கவும்.

9 **இளங்கொடி விழாதிருந்தல்**: 24 மணி நேரத்துக்கு மேல் அதிக நேரம் கொடிவிழாமல் பசு காலை உதைத்துக்கொண்டும், வாலை வீசிக்கொண்டும் முக்கிக்கொண்டும் இருந்து அதனால் களைத்துப் போனால் 10 அவுன்சு சாராயத்தை 10 அவுன்சு தண்ணீரில் கலந்து கொடுக்கவும். ஒரு படி கம்புமாவைக் காய்ச்சி 2 பவுண்டு வெல்லத்

துடன் சேர்த்துக் கொடுக்கலாம். அல்லது 15 முதல் 20 தோலா வெண்டைக்காயும், 10 தோலா எள்ளும், 10 தோலா வெல்லமும் கஞ்சியில் சேர்த்துக் கொடுத்தால் இளங்கொடி விழுந்துவிடும்.

10. **மடிவீக்கம் :** எட்டுப்படியிண்டு சுடுதண்ணீரில் 1 அல்லது $1\frac{1}{2}$ பவுண்டு உப்புச் சேர்த்து 2 அல்லது $2\frac{1}{2}$ தோலா சுக்குப் பொடியுஞ் சேர்த்துக் கொடுக்கவேண்டும். ஊமத்தை இலை அல்லது இலந்தை இலை வேகவைத்துச் சுடுநீரினல் காலை மாலை வீங்கியிருக்கும் மடிக்கு ஒத்தடம் கொடுத்துப் பிறகு ஒரு தோலா கற்பூரத்தை ஓர் ஆழாக்குத் தேங்காயெண்ணெய் அல்லது நல் லெண்ணெயில் கரைத்து மடியின்மேல் பூச வேண்டும். மடியில் கனமாகப் பஞ்சை வைத்துத் தாங்கக் கட்டவேண்டும். மடியில் கெட்டுப்போன பாலை ஒரு நாளில் 3 அல்லது 4 தடவை கறந்துவிட வேண்டும்.

11. **வெக்கை :** இது மாடுகளுக்கு வரும் ஒரு பெருவாரி நோய். இதுகண்ட மாடுகளுக்கு ஏராளமாகத் தண்ணீர் வைக்கவேண்டும். அரிசிக்கஞ்சி, ஆளிவிதை மாவுக் கஞ்சி, சிறிது பால். சிறிது உப்புக்கலந்து 3 அல்லது 4 மணி நேரத்துக் கொருதரம் கொடுக்கவேண்டும். அரை ஆழாக்கு முதல் ஓர் ஆழாக்கு நாட்டுச் சாராயத்தையும், அரைத் தோலா சுக்குப் பொடியையுங் கலந்து நான்கு மணி நேரத்துக்கொருதரம் ஒரு சேரா கஞ்சியில் கலந்து கொடுக்கலாம். வைக்கோல் படுக்கை போடவேண்டும். இரவில் போர்வையும் போடவேண்டும், வெய்யில் படாமல் வைக்க வேண்டும். இந்த நோய் கண்டவுடன் அரசியல்

மாட்டு வைத்தியருக்குச் செய்தி அறிவிக்க வேண்டும்.

12. **அடைப்பான் :** இது வெகு விரைவில் மாட்டின் உயிரைப்போக்கும் வியாதி. வயிறு வீங்குகிறது, மூச்சு திக்குமுக்கடைகிறது, மூக்கில் செந்நீர் ஒழுகுகிறது, மாடு நிற்கமாட்டாமல் தள்ளாடு கிறது, பிறகு இரண்டு மணி நேரத்தில் உயிர் போய்விடுகிறது. இது கண்டவுடன் மாட்டு வைத்தியரை வரவழைத்து விடவேண்டும்.

13. **கால்நோய் வாய் நோய் :** இதனைப்பற்றி அரசியலார் துண்டுப் பத்திரிகை 8-ஆம் எண் பார்க்க.

14. **கன்றுகளின் சீதபேதி :** பால்நிற ஆமணக்கெண் ணெய் (Castor oil emulsion) 4 அவுன்சு, கற்பூரத்தைலம் 10 முதல் 30 துளிகள் சேர்த்து முதலில் 3 நாள் கொடுக்கவும். குளோரோடை னும் கொடுக்கலாம். பூச்சியினால் நேரிட்ட தானல் 15 முதல் 30 கிராம் மயில் துத்தத்தை 4 அவுன்சு தண்ணீரில் சேர்த்து ஒரு நாளைக்கு ஒரு தரம் 3 நாள் கொடுக்கவும். பாலும் அரிசி அல்லது ஆளிவிதைக் கஞ்சியும் உணவு.

15. **கன்றுகளின் எருவில் பூச்சிகள் :** விளக்கெண்ணெ யில் சிறிது கற்பூரதைலம் சேர்த்துப் பேதிக் குக் கொடுக்கலாம். அல்லது $\frac{1}{4}$ ரூபா எடை பெருங்காயத்தை 4 அவுன்சு பாலில் கலந்து காலை வேளைகளில் 5 அல்லது ஆறு நாள் கொடுக்கவும். அல்லது வேப்பங் கொழுந்தை உப்புடன் சேர்த்து அரைத்துக் காலை வேளை களில் 4 நாள் கொடுக்கவும்.

16. **கன்றுகளின் மேல்தோல்/சொறி சிரங்கு :** இது வட் டம் வட்டமாகத் தோலின்மேல் முதன்மையாய்க்

கழுத்திலும், முகத்திலும், தலைமேலுங் காணப்படும். இது முதுகிலும் பக்கங்களிலும் பரவும், நமைச்சல் எடுக்கும். இது தொத்துநோய். முதலில் சவர்க்காரத் தண்ணீரில் உடம்பைக் கழுவவேண்டும். படைகளின்மேல் 'டிங்சர்' (Tincture) தடவவும். மீன் எண்ணெய், கடலை எண்ணெய் ½ அல்லது 1 அவுன்சு சுண்ணாம்புநீரில் சேர்த்துக் கொடுக்கலாம். நல்ல விட்டமின் (உய்வனவு) தீனிகள் கொடுக்கவேண்டும்.

---

## ധ. பால் கறத்தலும் சேர்த்தலும்

"பிழக்கை வாரியும் பால் கொள்வர்" —சுந்தரர்.

பால் கறக்கும் பசுக்களை வாரத்திற்கு நான்கு முறையாவது நன்னீரில் குளிப்பாட்ட வேண்டும், மற்ற நாட்களில் அழுக்குக்கள் போகக் கழுவி விட வேண்டும்; தூம்பும் தூசும் சாணத்தோடு சேர்ந்து பசுவின் உடம்பில் அடைந்திருத்தல் நாம் வளர்க்கும் பசுவுக்குங் கேடு, கறக்கும் பாலுக்குங் கேடு. பசுவின் மேற்றோலின்மேல் நீண்டு வளரும் மயிர்களை அவ்வப்போது அவை உதிர்ந்து விடும்படி நன்றாய்த் தேய்த்து விட்டால் அங்கு அழுக்குகள் அடைபடுவதற்கு இடந் தராது.

பால் கறக்கிற ஆள் நோயற்றவனாகவும், தூய்மையான பழக்க வழக்கங்களுடையவனாகவு மிருக்க வேண்டும். அவன் கைகள் ஈரம்பட்டும், அழுக்குப் பிடித்தும் இருக்கப்படாது. அவன் பால் கறக்கும்போது தன் தலையைப் பசுவின்மேல்

முட்டவைத்துக் கொள்ளக் கூடாது. அவன் தூய்மையான உடையையே தரித்துக்கொண் டிருக்கவேண்டும்.

பால் கறக்கு முன்னேயாவது பின்னேயாவது பசுவுக்குத் தீனி வைக்கவேண்டும்; பசுவைப் பால் கறக்கும்போது அதற்குத் தீனிவைத்தால், பாலின் நற்சுவை கெட்டுத் தீ நாற்றமும் எடுக்கும். மேலும், பால் கறக்குமுன் பசுவின் மடியைச் சோதித்துப் பார்க்க வேண்டும். அதன்மேல் சிறிது அழுக்கிருந்தாலும் அதனைச் சுத்தம் செய்துவிட்டே பால் கறக்கத் துவக்கவேண்டும். சில வேளைகளில் மடிக் காம்புகள் புண்பட்டேனும் காயப்பட்டேனும், கொப்புளங் கண்டேனும், அல் லது வீக்க மடைந்தேனும் காணப்படும். அப் போது பால் கறக்கக்கூடாது. பசுவினை வருத் திக் கறந்த பால் நலங்கொண்டதாகாது. பால் கறக்கத் துவக்கும்போது பசுவினிடம் சந்தடி செய்யாமல் மெல்லெனப் போய் அசையாமல் அமைதியாகவும் விரைவாகவும் பாலைக் கறக்க வேண்டும்.

பால் கறப்பதற்கும் சேர்த்து வைப்பதற்கும் மட்பாண்டங்களே சிறந்தவை. ஒன்றிரண்டு கறவைகள் வைத்துக்கொண் டிருக்கின்ற நாட் டுப்புற மக்கள் பால் கறத்தற்கும் சேர்த்துவைத் தற்கும்; காய்ச்சித் தயிராக்குவதற்கும், தயிர் கடைந்து வெண்ணெய் மோர் எடுப்பதற்கும் மட் பாண்டங்களையே பயன்படுத்திக் கொள்கின்றனர். இதுவே சிறந்தவழி. ஆனல் பாற்பண்ணை வைத் திருக்கும் நண்பர்களுக்கு இஃது இயலாத

தோன்றுகின்றது. அவர்கள் கனிப்பொருள்களாகிய பித்தளை செம்பு முதலியவற்றினால் செய்யப்பட்ட கலங்களையே வசதி நோக்கிப் பயன்படுத்திக் கொள்கின்றனர். மட்பாண்டங்களையும் செவ்வையாய்க் கழுவி நன்றாய்க் காயவைத்த பிறகே மறுதடவைக்குப் பயன்படுத்த வேண்டும்.

கட்டிலேயே இருக்கும் பசுக்கள் பால் சிறிது மிகுதியாகவே கறக்கக் காணலாம். இரண்டு கன்றுகள் போட்ட பின்பே பால் ஏறுமாம். எட்டாண்டு கழிந்தபின் பால் குறையும்; ஆனாலும் பாலின் தன்மை குறையாது. மஞ்சட் பாலில் கொழுப்பு மிகுதி; கனமுள்ள வெண்பாலில் உடற்கூறு பொருள்கள் மிகுதி; அதனில் பாலேடு மிகும்; அது கட்டித் தயிருமாகும். நீலங்காட்டும் பால இனிமையும் நேர்த்தியுமானது; ஆனால் அது மிகுதியாக ஏடு கட்டாது, வெண்ணெயுங் காணாது, நல்ல தயிருமாகாது. ஆனாலும் அஃது இளங்குழவிகட்கும் நோயாளிகட்கும் மிகச் சிறந்தது. பால் கறக்கும் வேளைகட்கு இடை நேரம் குறைவாக விருந்தால் பாலில் கொழுப்புப் பொருள் ஏறும், அது நீண்டால் அப் பொருள் குறையும்.

கன்று போடப் பதினைந்து நாட்கள் முன்னும், கன்றுபோட்டுப் பதினைந்து நாட்கள் வரையும் பசுப்பாலை மக்கள் உண்ணலாகாது. கன்று நன்றாக வளரும் வரையில்தான் எந்தப் பசுவும் பால் கறக்கும்; பிறகு மரத்துப்போகும். ஆனால் பாற் பண்ணையிலோ பசுக்களுக்கு வைக்கும் தீனிவகைகளால் அவைகளின் பாலுறுப்புகட்கு எழுப்

புதல் கொடுத்து அவைகளை ஓராண்டுக்கு மேலும் கறக்க வைக்கின்றனர்.

பால் கறக்கும்போது காம்புகளினின்றும் வரும் முதற் றாரைகளில் நச்சுப்பூச்சிகளுண்டு. அதற்கு மாற்று என்னவென்றால் முன்வேளை கறக்கும் போது மடிப்பாலை அறக் கறந்துவிட்டால் பின் வேளை அப் பூச்சிகள் உண்டாகியிரா. கறக்கும் போது முதன்முதல் வரும் பாலில் கொழுப்பு மிஞ்சியிருக்கும். கன்றில்லாத பசுவின் பாலை ஒரே தடவையில் அறக் கறந்துவிடவேண்டும். பால் நிறைந்த மடியுடைய பசுவை ஓடவிடக்கூடாது; அப்படிச் செய்தால் பால் கட்டிப்போய்க் கறப்பதற்குங் கடினமாக இருக்கும். பாலின் நலமும் மாறிவிடும்.

பசு இருக்குமிடமும் சுற்றுப் பக்கங்களும் மிகத் தூய்மையாக இருக்கவேண்டும். அடுப்புப் புகை பட்டால்கூடப் பால் கெட்டுப்போகும். பால் கறக்குமிடத்தில் வீச்சங்கள் கூடா. பாலைக் கறந்தவுடன் மூடிக்கொண்டே உள்ளே கொண்டுபோய் வைக்கவேண்டும். ஏனெனில், காற்றில் உள்ள நச்சுப் பூச்சிகள் பாலில் உடனே சேர்ந்துவிடும். பாலின் இத்தன்மையை மக்கள் யாவரும் கருத்தில் இருத்திக்கொள்ள வேண்டும்.



# கக. பால் பண்ணை

"கன்றொடு பால்மறை நாகு கறப்பன பாலாவும்
புன்தலை மென்சினை ஆனொடு நீடு புனிற்றாவும்
வென்றி விடைக்குல மோடும் இனந்தொறும் வெவ்வேறே
துன்றி நிறைந்துள சூழ லுடன்பல தோழங்கள்."

—ஆனாய நாயனார் புராணம்.

நகரங்களில் பாற்காரர்கள் சில பசுக்களையும் இரண்டோர் எருமைகளையும் வைத்துக்கொண்டு, தெருத்தெருவாய் அலைந்து திரிந்து பால் கறந்து விற்பனைசெய்வார்கள். அவர்கள் வைத்துக் கொண்டிருக்கும் கறவைகளும், கறவைகளைக் கட்டிவைத்திருக்கும் இடங்களும் தூய்மையுள்ளனவாக இரா. அவ்விடங்கள் ஒரே வீச்சமடிக்கும். கறவைகளின் உடம்பின்மேல அழுக்குகள் அடைகட்டிப் போயிருக்கும்; இவை தவிரக் கன்றோடிருக்கும் கறவைகளைக் காண்பதரிது. பாற்காரன் சில வீடுகளுக்கே கறவையுடன் சென்று வீட்டாருக்கெதிரில பால் கறந்துகொடுப்பான். மற்ற வீடுகளுக்கெல்லாம் அவன் தான் முன்பே கறந்த பாலைத் திறந்தவாயுள்ள குவளையில் வைத்துக்கொண்டு ஊற்றி ஊற்றிக் கொடுப்பான். இப் பாற்காரர் பாலில் (வீட்டாருக் கெதிரில் கறந்ததிலுங்கூட) நீர் கலத்தல் முதலாகிய குற்றங்கள் காணப்படுகின்றனவென்று அரசியலாரே சோதித்துக் கண்டுபிடித் திருக்கின்றனர். இவர்கள் செய்யும் மந்திரதந்திரங்கள் பலவுண்டு.

அமிழ்தம் போன்ற பாலிலும் நச்சுக்குணமொன்றுண்டு. அஃதாவது, காற்றில் உள்ள

நச்சுப் பூச்சிகளைப் பால் மிக விரைவில் தன்னிடம் இழுத்துக் கொள்கின்றது. ஆகையினால் பாலைக் கறந்தவுடன் குவளையை மூடிவிட வேண்டும். இதனைப் பாற்பண்ணைக்காரர்கள் கருத்திற் பதிய வைக்க வேண்டும். ஆனால் நகரப் பாற்காரரோ இதனைக் கனவிலும் நினைக்கிறதில்லை. திறந்த வாயுடனே பாற்குவளையை வைத்துக்கொண்டு தெருவெல்லாம் திரிந்துவரும் இப் பாற்காரர் பாலையே, படித்தவர்களும் வாங்கியுண்பது மிக வருந்தத்தக்க தொன்றாகும்.

## பாற்பண்ணைக்கு இன்றியமையாதவைகள்

1. உழைப்பும், அக்கறையும், நினைவாற்றலும் உள்ள பண்ணைக்காரர்.
2. பண்ணைக்காரர் பண்ணையின் எல்லா வேலைகளை யும் தாமே செய்யத் தெரிந்தவராக இருக்க வேண்டுவதுந் தவிர, அவ் வேலைகளின் பேரி லெல்லாம் அவர்தம் கண்ணோட்டம் வேண்டும்.
3. பண்ணைக்காரரிடத்திலும், வேலையாட்களிடத்தி லும் அரைகுறை யென்பதில்லாத உண்மை இருக்கவேண்டும்.
4. முதற்பணம்: ஐம்பது முதல் நூறு கறவைகட் குக் கட்டடம், மேய்ச்சல் நிலம், துணைப்பொருள் கள் இவைகட்கெல்லாம் நாற்பதாயிரம் ரூபா செல்லும்; முப்பது கறவைகட்குப் பத்துப் பதினையாயிரம் செல்லும்.
5. மேய்ச்சல் நிலம் கறவை ஒன்றுக்கு இரண்டு ஏகர் நிலமிருத்தல் நல்லது. மேய்ச்சல் நிலமில்லாமல் பாற்பண்ணை நடத்த முயல்வது பெரும் பயன் தராது.

6. **பாற்பண்ணை வேலை பாடில்லாத வேலையன்று.**

7. பாற்பண்ணை வேலைக்காரர்கள் தமக்குப் பகைவர்கள் என்றும், அவர்கள் எப்போதும் குற்றப்பட்டவைகளையே செய்வார்கள் என்றும், ஆகையால் அவர்களில் எவனையும் நம்பப்படாது என்றும் பண்ணைக்காரர் எப்போதும் தமது கருத்தில் வைத்துக்கொண்டு விழிப்பாய் இருக்க வேண்டும். அவர்களுக்குள் கட்சிகள் ஏற்படாவண்ணம் முன்னெச்சரிக்கையாகவே இருக்க வேண்டும்.

பண்ணைக்காரர் கடமைகள் இன்னும் பலவுள, அவை யாவன :—

1. பண்ணையிலுள்ள ஒவ்வொரு சிறு வேலைகளையுங் கூடப் பண்ணைக்காரர் நேரில் நின்று நடைபெறச் செய்யவேண்டும்.

2. பண்ணைக்காரர் வேலைகளில் முக்கியமானவை :— கறவைகளைக் குளிப்பாட்டுதலும், அவைகளைத் தேய்த்தலும், அவைகட்குத் தீனிவைத்தலும், வெளியிற் கொண்டுபோய்த் திரும்ப ஓட்டிக் கொண்டு வருதலும்.

3. பண்ணைக்காரரின் கண்டிப்பான மேற்பார்வையும், பாதுகாப்பும் பாலளவை ஏறச் செய்யும்; அவ்வாறின்மை அதனைத் தாழச் செய்யும்.

4. பாலுண்போரின் உடல் நலத்தினைக் காக்க வேண்டுமென்பதனையே பண்ணைக்காரர் இரவும் பகலும் தமது எண்ணத்தில் வைத்துக்கொண்டிருக்க வேண்டும். இதுவே பண்ணையில் மக்கள் நம்பிக்கையை அளிக்கச் செய்வது மல்லாமல், அதனை நீடிக்கவுஞ் செய்யும்.



கன்று மந்தை

பக்கம் 112.

5. பால் பல்வகை மக்கள் எல்லாராலும், குழந்தைகளாலும் உண்ணப்படுவ தென்றும், தொத்து நோய்ப் பூச்சிகளைக் கொண்ட பால், நாட்டில் பெருவாரி நோய்களை உண்டாக்குமென்றும் மனத்திற் கொண்டு பண்ணைக்காரர் முன் னெச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

6. கறவைகளிடம் நோய் அணுக வொண்ணாது; நோய் கண்டுள்ள கறவைகளைப் பால் கறத்தல் கூடாது.

7. பால் கறக்கும் ஆள் உடல் நலமும், உடைத் தூய்மையு முடையவனாக இருக்க வேண்டும்; அவன் உடல் நலத்துக்கு மருத்துவர் சான்று பகர வேண்டும்; அவ்வாறில்லாதவன் பாற் சாலை யிற் கால்வைக்கப்படாது. மற்ற வேலைக்காரர் களுக்கும் இவ்வகைக் கட்டுப்பாடு இருக்கவேண் டும். வேலைக்காரர்களும் கறவாளிகளும் தம்தம் வேலைகளை அன்போடும் அச்சத்தோடும் செய்து வரவேண்டும்.

8. பாலை அசுத்தமாகக் கையாளுவதால் மக்கட்கு நச்சுக் காய்ச்சல், சீதபேதி, வாந்திபேதி, தொண்டை நோய், குடல்வாதம் முதலிய நோய் கள் உண்டாகின்றன.

9. பால் கறவாளிகள் பால் கறக்கும்போது இருமுதல், தும்முதல், எச்சில் உமிழ்தல், அழுக்கு விரல் களால் பாலைத் தொடுதல் ஆகிய இவைகளைச் செய்வது பாலின் தூய்மையைக் கெடுக்கும்.

10. பால் வைக்கும் இடத்தில் நாய் பூனைகள் நடமாடி ஒலிசெய்தல் கூடாது.

11. கொட்டகையில் கண்ட இடங்களில் பால் கறந்து வைத்தல், ஒரு பால் பானையின் மேல் அழுக்கடி கொண்ட இன்னொரு பானையை வைத்தல்,

அழுக்கு வைக்கோல், புல், தழைகளால் பாற் பானையை மூடிக்கொண்டு போதல் முதலியவை அப்பாலில் நச்சுப்பூச்சிகள் உண்டாகி அதனைக் கெடுப்பதற்கு வழியாகும்.

12. பானைகளைக் கண்ட தண்ணீரினால் அசுத்தமான பொருள்களைக் கொண்டு தேய்த்துக் கழுவுதல், தொலைதூரம் பால் கொண்டு போகும்போது அது கெடாமலிருக்க போரிக் ஆசிட் முதலியன கலத்தல் ஆகிய இவைகளும் நச்சுப் பூச்சிகள் சேர்வதற்கு இடங்கொடுக்கும்.

13. கொட்டகை, கறவைகள், துணைப்பொருள்கள், ஆட்கள், பக்கத்திடங்கள் எல்லாம் தூய்மை யுள்ளனவாக இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

14. இவைகள் எல்லாம் பாலுக்குச் சிறப்புக்கொடுக் கும்; பண்ணைக்கும் பொருள் வருவாய் நாளுக்கு நாள் ஏறும்.

[அரசியல் உடல்நலப் பகுதியார் அசுத்தப் பாலின் கெடுதிகளைப்பற்றித் துண்டுப் பத்திரிகைகளாலும், படக்காட்சிகளாலும் சொற்பொழிவுகளாலும் மக்கட்கு அறிவித்து, அவற்றை அவர்கள் மனத்தில் ஊன்றவைக்க வேண்டும். கூட்டுறவுச் சங்கங்களின் மூலமாகவும் இவைகளை யெல்லாம் மக்கட்குத் தெரிவிக்க அரசியலார் ஏற்பாடு செய்யலாம்.

## கறவைகள் உணவு

கறவைகள் ஈன்று சில மாதங்கள்தான் நன் றாகப் பால் கொடுக்கும். பிறகு போகப்போகப் பால் குறைந்துகொண்டே வரும். பால் குறையும்

பிற்பகுதியில் எத்தகைய தீனியையும் எவ்வளவு வைத்தாலும் கறவையின் உடலில் கொழுப் பேறுமே தவிரப் பாலேறுது.

தேங்காய்ப் பிண்ணாக்கு, ஆளிவிதைப் பிண்ணாக்கு, பருத்திக் கொட்டை, பட்டாணி ஆகிய இவைகள் பாலில் கொழுப்புண்டாக்கும்; ஆனாலும் பாலளவு குறைவுபடாது. கறவைகளுக்குக் கொடுக்கவேண்டிய தீனி வகையில வெண்கருப் (albumen) பொருள், கொழுப்புப் பொருள் (Fat), கஞ்சிப் பசைபொருள் (Starch) ஆகிய இவைகள் காணப்படவேண்டும் இத்தகைய தீனிப் பொருள்களாவன:—மேற்சொன்னவைகளுடன் உலர்ந்த புல், நெல் வைக்கோல், கோதுமைத் தவிடு, உருளைக்கிழங்கு, அரிசி, அவரையினப் பருப்புகள் (இவைகளை நறுக்கி ஊறவைக்கவும்); எள்ளுப் பிண்ணாக்கு, கூளம், சூரியகாந்திக் கொட்டைப் பிண்ணாக்கு முதலியவைகளாகும். கறவைகளை விரைவில் மரத்துப் போக விடக்கூடாது; பப்புதா (Paputa) இலைகள் கொடுத்தால் மரத்துப்போன கறவைகளும் திரும்பப் பால் கறக்கும்.

## காலை மாலைகளில் கறவைகள் உணவில் கவனிக்கவேண்டியவை

1. பிண்ணாக்கை நொறுக்கிப் போதுமான நீரில் பன்னிரண்டு மணி நேரம் ஊறவைத்துக் கடலைப் பொட்டுடனும் ஒரு கை உணவு உப்புடனும் கலந்து வைக்க வேண்டும். நீர் அதிகம் சேர்க்கப்படாது; கலப்புக் குழம்பாக இருத்தல் போதும்.

2. பச்சைப் புல் உணவும் உலர்ந்த புல் உணவும் இரண்டும் இருக்கவேண்டும். அளவினைக் கோடை மழைக்காலங்களுக்குத் தக்கபடி மாற்றிக் கொள்ளவேண்டும். பச்சைப் புல் இல்லாவிட்டால் பால் குறைவுபடும். மழைக்காலத்தில் பச்சைப் புல் உணவே கொடுத்தால் பால் நீலம் பட்டு, வெண்ணெய் குறைவுபடும்.

3. கறவைகளுக்குத் தீனி பங்கிட்டு வைக்கும்போது பண்ணைக்காரர்கள் கண்ணோட்டமாயிருக்க வேண்டும்; ஆட்களை நம்பக்கூடாது.

4. தீனிப்பட்டி மாதம் மாதம் போட்டுவைக்க வேண்டும்.

5. எருமைகளுக்குப் பசுவைவிடத் தீனி அதிகம் வைக்கவேண்டும்; மழைக்காலத்தில் அதனை இன்னும் அதிகமாக்க வேண்டும். அவைகட்குத் தீனியில் நீர் அதிகம் சேர்க்கவேண்டும். இஃதன்றி அவைகளைப் பசுக்களுக்குமேல் மிகக் கவனத்தோடு பார்த்துவரவேண்டும்.

6. புல், வைக்கோல் தவிர மற்ற இலையுணவுகளை யெல்லாம் பொடி அல்லது சிறு துண்டுகளாக்க வேண்டும்.

7. பால் கறக்க ஒருமணி நேரம் முன்பு தீனிவைக்க வேண்டும்.

8. தீனி வைக்குமுன் கறவைகளைக் குளிப்பாட்ட வேண்டும். எருமைகளைக் கோடைக்காலத்தில் குளிப்பாட்டி மிக்க நேரம் தண்ணீரில் தங்க வைக்க வேண்டும்.

9. எருமைகள் விழுந்து புரண்டு குளிக்க ஒரு தனிக் குளம் இருப்பது நலம்.

10. தீனிக்கிடங்கின் வாயிலைக் கறவைகள் கண்ணுக்குப் படும்படி திறந்து வைக்கப்படாது. அவ்

வாயில் அசைகட்கு மறைவான பக்கத்தில் இருப்பது என்றும் நல்லது.

11. பால் கறந்தமுன்னும் பின்னும் மடியையும் காம்புகளையும் தண்ணீரில் சுத்தம்செய்ய வேண்டும், அல்லது ஈரத் துவாலையால் துடைத்துவிட வேண்டும்.
12. சிறு தீனி கொள்ளும் கறவைகட்கு வைக்கோற் கூளம் மிகுதியாகக் கொடுக்கவேண்டும்.
13. தானிய வகைகளை யெல்லாம் நன்றாய்ப் பொங்கி, ஆறவைத்துக் கொடுக்க வேண்டும்.
14. ஈரம் பட்ட தீனி வகைகள் விரைவிற் கெடும்.

## துணைப் பொருள்கள்

**"பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்**
**கலந்தீ மையாற்றிரிந் தற்று" —திருக்குறள்.**

துணைப் பொருள்களில் முக்கியமானவை பாற் பானைகள். இவைகள் கசிவுபடும் சந்துடையவைகளாகவும், உடைந்துபோன அல்லது விட்டுப்போன வாயுடையவைகளாகவும் இருத்தல் கூடாது. மேலும், அவைகட்குத் துளிப்பாலும் வெளிவர வொட்டாமல் கெட்டி மூடிகள் இருக்க வேண்டும். இவைகளை முதன்முதல் தண்ணீரிற் கழுவிப் போட்டு, பிறகு வெந்நீரில் உப்புக்காரப் பொருள் சேர்த்துக் கழுவிவிட்டு, மறுபடியும் வெந்நீரைக் கொண்டு நன்றாய்க் குலுக்கிக் கொட்டிவிட வேண்டும். சவர்க்காரத் (Soap)தைப் பாற் கலங்கள் கழுவுதற்குப் பயன்படுத்தக் கூடாது. இவைகளைக் கழுவின பிறகு துணியால் ஈரம் போக்கக் கூடாது; தும்பு தூசு ஒன்றுமில்லாத பலகையின்மேல் தலைகீழாகக் கவிழ்த்து

வைத்துச் சூரிய வெளிச்சத்திலேயே காயும்படி செய்யவேண்டும். பாலை ஊற்றிவிட்ட உடனே பாற் கலங்களைக் கழுவிவிட வேண்டும்; நேரஞ் சென்றால் வீச்சம் உண்டாகிவிடும்; வீச்சமுண் டாகிவிட்டால் அது நச்சுப் பூச்சிகட்கு இடங் கொடுக்கும்.

பாற்கலங்கள் செய்யப்படும் பொருள்க ளாவன :—வேறு கலப்பில்லாத நிக்கல், குரோம் நிக்கல், அலுமினியம், குற்றமற்ற எஃகு முதலிய வைகளாம். தகரம்பூசின செப்புப்பானை, துத்த நாகப்பானை, வெண்கலப்பானை, மரப்பானை இவை கள் மேலானவை. வெள்ளிப்பானைகளும், சாண்டி களும் பாலில் புளிப்பேறச் செய்யும். ஓட்டைப் புள்ள கலங்கள் கூடவே கூடா.

கறவைக் காப்பாளிகள், பால் கறக்கிறவர்கள், பால் எடுக்கிறவர்கள், எழுத்தாளர்கள், பண்ட சாலைக்காரர்கள், கண்காணிகள், மற்ற வேலைக் காரர்கள், பண்ணைக்காரர் ஆகிய இவர்களும், இன்னும் பாற் சாலைக்குள் வருவார் போவார் யாவருமே உடல் நலம் உள்ளவர்களாகவும், தூய்மை உடை அணிந்தவர்களாகவும், களங்க மற்ற எண்ணமுடையவர்களாகவும் இருக்கவேண் டும். இக் கட்டுப்பாடுகளை நிறைவேற்றுவதற்குப் பண்ணைக்காரர் மிகக் கண்டிப்பான விதிகளை ஏற் பாடு செய்துவைப்பது தமது பண்ணைக்கு மேன் மையை உண்டாக்கும்.

கொட்டகையில் நல்ல தண்ணீர் வசதி இருக்க வேண்டும்; எருக்கள் உள்ளே சிறிதும் தங்கிப் போகாமல் கழிநீர்க் கால்கள் வேண்டியவரை

காணப்பட வேண்டும். எருக்களைச் சேர்த்து வைக்கக் கொட்டகைக்குப் பின்னால் சிறிது தொலைவில் மாடுகள் எண்ணிக்கைக்குத் தக்கபடி விசாலமான குழிகள் அல்லது பள்ளங்கள் வெட்டி வைத்து, அவைகளை அவ்வப்போது மூடிவிட வேண்டும். அவைகள் அண்டை நீரூற்றுக்களுக்கும், மக்கள் நடமாட்டத்துக்கும் கேடு விளைவிப்பனவாக விடக்கூடாது.

நோய்கொண்ட மாடுகளுக்கென்று தனியிடமொன்று இருக்கவேண்டும். எல்லாக் கறவைகளுக்கும் குளிர்காலத்தில் வைக்கோற் படுக்கைகள் இன்றியமையாதன. பண்டசாலை அழுக்கற்றிருக்க வேண்டும். இவைகட்கெல்லாம் பண்ணைக்காரரிடம் பொது அறிவும், கண்டிப்பான விழிப்புத்தன்மையும் இருக்கவேண்டும். பாற்பண்ணையில் அற்பம் அற்பம் அன்று. ஒரு மனிதனுக்கு நற்குணமெப்படியோ, அப்படியே ஒரு பொருளுக்கும் அதன் நல்ல தன்மை.

## பாற்பண்ணையில் நோய்களுக்கு இடங்கொடுப்பவை

1. பண்டசாலையும் பக்க இடங்களும் தூய்மையற்றிருத்தல்.
2. கறவைகள் உடல் நலி.
3. கறப்பவர்களின் கருத்தின்மை.
4. பாற்பானைகளின் அழுக்கு.
5. பாலைச் சேர்த்துக் குளிர்ச்சியடையச் செய்வதில் தவறுகள்.

6. கொட்டகையில் தும்பு, தூசு, அழுக்குகள்.
7. காற்றோட்டமும் வெளிச்சமும் இல்லாமை.
8. வீச்சமெடுக்கும் தரையும், கழிகால்களும்.
9. பண்ணையாட்களின் ஒழுக்கக் குறைவும் அவர்கள் தம்தம் பொறுப்புக்களை உணராமையும்.
10. தூய்மை யற்ற நீர்.

## பால் சேர்த்துவைத்து வெளியே கொண்டுபோவது

வெய்யிற் காலத்தில் பாலைக் கறந்தவுடன் குளிர வைக்கவேண்டும்; இல்லாவிட்டால் அது புளித்துப் போய்விடும். பானையில் பால் கருகக் கூடாது; கழுத்துப் பிடிக்க இருக்கவேண்டும். பாலைக் கிணற்று நீரிலாவது பனிக்கட்டி நீரிலாவது குளிர வைக்கவேண்டும். மாலைப் பால் சேர்த்தனுப்புவதில் சிறிது விழிப்பாயிருக்கவேண்டும்.

மழைக்காலத்தில் பால் இடத்துக்கிடம் போவது மிக்க விழிப்பாயும் விரைவாயும் நடைபெற வேண்டும். பால் பானை மேலும் சுற்றிலும் பனிக்கட்டியால் மூடப்பட வேண்டும்; சுத்தமான கம்பளி போட்டு மூடவுஞ் செய்யலாம். வெய்யிற காலத்திற் கம்பளியைத் தண்ணீரில் தோய்த்து மூடலாம். தொலைவிலிருந்து வந்த பாலைச் சுட வைக்க வேண்டும். பல்லாருடைய வேலைகளையும் எளிமைப்படுத்தப் பாற்பானைகளை அந்தந்த இடத்தில் அவ்வப்போதே நன்றாகக் கழுவிவிட வேண்டும். எப்போதும் தொலைவிற்குப் பால் போகிறதாயிருந்தால் அனுப்புதல், கொண்டுபோய்ச் சேர்த்தல், வேண்டியவர்களுக்குக் கொடுத்தனுப்புதல் யாவும் மிகமிக விரைவிற் செய்யப்பட வேண்டும்.

இப் பாலை வடிகட்டுதல் நல்லது. பாலில் கட்டிப் படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். தண்ணீர் கலந்த பால் விரைவிற் புளித்துப் போய்விடுவது மல்லாமல் அதனில் அடை இருப்பது பிரியாது.

## முக்கிய கவனிப்புகள்

1. கறவையினிடமிருந்து மேற்கொண்டு பால்கறக்க முயலும் வழிகள் அதன் உடலிலுள்ள பால்படும் உறுப்புக்களை நலிவுபடுத்தும்; அதனால் கறவைக்கு நோயுண்டாகும்.

2. ஒரு கறவையை ஒரே ஆள், கூடுமானவரை நாள் தோறும் ஒரே நேரங்களில் எப்பொழுதும் கறக்க வேண்டும். ஒரே நேரத்திலேயே தீனியும் வைக்க வேண்டும்.

3. பால் கறந்தவுடன் மடிக்காம்புகளைக் கழுவிவிடா விட்டால் அவைகள் வெடிப்புகொண்டு நலிவடையும்; கொப்புளங்களும் அவற்றின்மேல் காணும்.

4 பழைய பாலைப் புதுப்பாலுடன் கலக்கக்கூடாது.

5. பாலின் புளிப்பு நாக்கின் பக்கங்களிலும், அதன் இனிப்பு நாக்கின் நுனியிலும், கசப்பு நாக்கு நுனியிலும் அடியிலும் சுட்டப்படும்.

6. கறவைகளைப் பால் கறக்கும் கொட்டகையில் வீச்சமே கூடாது. அங்கக்களை அண்டையில் இருக்கப்படாது; வெங்காய வீச்சம் பாலுக்கு உகவாது. **கொட்டகையில் சுருட்டுப் பிடிப்போரும் சிகரெட் பிடிப்போரும், கள் சாராயம் குடிப்போரும், இன்னும் மற்ற மயக்கப் பொருள்கள் பயன் படுத்துவோரும் நடமாடக்கூடாது.**

---

## கஉ. பசுமாடு பெருக்கல்
## (Breeding)

பாற் பண்ணைக்காரர் தம் பசுமாடுகளைத் தாமே பெருக்கிக் கொள்ள முயலவேண்டும். அப்படிச் செய்தால் அடிக்கடி தொலைவிற் சென்று மாடு பிடித்துக் கொண்டுவரும் வேலை மிகக் குறைவு படும். அப்படிப்பட்டவர்க்கு நல்ல பொலி காளைகளும் இருக்கவேண்டும். பருவகாலத்தில் காளையினிடம் விடப்படாத பசு கெட்டுப் போய்விடும். விதையொன்று போட்டால் சுரையொன்று காய்க்காதல்லவா! இனம் போல் இனம் உண்டாகும். உயரினக் காளையால் உயரினக் கன்றும், தாழ்வினக் காளையால் தாழ்வினக்கன்றும் உண்டாகும். ஒரு குடும்பத்துக்குள்ளாகவே பசுக்கள் சினைப்படுதல் (Inbreeding) நலமன்று. அதனால் நோய் முதலிய குறைவுபாடுகள் உண்டாகும்.

கன்று போடுமுன் சில நாட்கள் பசுவை வெளியே விடக்கூடாது; ஏனெனில் வெளிக்காற்றினால் அதன் உடம்பில் குளிர்மை மிகவிரைவில் ஏறிவிடும்; மேலும் பலவித இடுக்கண்களும் உண்டாகும். மடி அளவின்றிப் பெருக்கமடைந்தால் பாலைக் கறந்துவிடலாம்; இன்றேல் பசு துன்புறும்.

ஈனு நேரங் கிட்டினால் பசுவினிடம் கவலைப் பார்வை யுண்டாகும், அதன் கண்கள் பளபளத்துக்காட்டும், அது வெறித்துப் பார்க்கும். அப்போது அதற்கு வைக்கோற்படுக்கை போட்டுப் பச்சைப்புல் கொடுக்கவேண்டும். கன்றுபோட்ட

பிறகு அதற்கு மட்டி வெல்லம் கால் சேர், சுக்கு கால் சேர், காம்பு (கன்மட்டி) 5 தோலா இவைகளைச் சேர்த்துத் தீனி கொடுக்க வேண்டும். பசுக்குறியையும், கன்றின்கொப்பூழையும் நல்ல வெந்நீரினால் கழுவிவிடவேண்டும்; ஆமணக் கெண்ணெய், அல்லது கடுகெண்ணெய் இருபது தோலா, கற்பூரம் ஒரு தோலா, கற்பூரத்தைலம் 5 தோலா இவைகள் சேர்ந்த தைலத்தை அவைகளின்மேல் தடவலாம். அப்போது பசுவுக்கு நடமாட்டம் கூடாது; படுக்கையிலிருந்தால் எழுப்பவுங் கூடாது. பச்சைத் தண்ணீரும் குடிக்கக் கொடுக்கக்கூடாது. கன்று போட்டு நாலுமணி நேரத்துக்குப்பின் கண்கள் எந்த நிறங்கொண்டு பளபளப்பாக இருந்தாலும், கன்னங்கள் பள்ளம் பட்டாலும், மூன்று நாளைக்குத் தவிட்டுக்குழம்பு கொடுக்கவேண்டும். முதல் நாள் தண்ணீரை வைக்கவேண்டாம்; பிறகு எழுநாள் தண்ணீரைச் சிறிது சுடவைத்துக் கொடுக்கவேண்டும். கழுவுவதும் அப்படியே. கோதுமைத் தவிடு ஒரு சேர், கறிமஞ்சள் தூள் ஐந்து தோலா, இவைகளுடன் உப்பு சேர்த்து எழுநாள் கொடுக்கவேண்டும். பச்சைப்புல்லும் வேண்டிய அளவு போடவும். முதல் மூன்று நாள் வைக்கோலே கூடாது. அப்போது செயற்கையுணவால் விரைவில் நவறுக நுண்டாகும். கன்றினை மூன்றுநாள் கட்டிவைக்கக்கூடாது. அப்போது பசுவை நாளுக்கு மூன்று தடவை அறக்கறக்க வேண்டும். இருபது நாள்வரை இப் பசுவின்பால் குழந்தைகள் உண்ணப்படாது. எப்போதும் கன்று தாயுடனிருப்பது நல்லதல்ல.

## ஓங்கோல் இனம்
## (Ongole Breed)

நல்லினப் பசுக்களும் எருதுகளும் குண்டூர் நெல்லூரைச் சேர்ந்த ஓங்கோல் சுற்றுப்புறங்களில் காணப்படுகின்றன. இவைகளையே நெல்லூர் மாடுகள் என்றும் சொல்லுவார்கள். இவைகள் குண்டலகாமா, அல்லாறு ஆறுகளின் நடுவணுள்ள ஓங்கோல், கந்துகூர் தாலுக்காக்களில் காணப்படுகின்றன. குண்டூர் தாலுக்காவிலும், நெல்லூரைச் சேர்ந்த தரிசி தாலுக்காவிலும் இத்தகையன காணப்படும். பாபட்லா, நரசார்வ்பேட், வினுகொண்டா முதலிய இடங்களினின்றும் கொண்டுவரப்பட்ட மாடுகளும் இங்கே காணப்படுகின்றன. தென்னிந்தியாவில் ஓங்கோல் இனங்களே சிறந்தவையென்று சொல்லப்பட்டாலும், அவை பத்துப் பதினைந்து ஆண்டுகட்கு முன்போல இப்போது அவ்வளவு வளர்ச்சியுள்ளனவாகக் காணப்படுகிறதில்லை. வரவர மேய்ச்சற் காலகள் குறைந்து போய்விட்டபடியால் வேளாண்மை செய்பவர் எருதுகளின் மேல் அக்கறையுள்ளவர்களாக இருக்கிறார்களே யொழியப் பசுக்களின் மேல் அவ்வளவு பராமரிப்பு வைக்கிறதில்லை. எருதுகளுக்குப் போட்டு மிகுந்தது பசுக்களுக்குக் கிடைக்கும்.

இப்போது ஓங்கோல் பசுக்கள் நாலு அல்லது ஐந்து ஆண்டுகள் சென்றுதான் கன்று போடுகின்றன; இரண்டாண்டுக்கொருதரம் ஈனுகின்றன. இவைகள் நாளொன்றுக்கு இரண்டுபடி-



ஓங்கோல் பசு

பக்கம் 124.

பால் தரும்; ஏறக்குறைய எட்டுமாதம் கறக்கும். இப் பசுக்கள் தம் ஆயுளில் நாலைந்து கன்றுகளை போடும். தனிவளர்ப்புக் கொண்ட பசுக்கள் மூன்றாண்டில் ஈனும்.

ஆனிமாதத்தில பசுக்களெல்லாம் காட்டில் மேய்வதற்காக இலம்பாடிகளிடம் விடப்படுகின்றன. தைமாதம் முதல் பங்குனிமாதம் வரையிலும், ஆவணிமாதம முதல ஐப்பசிமாதம் வரையிலும் அப் பசுக்கள் பலப்படுங் காலமாகும். அப்போது அவைகள் காட்டில் மேய்கிற படியாலும், அங்கே பல்வகை எருத்து மாடுகளும் காணப்படுகின்றபடியாலும், அப் பசுக்கள் ஈனும் கன்றுகள் எல்லாம் சிறந்தவை என்று சொல்வதற்கில்லை.

அங்கே மாலவாடு என்று சொல்லப்படும் ஓர் இனத்தார் இருக்கின்றனர். அவர்கள் வயலில் வேலை செய்கின்றவர்கள்; நெய்தல் தொழிலும் அவர்களுக்குண்டு. இவர்கள் சில கிடாரிக் கன்றுகளை வாங்கித் தாங்களே வளர்க்கின்றனர். மாலவாடுப் பெண்கள் வயலில் வேலை செய்யும் நேரம் போக மிருந்த நேரத்தில் புல் சேர்த்துக்கொண்டு வந்து கன்றுகளுக்குப் போடுகின்றனர்; தவிடும் வைக்கின்றனர். ஒரு குடும்பம் முழுமையும் அக் கன்றுகளின்மேல் அக்கறை யெடுத்துக்கொள்ளுகின்றது. அக் கன்றுகள் இரண்டு ஆண்டில் பலப்படும் பக்குவத்தை யடைகின்றன. அவை பேறு காலம் அடுத்தபோது அம் மாலவாடுகள் அவைகளைச் சென்னைக்குக் கொண்டுவந்து விலைப்படுத்துகின்றனர். நல்ல ஓங்கோல் பசுக்கள் கிடைக்கும் இடங்களாவன:—

நெலட்டூரு, குண்டபல்லி, எண்டலூரு, தோட்ட வரப்பாடு, குருவரெட்டிப் பாளையம், சந்திரபாடு, நந்திபாடு, முங்கனூரு ஆகிய இவைகளாம்.

## காங்கய இனம்
## (The Kangayam Breed)

காங்கயம் இனங்கள் கோயம்புத்தூர் ஜில்லாவுக்குத் தெற்கிலும், தென்கிழக்கிலுமுள்ள இடங்களிற் காணப்படுகின்றன. இவைகளிற் சிற்றினத்தவை காங்கயம், தாராபுரம், உடுமலைப்பேட்டை, பொள்ளாச்சி, பல்லடம், ஈரோட், ஆகிய இவ்விடங்களிலும்; பேரினத்தவை கரூர், அறவக்குறிச்சி, திண்டுக்கல், ஆகிய இவ்விடங்களிலும் காணப்படுகின்றன. அங்குக் குடியானவர்கள் பத்து இருபது மாடுகள் வீழுககாடு வளர்க்கின்றனர். அவர்கள் அவைகளை வாங்க வருவோர்க்கு விற்கின்றனர்; அல்லது அவிஞசி, திருப்பூர், கண்ணபுரம், மதுரை ஆகிய சந்தைகூடும் இடங்கட்குக் கொண்டுபோகின்றனர்.

இவைகளிற் சிறந்தவை தாராபுரம் தாலுக்கா பழையகோட்டைப் பட்டகார் இடத்திலும், சேலம் ஜில்லா ஹோசூரிலிருக்கும் சர்க்கார் கால்நடை ஆராய்ச்சிப் பண்ணையிலும் கிடைக்கப் பெறுகின்றன. மாடு வளர்ப்பவர்களிற் பலர் இவ்விடங்களிலிருந்தே கன்றுகள் வாங்கிக்கொண்டு போகின்றனர். பட்டகார் ஒரு பெரிய மாட்டுப்பண்ணை வைத்திருக்கின்றார். அவரிடம் ஐந்நூறு முதல் ஆயிரம் எருதுகளும், பசுக்களும் உண்டு.



அலிக்கார் பசு

பக்கம் 127.



காங்கேய நல்ல இனப் பசு

பக்கம் 127.

அவர் அவைகளைத் தேர்ந்தெடுத்துத் தக்கதோர் முறையில் வளர்க்கின்றனர். இத்தகைய வளர்ச்சியும் வளப்பமுங்கொண்ட மாடுகள் அப் பக்கங்களில் அகப்படுவது அருமை. இவருக்குப் பதினையிரம் ஏக்கர் கொண்ட புல் நிலப் பரப்பு உண்டு. இவர் காளைகளையும், கிடாரிகளையும் ஆண்டுக்குத் தக்கபடி வெவ்வேறாகப் பிரித்து, வேலி கட்டியுள்ள வெவ்வேறு நிலப்பகுதிகளில் மேயவிடுகின்றார். பலப்படும் தகுதியுள்ள முப்பத்தைந்து பசுமாடுகளுடன் ஒரு காளைஎருதும் ஓரிடத்தில் மேய்கின்றது. பசுமாடுகள் பெருக்குவோர்க்கே அவர் தம் மாடுகளை விலைப்படுத்துகின்றார்.

பட்டகார் தம் நிலத்தின் சில பகுதிகளைத் தம்மிடம் வேலை செய்யும் குடும்பத்தாருக்கு மிகக் குறைந்த வாடகைக்கு விட்டிருக்கின்றார்; ஏனெனில் ஒவ்வொரு குடும்பமும் ஒவ்வோர் ஆளைத் தம்மிடம் வேலைக்கு விடவேண்டும்; அவனுக்கு நடுப்பகலுணவு உண்டு. மேலும் அவர் தம் பாயக்காரிகளிடம் எருதுகளையும் விட்டுவைக்கின்றார்; எந்த ஏற்பாட்டின்மேல் என்றால்: அவைகளுக்குப் பிறக்கும் கன்றுகளில் எவ்வெவை அவருக்கு வேண்டுமோ அவ்வவற்றை அவருக்கே முன்னேற்பாட்டு விலைப்படி கொடுத்துவிட வேண்டும்.

## ஹலிக்கார் இனம்

ஹலிக்கார் இன மாடுகள் துமுக்கூர், ஹாசான், மைசூர் ஆகிய இப் பகுதிகளில் உண்டு. நாகமங்கலம், குனிகல், குப்பி இந்த தாலுக்காக்களில் இவை அதிகம். அங்குப் புல் மைதானங்கள் இல்

லாதபடியால் அம் மாடுகள் பெரும்பாலாய் வீடுகளிலேயே வளர்கின்றன.

இங்குள்ள பசுமாடுகள் தசைக்கட்டுள்ளவை; ஒல்லியான முசுப்பும் கொம்பும் உடையவை. இவைகள் எல்லாம் இளஞ்சாம்பல் நிறமுள்ளவை. அவைகளின் மடிகள் சிறிதாயிருந்தபோதிலும் அழுத்தமானவை; காம்புகள் சிறிதும் கெட்டியுமானவை. அவைகள் நல்ல கறவைகள் அல்ல. ஆனாலும் பால் இனிப்பாயிருக்கும்; வெண்ணெய் மிகவுண்டு. அவைகள் வீடுகளில் வளர்பவையாயினும் உக்கிரமுள்ளவை, அடங்காதவை.

## எருமை மாடுகள்

எருமை மாடுகள் கஞ்சம், விசாகப்பட்டணம் ஜில்லாக்களில் ஏராளமாகக் காணப்படுகின்றன. அவ்விடங்களில் அவைகள் வண்டியிழுத்தல், ஏருழுதல் முதலிய வேலைகளிற் பயன்படுத்தப்படுகின்றன. அங்கே எருத்து மாடுகள் அவ்வளவாகக் கிடையா. அம் மக்கள் எருமைகளையும் கிடாக்களையும் ஒரேயாதிரியாகப் பராமரித்து வருகின்றனர். நெய் மிகக் கிடைக்கும். கண்டூர், கர்நூல், பெல்லாரி, கடப்பை ஆகிய நான்கு ஜில்லாக்களில் எருமை மாடுகள் எண்ணிக்கையிற் பெருத்திருக்கின்றன. தென்னிந்தியாவில் நெய் கிடைக்கும் கோயம்புத்நூர், சேலம், மலையாளம் ஆகிய இவ்விடங்களிலும் எருமை மாடுகள் மிகவுண்டு. அவைகள் காடுகளிலேயே மேய்ந்து கிடக்கின்றன. எருமைகள் கன்றுபோட சில நாட்களுக்கு முன்பு வீட்டுக்கு வருகின்றன.



கராச்சி முர்ரா எருமை

பக்கம் 128.

முர்ரா (Murrah or Delhi) எருமாடுகள் கிடைக்குமிடங்கள் :—சென்னை மாகாணத்தில் குண்டூர், கோயம்புத்தூர், பட்டாம்பி, கோவில் பட்டி, தல்லிப்பரம்பா ஆகிய சர்க்கார் கால்நடை விவசாயப் பண்ணைகளில் கிடைக்கும். இவ்விடங்களில் அவர்கள் அவைகளைக் குடியானவர்களுக்கு விலைக்குக் கொடுக்கின்றனர்.

நீலகிரி மலைமேலிருக்கும் தோதவர்களுடைய எருமாடுகள் நல்ல பால் கொடுப்பவை; நாளொன்றுக்குப் பத்திருபது படி கறக்கும்; பால் மிகவும் இனிமையானது. அவைகள் பார்ப்பதற்குக் கெம்பீரமுள்ளவை. இவற்றின் விலையும், பராமரிப்பதற்குண்டான செலவும், அக்கறையும் மிக வேண்டுமாகையால் சாதாரண மக்கள் இவைகளை வாங்க மயங்குவர். இவைகளை வாங்கிச் சிலர் பெரும் பயன் அடைந்திருக்கின்றனர்.

குண்டூர், கர்நூல், கடப்பை, கோயம்புத்தூர், தென்கிழக்குச் சேலம் ஆகிய இவ்விடங்களில் நல்ல எருமைகள் இருக்கின்றன என்கிறார்கள். ஆயினும் அவைகளுடைய நாளொன்றுக்கு மூன்று நாலு படி பாலே கறக்கும். கோயம்புத்தூரில் இருக்கும் பயிர்வழிக் கலாசாலையில் நில்லிக் கடாக்கள் வைத்துக் கொண்டிருக்கின்றனர். பக்கத்தூர்களிலுள்ளார் தங்கள் எருமைகளை அவ்விடங்கொண்டு வந்து பலப்படுத்திக்கொண்டு போகின்றனர். ஆகவே கோயம்புத்தூருக்குப் பத்துமைற் சதுரத்திலுள்ள ஊர்களில் நல்ல பால் கறக்கும் எருமைகள் காணப்படும். குண்டூர் கால்நடைப் பண்ணையைச் சுற்றியுள்ள ஊர்களிலும் அவ்வாறே.

சென்னைக்கு எருமைகள் கடப்பை, குண்டூர், ஜில்லாக்களிலிருந்தே பெரும்பாலும் வருகின்றன. கன்றுக்குப் பாலை விடாமற் கறத்தலால் இவ் எருமைக் கன்றுகள் இங்குப் பெருகுவதில்லை; ஆனாலும் அவ்வெருமைகளுக்குக் கன்றில்லாமலே பால் கறக்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது.

---

# பின் இணைப்பு

## க. பாற்பண்ணையில் கவனிப்புக்குரியவை பல்வகை

1. அவ்வப்போது பசுக்களுக்குக் கல்லுப்பை நக்கக் கொடுக்க வேண்டும். அவ்வாறு ஒரு மாதத்தில் இரண்டு பவுண்டு உப்பு உட்செல்ல வேண்டும். உப்புச் செங்கல்களைக் கொட்டகையில் பசுக் களின் நாக்கு எட்டும்படி கட்டித் தொங்கவிட வேண்டும்.

2 வெண்ணெய் பெறுவதற்குப் பருத்திக்கொட்டை நல்லது,

3. தூய நீர் தூய பால் கொடுக்கும்.

4. பருத்திப் பிண்ணாக்கு பசுக்களின் பாலளவைக் குறைக்கும்; பருத்திக் கொட்டையால் பால் காணும்.

5. நல்ல ஆளிவிதைப் பிண்ணாக்கிருந்தால் மற்றெந்தப் பிண்ணாக்கும் வேண்டியதில்லை. ஏனெனில் இதனில் உடலுக்கு வேண்டியவை எல்லாமுண்டு.

6. கன்று போட்ட பசுவுக்குக் கோதுமைத் தவிடு நல்லது.

7. புற்பயிர் நிலத்தில் பப்பாளிமரம் வளர்த்தல் பசுவுக் கும் நல்லது; எருவுக்கும் நல்லது.

8. சென்னை மாகாணத்தில் சாதாரணமாக, மாடு களுக்கு இரண்டரை ஆண்டில் இரண்டு பல்லும், (Permanentteeth), மூன்றரை யாண்டில் நான்கு பல்லும், நாலரை யாண்டில் ஆறு பல்லும், ஐந்தாண்டில் எட்டுப் பல்லும் படும்.

9. பண்ணையில் பால் கறக்கிற ஆட்களுக்கு ஒரே விதமான கறுப்போ அல்லது சிவப்போ கலவாத

உடை இருக்கவேண்டும். அவர்கள் மிக விரை வாய்க் கறக்குந் திறமை யுடையவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் பண்ணைக்கு அருகேயே குடியிருக்க வேண்டும். பத்துப் பசுக்களையும் பத்து எருமைகளையும் ஒருவன் கறக்கலாம்.

10. கோதுமையும், வாற்கோதுமையும் நல்ல உணவுப் பொருள்கள்; நோய்மாடுகளுக்கு உப்புக்கலந்த சூடான அரிசிக்கஞ்சி நல்லது.

11. நெல்வகைத் தழைகள் பருப்புவகைத் தழைகள் மற்றப் பயிர்வகைத் தழைகள் எல்லாம் வைக் கோலே; வைக்கோல் என்பது போர்படுத்துப் பிணையடித்தலால் பிரிவுபடும் நெல் தவிர மற் றெல்லாமுமே.

12. கன்று போட்டவுடன் பசுக்களுக்கு வயிற்றுப் போக்குக்காக மருந்துப்புக் (Epsom salt) கொடுக்கவேண்டும். தவிட்டுக் குழம்பும் கொடுக் கலாம்.

13. ஊன்தரு பொருளும், எண்ணெய்ப் பசையும் அரிசிக்கு மேற்புறத்திலேயே காணப்படுகின்றன. அரிசி தீட்டுவதினால் இவைகள் போய்விடும். கைக்குத்தல் அரிசி கஞ்சிக்கு நல்லது.

14. தயிர் நீர் (Whey):-பாலில் சுண்ணும்பு நீரோ எலு மிச்சஞ்சாறோ விட்டால் மிதக்கும் நீர் தயிர்நீர் எனப்படும்; இஃது சிறு கன்றுகளுக்கு உணவுப் பொருள்களில் ஒன்று.

15. பச்சைப்புல் இல்லாவிட்டால் தீனிச் செலவு மிகும்.

16. பாற்பண்ணைக்காரருக்கு வேண்டிய தானியப் பயி ரும் இருக்கவேண்டும்.

17. புற்பயிருக்குக் குறைவு வராமல் நீர் பாய்ச்ச வேண்டும். அந் நிலங்களுக்கு வேலிகட்டியிருக்க

வேண்டும். அங்குச் சுற்றி நிழல் தரு மரங்களும் வைத்து வளர்க்க வேண்டும்.

18. தாராளமாய் வெய்யில்பட வளரும் மரஞ் செடி கொடிகளில் உய்வனவுகள் எல்லாம் உள்ளேறி யிருக்கும். வெய்யில்பட வெளியேயிருக்கும் மக்கட்கும் மாடுகட்கும் அப்படியே.

19. உய்வனவுகள் இருக்கும் உணவுகளால் உய்வனவு கள் கொண்ட பால் உண்டாகும்.

20. பால் வளங்கொண்ட பசுக்கள் பால்வளமுள்ள கன்றுகள் ஈனும்; ஆகையால் தாயைப் பார்த்துக் கன்றைக் கொள்ளலாம்.

21. ஒரு பசு தன் நீரையும் பாலையும் தானே உண்டால் அது தண்ணீர்ப் பட்டினி என்று கண்டு கொள்ளவும்.

22. கொதிக்கவைத்த பாலில் பாலேடு அதிகம்.

23. பாலாகட்டும், ஏடாகட்டும், வெண்ணெயாகட்டும் வீச்சத்தின் மணத்தை விரைவிற் கொண்டுவிடும்.

24. பால் காய்ச்சும்போது வீச்சம் பட்டால் அப்பால் விரைவில் புளித்துப் போகும்.

25. **கன்றுகள்:**—கன்றுகளின் உடம்பின்மேற் காணும் தோல் (Mange) நோய்களுக்கு வேப்பிலைக் கொழுந்துகளைக் கொதிக்கவைத்துக் குழம் பாக்கி உள்ளுக்குக் கொடுக்கலாம்; பால் குடிக் கப் போகுமுன் மூன்று முதல் ஐந்து அவுன்சு வேப்பெண்ணெயும் கொடுக்கலாம். கன்றுக ளுக்கு ஓடி விளையாட ஒரு தனியிடம் இருக்க வேண்டும்; அப்போது தாய்ப்பசுக்கள் உடன் இருக்கப்படா; அவ்விடம் மணல் தரையாய் இருந்தால் போதும். கன்றுகளைப் பகலெல்லாம் மேயவே விட வேண்டும். ஆறுமாதங்களுக்குப்

பின்பு பசுக்களுக்கு வைக்கும் தீனியையே சிறிதளவாகக் கன்றுகளுக்கும் வைக்கலாம். கன்றுக்குப் பால் இல்லாவிட்டால், வேறு பசுப்பாலாகிலும், தயிர் நீராகிலும் கொடுக்கலாம். பால் மறக்கச் செய்ய வேண்டுமானால் பதினைந்துநாளாவது தாய்ப்பால் கொடுத்துத் தீரவேண்டும். முதல் நான்கு மாதகாலம் கன்றுகளைப் புல் நிலத்தில் மேய விடவேண்டாம். **கன்றுகள் போக்கில்லாமல் நலமாயிருப்பதுவே பாற்பண்ணைக்கு வெற்றியாகும்.**

26. எருமைகளையும் பால் மரத்துச் சினைப்படாமல் இருக்கும் நாட்களில் ஏர் உழுதல், வண்டியிழுத்தல் முதலிய வேலைகளுக்கும் பயன்படுத்திக் கொள்ளலாம். அதனால் அவைகளின் உடல்வலுக்கும், ஒழுங்காகக் கன்றுகளும் போடும். ஆனால் வேலைக்குத் தகுந்த தீனியும் அதிகமாக வைக்க வேண்டும்.

---

## ௨. புல்லைப் புதையல் போடுதல்

புல்லைப் புதையல் போட்டுச் சில நாட்கள் கழித்து எடுத்துப் போடுதல மாடுகளுக்கு நன்மைபயப்பது மல்லாமல் புல்லும் தட்டும் அகப்படாத காலத்தில் பயிரிடுவோர் பண்ணைக்காரர் இவர்களின் கவலையை ஒழிக்கும். இன்னும் இதனால் உண்டாகும் நன்மைகள் என்னவென்றால்: புதையல் புல்லை மாடு இன்பமாய்த் தின்னும், இலேசில் செரித்துக்கொள்ளும். மேலும் புல்லுள்ள காலங்களில் மாடுகள் கழித்து விடும் புல்லைப் புதையல் போட்டுப் போடலாம்.

புதையற் பள்ளம் மேடான இடத்தில் வெட்ட வேண்டும். அது மிக ஆழமாக இருக்கப்படாது. 15 அடி நீளமும், 10 அடி அகலமும், 8 அடி ஆழமுமாக ஒவ்வொரு குழியும் இருக்கவேண்டும்; பக்கங்கள் செங்குத்தாக இருக்கவேண்டும். மணல் கலந்த நிலமாக இருந்தால் பக்க மண் சரியாதபடிக் கம்பிகள் அடித்தோ மற்றும் எவ்விதமாகவோ பக்குவம் பண்ணவேண்டும்; காரை கட்டுவது நல்லதன்று.

புல், சோளத்தட்டு, பட்டாணித்தழை, யானைப் புல், சூரியகாந்தி, மக்காச்சோளம், பச்சை ஓட்ஸ், முதலியவற்றைப் புதையல் போடலாம். மக்காச் சோளம் எல்லாவற்றிலும் சிறந்தது. சூரியகாந்தி சத்துடையது; ஆனால் அதனைப் பூ இருக்கும் போதே வெட்டிவிட வேண்டும். புல்லையும் பூவோடு அறுக்கவேண்டும். மக்காச்சோளத்தைக் கதிர் விடும்போது அறுக்கவேண்டும். தழையும் புல்லும் அதிகம் பழுத்திருந்தால் பதங்கு பதங்காகத் தண்ணீர் தெளித்துப் போடலாம்; அல்லது இவைகளைப் பச்சைத் தழைகளோடு சேர்த்தும் போடலாம். புதையல் போடுதல் காலை நேரங்களிலேயே செய்யவேண்டும். பள்ளத்தில் போட்ட தழையை மாடுகளைக்கொண்டோ, மனிதரைக்கொண்டோ நன்றாக அழுந்தும்படி செய்ய வேண்டும்.

இரண்டு மூன்றடி உயரம் மண்போட்டுக் குழியை மூடவேண்டும். நடுப்பகுதியில் மண் உயரமாகப் போட்டு மூடி நாலுபக்கங்களிலும் வாட்டமாக இருக்கும்படி மண்ணை அழுந்தத்

தட்டிவிட வேண்டும். குழியைச் சுற்றி 2, 3 அடி அகலம் மண்ணால் முட்டுக்கட்ட வேண்டும். அதனைச்சுற்றி நீர்ப்போக்குக்காக 1 × 1 அடி கால் வாயும் வெட்டிவிட வேண்டும். குழியின் மேலாவது, பக்கங்களிலாவது வெடிப்புக்கள் உண்டானால் அவைகளை அவ்வப்போது மண்போட்டு அழுந்த மூடிவிட வேண்டும். எவ்வகையாலும் குழியில் காற்று நுழையாதபடியும், நீர் கசவாத படியும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

ஆறு முதல் பத்து மாதங்களுக்குள் குழியைத் திறக்கலாம். இரு முழ அகலம் அடி வரையில் அறுத்துத் தோண்டி எடுத்துக்கொண்டு உடனே அவ்விடத்தை மண் போட்டு மூடிவிட வேண்டும். இவ்வாறே வேண்டும்போதெல்லாம் செய்யவும். இங்கிலாந்தில் புதையல் குழியை இரண்டாண்டுக்காலம் திறக்காமலே வைத்திருக்கின்றார்களாம். இப் புதையற் புல் கறவைகளுக்கு மிக நல்லது; பாலின் அளவு மிகும். வேலைசெய்யும் மாடுகளுக்கும் வலிவுண்டாகும். கோமாரி கொண்ட மாடுகள் இதனை இலேசாகத் தின்றுவிடும். ஒரு மாட்டுக்கு 30 முதல் 40 பவுன்கள் போடலாம். சில மாடுகள் முதன் முதல் இதனை வெறுக்கும்; அப்போது புதையற் புல்லை வைக் கோலோடு சேர்த்துச் சில நாட்கள் போட்டால் பிறகு தனியாகத் தின்னப் பழகிவிடும். இதனை ஓராண்டுக்கு மேற்பட்ட கன்றுகளுக்கும் போடலாம்.

கொழுப்புப் புலங்களில் மதர்த்து வளர்ந்த புல்லை 10, 12 மணி நேரம் வெளியே போட்டு

வைத்துப் பிறகு குழியில் போடவேண்டும். இளம் புல்லைப் புதையல் போட்டால் எடுக்கும்போது நாற்றமெடுக்கும். ஓரத்தில இருக்கும் புதையற் புல் மாடுகளுக்குத் தின்ன அவ்வளவு இனிமை கொடாது; ஆனாலும் அதனைத் தள்ளிவிடக் கூடாது.

---

## ௩ அளவைகள்

1 காலன் பால் 10 பவுண்டு
1 புட்டி ,, 1 பவுண்டு 4 அவுன்சு.
1 படி ,, 4 பவுண்டு.
1 சேர் ,, 2 பவுண்டு.

தாரதர திடத்துவம் (Specific Gravity)
தண்ணீர் 1000; பால் 1028—1032

---

வெண்ணெய் 100 பங்குக்கு நெய் 70 ஆகும்.

---

1 கிராம் (Gram) என்பது $17\frac{1}{2}$ நெல்லெடை.

ச. இன்னின்ன வகையான கலப்புத் தீனிகளில் ஊன் உணவும், பசை உணவும் இவ்வள விவ்வளவு இருக்கின்றன என்பது

| கலப்புத்தீனி 100 பங்குக்கு | | ஒரு பவுண்டு கலப்பில் இருக்கும் ஊன் உண | ஒரு பவுண்டு கலப்பில் இருக்கும் பசை உண. |
|---|---|---|---|
| 1. பஞ்சக் கொட்டை | ... 25 | | |
| கோதுமைத் தவிடு | ... 20 | 0·13 பவுண்டு | 0·77 பவுண்டு |
| சோளம் | ... 55 | | |
| 2. ரேப்கிழங்கு பிண்ணாக்கு | ... 25 | | |
| பஞ்சுக் கொட்டை | ... 35 | 0·14 பவுண்டு | 0·74 பவுண்டு |
| கோதுமைத் தவிடு | ... 10 | | |
| வாற் கோதுமை | ... 30 | | |
| 3. ரேப்கிழங்கு பிண்ணாக்கு | ... 30 | | |
| வாற் கோதுமை | ... 50 | 0·13 பவண்டு | 0·74 பவண்டு |
| ஓட் தானியம் | ... 20 | | |
| 4. கடலைப் பிண்ணாக்கு | ... 15 | | |
| கொள்ளு | ... 40 | 0·14 பவுண்டு | 0·74 பவுண்டு |
| சோளம் | ... 40 | | |
| கொள்ளுப் பொட்டு | ... 5 | | |

| | | | | |
|---|---|---|---|---|
| 5. | எள்ளுப் பிண்ணாக்கு | ... 15 | 0·14 பவுண்டு | 0·72 பவுண்டு |
| | கொள்ளு | ... 40 | | |
| | வாற் கோதுமை | ... 40 | | |
| | அரிசித் தவிடு | ... 5 | | |
| 6. | கடலைப் பிண்ணாக்கு | ... 10 | 0·13 பவுண்டு | 0·73 பவுண்டு |
| | பஞ்சுக் கொட்டை | ... 20 | | |
| | அரிசித் தவிடு | ... 10 | | |
| | சோளம் | ... 30 | | |
| | கொள்ளு | ... 30 | | |

ரு. இன்னின்ன தீனிப் பொருள் இவ்வளவுக்கு இவ்வளவு வற்றுப்பொருள், சேரிக்கக்கூடிய ஊன் உணு, பசைப் பொருள்கள் இருக்கின்றன என்பது.

| தீனிப்பொருள் | இவ்வளவு பவுண்டுக்கு | வற்றுப் பொருள் | சேரிக்கக்கூடிய ஊன்உணு | பசைப் பொருள் |
|---|---|---|---|---|
| 1. கோதுமைக் கூளம் ... | 9 பவுண்டு | 8·1 | ...... | 1·99 |
| 2. சோளத் தழை (பதையல்) ... | 10 ,, | 3·0 | 0·07 | 0·87 |
| 3. கினியா புல் ... | 12 ,, | 3·0 | 0·09 | 0·92 |
| 4. கடலைப் பிண்ணாக்கு ... | 1 ,, | 0·9 | 0·42 | 0·68 |
| 5. வாற் கோதுமை ... | 4½ ,, | 4·0 | 0·36 | 3·44 |
| 6. கோதுமைத் தவிடு ... | 1 ,, | 0.9 | 0·11 | 0·51 |
| 7. கொள்ளுப்பொட்டு ... | 1 ,, | 0·9 | ...... | 0·42 |
| 8. நெல் வைக்கோல் ... | 10 ,, | 9·0 | ...... | 1·83 |
| 9. ரேப்கிழங்குப் பிண்ணாக்கு ... | 1 ,, | 0·9 | 0·28 | 0·74 |
| 10. ஓட் தானியம் ... | 4 ,, | 3·6 | 0·28 | 2·64 |
| 11. எள்ளுப் பிண்ணாக்கு ... | 1 ,, | 0·9 | 0·38 | 0·75 |

கூ. வீட்டுப்பாற் பொருள்களின் உள்ளுறு பொருள்கள்

| உள்ளுறு பொருள்கள் | பசு | எருமை | ஆடு | பால் ஆடை | வெண்ணெய் எடுத்தபால் | மோர் | தயிர் நீர் (whey) | வெண் ணெய் | சீழ்ப் பால் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| நீர் | 86 | 82·4 | 85·5 | ...... | 90·2 | 90·5 | 92·2 | 14·5 | 7·5 |
| கொழுப்பு | 4·5 | 8·1 | 4·0 | 57·0 | 1·0 | 0·2 | 0·3 | 84·5 | 6·0 |
| தசைப் பொருள் (Protein) | 3·8 | 4·3 | | ...... | 4·0 | 3·3 | ...... | 0·2 | |
| சர்க்கரை (Sugar) | 4·8 | 4·5 | 10·5 | ...... | 4·0 | 5·3 | 7·5 | ...... | 19·0 |
| உப்புக்கள் (Salts) | 0·7 | 0·7 | ...... | ...... | 0.8 | 0·7 | ...... | ...... | |

(எ) தாய்ப்பால் விலங்குப் பால்களின் உள்ளுறு பொருள்களின் அட்டவணை

| உள்ளுறு பொருள் | தாய்ப் பால் | பசுப் பால் | வெள்ளாட்டுப் பால் | செம்மறியாட்டுப் பால் | எருமைப் பால் | குதிரைப் பால் | கழுதைப் பால் |
|---|---|---|---|---|---|---|---|
| நீர் | 87·58 | 86·27 | 86·68 | 82·98 | 82·16 | 90·48 | 90·12 |
| தசைப் பொருள் (Protein) | 2·01 | 3·39 | 3·76 | 5·15 | 4·72 | 2·15 | 1·85 |
| கொழுப்பு (Fat) | 3·74 | 4·68 | 3·82 | 6·18 | 7·51 | 1·14 | 1·37 |
| சர்க்கரை (Sugar) | 6·37 | 4·94 | 4·64 | 4·73 | 4·77 | 5·87 | 6·19 |
| கனிப் பொருள் (Salts) | 0·30 | 0·72 | 1·1 | 0·96 | 0·84 | 0·36 | 0·47 |
| | 100 | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |

## அ. நல்லின மாடுகள்

1. இந்தியாவின் நல்லினப் பசுமாடுகள் :—

ஆலம்பாடி (மைசூர்பக்கம்), பாஹூர், பார்க்கூர், பாகனேரி, தியோனி (ஹன்சி), தானி, கேயலு, கிர், அலிகர், ஹரியானு, ஹிஸ்ஸார், காங்கயம், கங்ராஜ், கங்காதா, கெரிகர், கில்லரி, கிருஷ்ணு பள்ளத்தாக்கு, லொஹானி, மார்வை, மிவாட்டி, நாஜோரி, நின்னரி, ஓங்கோல், பொன்வார், ராத், சிவப்புசிந்தி, சகிவால், சிரி, தர்ப்பார்க்கார்.

2. தென்னிந்திய இனங்களின் தன்மைகள் :-

க. **ஓங்கோல்** :-நல்ல வேலைசெய்யும் எருதுகள்.
நல்ல பால்கறக்கும் பசுக்கள்.
உரத்த குளம்புள்ளவை.

உ. **காங்கயம்**:-வேலையில் சுருசுருப்பு.
களிமண் உழவுக்கு நல்லது.
உரத்த கால் உடையது.

ந. **ஹலிக்கர்** :- உக்கிரத் தன்மையுடையது.
பாறைநில உழவுக்கு நல்லது.
பெருங் கண்கள் உடையது.

3. எருமை இனங்கள் :—(இந்தியாவில்).

ஜாபர்பாடி, குண்டி, மேசனு, முர்ரா, நாகபூரி (பந்தர்ப்பூர்), நிலி, ரவி.

### சில குறிப்புக்கள்

4. சாம்பல்வெள்ளை வடநாட்டு மாதிரிகள் :-
கான்கிர்ஜா, மல்லி, ஹரியானு, ராத், கேயசோ—

ஓங்கோல் : இவைகளைக் கவலை எடுத்துக்கொண்டு பாதுகாக்க வேண்டும். இவற்றில் எருதுகள் நல்ல வேலை செய்யும்; பசுக்கள் நல்ல பால் கறக்கும்.

5. தானி :-இவை சிறியவை, நீண்டிராது; கால்தாழ்வு ; மிகச் சுருசுருப்புள்ளவை ; கறுப்புப் புள்ளிகள் கொண்ட வெண்மை நிறம் ; அழுத்த முள்ளவை, உடற் கட்டுள்ளவை, வலுத்தவை ; வாற்பக்கம் உருட்சியாய்க்காணும் ; சாதாரண முசுப்பு ; காதுகள் சிறிது தொங்கும். பாதைகளில் பளுவண்டி இழுக்கும். பசுக்கள் நல்ல கறவைகளல்ல.

6. சாகிவால் :-இவை பஞ்சாப்பில் மாண்ட் காமிரி ஜில்லாவிற் காணப்படும்; வலுத்தவை, ஆனால் மெதுவானவை. இந்த இனப் பசுக்களே இந்தியாவிற்குள் சிறந்த கறவைகளாகும்.

7. மைசூர் மாடுகளிற் சிறந்தவை:- அமீர் மஹால், அலிக்கர், கிலாரி, மைசூர், சென்னை, பம்பாய் (தெற்கு). இவைகள் வேகமாக வேலை செய்வதற்கும், பளுவைத்தாங்கி இழுப்பதற்கும் பேர் போனவை ; மிக்கவலுவுடையவை ; கொடூரங் காட்டுங் குணமுடையவை. பசுக்கள் நல்ல கறவைகளல்ல.

8. கர் (Gir) :-இவை தெற்குக் கத்திவாரில் கர் என்னும காட்டுப் பக்கங்களிலும் மேற்கிந்தியாவிலும் காணப்படும். இவைகட்குத் தனிப்பட்ட நிறமுண்டு ; நீண்டு தொங்கும் காதுகளுண்டு. இவை பருத்துக் கனத்து மந்தகுணமுடையவை ;

எவ்வளவு பளுவானாலும் மெதுவாய் இழுக்கக் கூடியன. இந்தியாவிலே இவற்றின் தசையே மேலான உணவாம். இப் பசுக்களில் பால்அளவு மாட்டுக்கு மாடு வேறுபடும்.

9. காட்டினங்கள் :-இவை இமயமலைப் பக்கங்களிலும், பலுஜிஸ்தானக் காடுகளிலும், இன்னும் ஆங்குள்ள சிறு காடுகளிலும் பரவிக் கிடக்கின்றன. இவை இந் நாட்டுக்குச் சொந்தமானவை, பழமையும் ஆதியுமானவை; சரித்திர காலத்துக்கு முன்பேயுள்ளவை. இவை மலைநாடுகளில் இலேசான வேலைகள் செய்யும். இவை சிறியவை யாயினும் பொறுமையும் துணிவு முள்ளவை. தீனி மிகக் காணப்படாத இடங்களிலும் இவை பிழைத்திருக்கும். இவ்வினப் பசுகள் கூடிய வரையில் நல்ல பால் கொடுக்கத் தக்கவைகளே.

௯. பாற்சாலைக்காரர் பார்வைக்காகப் பசுப்பால் கணக்கு ஒன்றும். எருமைப் பால் கணக்கு ஒன்றும் இங்குத் தரப்பட்டிருக்கின்றன :—(1) ஐந்து கன்று போடும் ஒரு பசுவை ஆறு ஆண்டுகள் வைத்துக்கொண்டிருந்தால் ஏற்படும் வருவாய்க் கணக்கு :—

**வரவு**

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| குறித்த காலக் கடைசியில் பசுவின் மதிப்பு | 30 | 0 | 0 |
| பசு மாடுகளின் மதிப்புக் குறைவுக் காப்பு நிதியின் வட்டி | 15 | 10 | 0 |
| 3312½ படி பால், படி 7 அணா விழுக்காடு விலை | 1449 | 3 | 0 |
| 4 கன்றுகள், ஒவ்வொன்று ரூ 5. விழுக்காடு | 20 | 0 | 0 |
| | 1514 | 13 | 0 |

**செலவு**

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பசு வாங்கின விலை | 130 | 0 | 0 |
| முதற் பணத்துக்கு வட்டி | 46 | 12 | 0 |
| பசுக்கள் கைவிட்டுப் போவதாலுண்டாகும் இழப்பு | 30 | 0 | 0 |
| கறவா மாடுகளுக்கு | 25 | 0 | 0 |
| நோய் கண்டிருக்கும் நாட்களுக்கு | 15 | 0 | 0 |
| நோய் தீர்த்தற் செலவு | 5 | 0 | 0 |
| பலப்படுத்தும் செலவு | 7 | 8 | 0 |
| தீனிச் செலவு | 762 | 6 | 0 |
| உழைப்புச் செலவு | 147 | 0 | 0 |
| கொட்டகை வாடகை | 36 | 0 | 0 |
| பொறிகள் | 5 | 0 | 0 |
| தற்செயற் செலவுகள் | 30 | 0 | 0 |
| ஊதியம் | 275 | 3 | 0 |
| | 1514 | 13 | 0 |

ஷை ஆறு ஆண்டில் ஒரு எருமைக்கு ஏற்படும் கணக்கு :—

**வரவு**

| வரவு | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| குறித்த காலக் கடைசியில் எருமையின் மதிப்பு | 20 | 0 | 0 |
| எருமாடுகளின் மதிப்புக் குறைவுக் காப்பு நிதியின் வட்டி | 6 | 15 | 0 |
| 2250 படி பால் படி 6 அணு விழுக்காடு விலை | 843 | 12 | 0 |
| கன்றுகளின் விலை | 6 | 0 | 0 |
| | 876 | 11 | 0 |

**செலவு**

| செலவு | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| எருமை வாங்கின விலை | 65 | 0 | 0 |
| முதற் பணத்துக்கு வட்டி | 25 | 2 | 0 |
| எருமை கை விட்டுப் போவதாலுண்டாகும் இழப்பு | 15 | 0 | 0 |
| கறவா மாடுகளுக்கு | 12 | 8 | 0 |
| நோய் கண்டிருக்கும் நாட்களுக்கு | 10 | 0 | 0 |
| நோய் தீர்த்தற் செலவு | 3 | 0 | 0 |
| பலப்படுத்தும் செலவு | 5 | 0 | 0 |
| தீனிச் செலவு | 622 | 11 | 0 |
| உழைப்புச் செலவு | 52 | 0 | 0 |
| கொட்டகை வாடகை | 36 | 0 | 0 |
| பொறிகள் | 5 | 0 | 0 |
| தற்செயற் செலவுகள் | 20 | 0 | 0 |
| ஊதியம் | 5 | 6 | 0 |
| | 876 | 11 | 0 |

இவ்விரண்டு கணக்குகளால் எருமைகளுக்கு மேல் பசுக்களே மேலானவை யென்றும், தில்லி எருமைகள் உடன் சேராவிட்டால் மற்ற எருமைகளால் மிகு பயன் இன்று என்றும் ஏற்படுகின்றது. மாடுகளின் எருக்களால் பண்ணைக்காரருக்கு வருவாய் மிகச் சிறிதேயாகையால் அஃது இக்கணக்குகளிற் சேர்க்கப் படவில்லை.

---

## ௧௦. பசுக்கள் பலப்படும் தருணக் குறிகள்

1. கவலைப் பார்வை, 2. மொத்தத்தில் அமைதியின்மை, 3. வால் தூக்குதல், 4. எந்நேரமும் சிறுநீர் விடுதல். 5. கத்துதல். 6. பக்கத்திலிருப்பவைகளின்மேல் ஏறுதல். 7. பிசுபிசுப்பான களிமண்போன்ற நீர், குறியினின்றும் வெளியாதல். 8. பசைநீர் சிவந்திருத்தல்.

### பசுவின் கருப்பக் குணங்கள்

**1 முதல் 4 மாதம்** :-1. கருப்பை வாய் விரிவு காட்டுதல்.
2. வலது கால்புறம் பருத்திருத்தல்.

**5 முதல் 7 மாதம்** :-1. வாயும் வயிறும் பருத்துக்காட்டுதல்.
2. சிறுநீர் சிறிது தடித்திருத்தல், நாற்ற மெடுத்தல்.
3. இடது பக்கம் கைவைத்துப் பார்த்தால், கன்று பக்கங்களை உதைக்கிறது தென்படுதல், அதன் குரலும் கேட்குதல்.
4. பெருமூச்சுவிடுதல்; ஓடமாட்டாமை.

**7 முதல் 8 மாதம்** :-1. மடி பருத்துக்காட்டுதல்; அதில் பிசுபிசுப்பான பால் ஒழுகுதல்.

2. பசு அமைதியாக இராமை; பக்கத்தில் போனால் சீறுதல்.
3. மூலை முடுக்குகளையே தேடுதல்.
4. எருதுகளைக்கண்டால் முறைத்தல்.
5. வயிறு தொங்கவிடுதல்.
6. அடிக்கடி நீர் விடுதல்.

9 முதல்............1. குறிவீக்கங் காணுதல்.
2. வயிறு மிகத் தொங்கல்படுதல்.
3. வயிற்றுப் புரட்சியும் வலியும் உண்டாதல்.
4. எப்போதும் சாய்ந்திருக்கவோ, படுக்கை போடவோ முயலுதல்.
5. ஈரமான தரையை வெறுத்தல்.

## கக. கன்றுகளையும் பசுக்களையும் பெயரிட்டழைத்தல்

கன்று, பசுக்களின் உடம்பின்மேல் காணப்படும் தனிப்பட்ட அடையாளங்களினாலும்; கொம்பு, கண் இவைகளின் தன்மைகளைக் கொண்டும்; நிற வேறுபாடு பற்றியும் அவைகளைப் பேரிட்டழைக்கலாம். மேலும் அவைகட்குப் பெண் தெய்வங்கள், நதிகள், மலைகள் இவைகளின் பெயர்களையும் வைக்கலாம்.

## கஉ. பசுமாடு கட்டிவைத்தல்

சங்கிலியாக இருந்தால் கழுத்திற் கட்ட வேண்டும்; இதனால் ஓசை கேட்கும். கழுத்தில் மணியையும் கட்டிவைக்கலாம்; இதனால் மாட்டின் போக்குவரவு தெரியும். கயிறாக இருந்தால் கொம்பிலும் கட்டலாம்.

---

## கரு. பசுக்கள் ஈனுதல் நாள் அட்டவணை

| பலப்பட்டால் | | கன்றீனும் | | பலப்பட்டால் | | கன்றீனும் | | பலப்பட்டரல் | | கன்றீனும் | | பலப்பட்டால் | | கன்றீனும். | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஜன. | 1 | அக். | 13 | ஏப். | 1 | ஜன. | 11 | ஜூலை | 1 | ஏப். | 12 | அக். | 1 | ஜூலை | 13 |
| ,, | 7 | ,, | 19 | ,, | 7 | ,, | 17 | ,, | 7 | ,, | 18 | ,, | 7 | ,, | 19 |
| ,, | 14 | ,, | 26 | ,, | 14 | ,, | 24 | ,, | 14 | ,, | 25 | ,, | 14 | ,, | 26 |
| ,, | 21 | நவம். | 2 | ,, | 21 | ,, | 31 | ,, | 21 | மே. | 2 | ,, | 21 | ஆக. | 2 |
| ,, | 28 | ,, | 9 | ,, | 28 | பிப். | 7 | ,, | 28 | ,, | 9 | ,, | 28 | ,, | 9 |
| ,, | 31 | ,, | 12 | ,, | 30 | ,, | 9 | ,, | 31 | ,, | 12 | ,, | 31 | ,, | 12 |
| பிப். | 1 | ,, | 13 | மே | 1 | ,, | 10 | ஆக. | 1 | ,, | 13 | நவம். | 1 | ,, | 13 |
| ,, | 7 | ,, | 19 | ,, | 7 | ,, | 16 | ,, | 7 | ,, | 16 | ,, | 7 | ,, | 19 |
| ,, | 14 | ,, | 26 | ,, | 14 | ,, | 23 | ,, | 14 | ,, | 26 | ,, | 14 | ,, | 26 |
| ,, | 21 | டிசம். | 3 | ,, | 21 | மார். | 2 | ,, | 21 | ஜூன் | 2 | ,, | 21 | செப். | 2 |
| ,, | 28 | ,, | 10 | ,, | 28 | ,, | 9 | ,, | 28 | ,, | 9 | ,, | 28 | ,, | 9 |
| மார். | 1 | ,, | 11 | ,, | 31 | ,, | 12 | ,, | 31 | ,, | 12 | ,, | 30 | ,, | 11 |
| ,, | 7 | ,, | 17 | ஜூன் | 1 | ,, | 13 | செப். | 1 | ,, | 13 | டிசம். | 1 | ,, | 12 |
| ,, | 14 | ,, | 24 | ,, | 7 | ,, | 19 | ,, | 7 | ,, | 19 | ,, | 7 | ,, | 18 |
| ,, | 21 | ,, | 31 | ,, | 14 | ,, | 26 | ,, | 14 | ,, | 26 | ,, | 14 | ,, | 25 |
| ,, | 28 | ஜன. | 7 | ,, | 21 | ஏப். | 2 | ,, | 21 | ஜூலை | 3 | ,, | 21 | அக். | 2 |
| ,, | 31 | ,, | 10 | ,, | 28 | ,, | 9 | ,, | 28 | ,, | 10 | ,, | 28 | ,, | 9 |
| | | | | ,, | 30 | ,, | 11 | ,, | 30 | ,, | 12 | ,, | 31 | ,, | 12 |

குறிப்பு: கருகாத்தல் சராசரி 285 நாள்.



காங்கேய எருது

பக்கம் 150.



காங்கேய நல்ல இன எருது

பக்கம் 151.

## கச. ஆடுமாடுகளின் நலத்தைப்பற்றிய அரசியலார் விளம்பரங்கள்

1. மாடுகளுக்கு ஏற்படும் சில சாதாரணமான நோய்கள்.

2. ,, ,, ,, ,,

3. ,, ,, ,, ,,

4: வெக்கை—Rinderpest.

5, தொண்டையடைப்பான்--Aaemarrhagic Septicaemia.

6. அடைப்பான்-Anthrax.

7. சந்தடைப்பான் அல்லது சப்பை நோய்—Black Quarter.

8. கால்நோய், வாய்நோய்.

9. சுர்ரா என்னும் நோய்—Surra.

10. விரைபெடுத்தல், காயடித்தல், அல்லது ஆண்மை குறைத்தல்—Castration.

11. ஆடுமாடுகளுக்குள்ள மூக்கடைப்பான் என்னும் நோய்.

12. போவைன் லிம்பஞ்ஜைட்டிஸ்—Bovine Lymphangitis.

16. கால் நடைகளின் சுண்டுவாதம்.

17. அரிசித் தவிட்டைக் கால்நடைகளுக்குத் தீவனமாகக் கொடுத்தல்.

18. பால் அருந்தும் இளங்கன்றுகளுக்குப் பிடிக்கக்கூடிய சில சாதாரணமான நோய்கள்.

,, தனிப்பட்டவர்களால் வைக்கப்பட்டிருக்கும் பொலி காளைகளுக்குப் பரிசு கொடுப்பதற்கான நிபந்தனைகள்.

19. கால்நடை முதலிய உயிர்ப்பிராணிகளுக்குக் கெடுதியை விளைவிக்கும் ஈக்களைப்பற்றிய விவரங்கள்.

20. பொது மக்களால் வைக்கப்பட்டிருக்கும் பொலிகாளைகளுக்கு அரசியலார் நன்கொடை (Premium) பெற்றுக்கொள்ள நிபந்தனைகள்.

21. உணவுப் பொருள்களில் பாலின் முக்கியமும், பாலின் வழியாய்ஏற்படும் நோய்களும்.

22. கால்நடைகளுக்கு நோய்கள் வராமல் தடுப்பதற்கான நலவழி முறைகள்.

23. விலங்குகளுக் குண்டாகும் "உண்ணி சுரம்."

24. இந்தியாவில் "எண்டசோவால்" தொத்து கிருமிகளைத் தவிர்க்க மிகவும் அனுபவமான வழிகள்.

25. என்சைலேஜ் (புல்லைப் புதையல் போடுதல்) ஐப்பற்றிய குறிப்பு.

30. பசுமாடுகளுக்கும், பால்வற்றின பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் கொடுக்கவேண்டிய தீவனத் திட்டங்கள்.

31. கால்நடை பெருக்கல்.

32. பொலிகாளைகளும், அவைகளைக் காப்பதும்.

,, பொலிகாளைகளைக் கால்நடை ஆராய்ச்சி நிலையத்திலிருந்து விற்கும் நிபந்தனைகள்.

33. ஆடுமாடுகளுக்குச் சூடுபோடுதலும், தவறுகத் தோலுரித்தலும்.

34. பசுமாடு வைத்திருப்பவர்களுக்கு அன்றாடம் உதவக்கூடிய சிறந்த குறிப்புக்கள்.

35. ஓங்கோல் பொலிகாளைகள்.

36. ஆடுமாடுகளையும் எருமாடுகளையும் வளர்த்தலும் பெருக்கலும்.

38. கால்நடை ஆராய்ச்சிச் சாலைகளினின்றும் பொலி காளைகளை விற்பனை செய்தல்.

---

## கரு. பாலும் பாற்பொருளும் சேரும் மருந்துகள்.

1. **பசுவின்பால்** சேர்ந்த பொன்னாங்கண்ணித் (கொடுப்பை) தைலம் **தலை முழுக்குக்குச்** சிறந்தது.

2. ஷை போலவே கரிச்சாலை என்னும் கரிசலாங் கண்ணித் தைலம்.

3. ஷை போலவே கீழாநெல்லித் தைலம்.

4. நெல்லிவற்றல், வெண்மிளகு, நற்சீரகம் இம் மூன்றையும் பசுப்பால் சேர்த்தரைத்து எள் நெய்புடன் சேர்த்தாகிலும்; அல்லது ஷை பொருள்களில் பாலைச் சோர விட்டுக் கொதிக்க வைத்துத் தலையில் தேய்த்து, கால் அல்லது அரைமணி நேரம் ஊறவைத்தாகிலும் முழுக்காட, கண்டத்துக்கு மேல் காணும் நோய்கள் குணப்படும்.

5. **பால் அல்வா :** பசுப்பால். வித்துக்களின் பால்கள் சேர்ந்த இலேகியம் உடல் மெலிவு நீக்கும்.

6. சோடாவில் பசுப்பால் சேர்த்து உண்டால் வயிற்று வலி, நீர்க்கட்டு, நீர் எரிவு இவை நீங்கிப் பசியுண்டாகும்.

7. உடல்வலி கெடுக்கும் நோய்களுக்குப் பஸ்பம் செந்தூரங்கள் சாப்பிட்டவுடன் பசுப்பால் சாப்பிடுதல் அம் மருந்துகளுக்கு ஊக்கங் கொடுப்பதாகும்.

8. **தயிர்**—வெள்ளை வெட்டை நோய்களுக்குக் குளிர்ச்சி பொருந்திய பச்சிலைகளை அரைத்துத் தயிருடன் கலந்து கொடுக்க அவை தீரும்.

9. தயிரைத் துணியில் மூட்டையாக முடிந்து கட்டி, அதனின்று வடியும் தண்ணீரைக் குடல் மெலிந்தவர்களுக்குக் கொடுத்துக் கொண்டு வர அஃது உணவாகவும் ஆகி, வயிற்றில் காணும் வெப்பப் புண்களை ஆற்றித் தீவனமும் உண்டாக்கும்.

10. தோல் நோய்களுக்கு நீரடிமுத்து, கார்போக அரிசி, காட்டுச் சீரகம் இவைகளைப் போன்ற பொருள்களைத் தயிரில் அரைத்துக் குழைத்து மேல் பூசவதால் சொறி சிரங்குகள், கரப்பான் இவை தீரும்.

11. ஷை நீரெடுத்த கட்டித் தயிரைச் சீனிச் சர்க்கரை கோதுமைமாவு சேர்ந்துச் சிற்றுண்டி செய்து சாப்பிட்டு வந்தால் உடலுக்கு வலுவுண்டாக்கும்.

12 மேல் தோல் போக்கிய சுக்குத் துண்டுகளை உப்பு சேர்ந்த புளித்த தயிரில் சில நாட்கள் ஊறவைத்துத் தயி

ரெல்லாம் சுவறிப் போயினபின் உலர்த்திப் பொடி செய்து நெய்யுடன் சேர்த்துண்ண எந்த பேதியும் குணப் படும்.

13. ஷை தயிரில் அத்திப் பிஞ்சு, அவரைப் பிஞ்சு, கத் தரிப் பிஞ்சு, மணத்தக்காளிக்காய், சுண்டைக்காய் முத லியவைகளை ஊறவைத்து உலர்த்தி வற்றலாக்கி நெய்யில் வறுத்து உணவுடன் உண்டால் வாத பித்த சிலேத்தும நோய்கள் யாவும் உடலின்கண் அணுகா.

14. **மோர்:** கடுநடையாளரும், கடும்பசியுள்ளோரும், தாங்கொணு வெப்பமடைந்தோரும் தனிப் பசு மோரி ஞலே தாகம், அழல், விடாய் தீர்ந்து நலமடைவர்.

15. குட்டம் முதலிய நோய்களுக்குச் சித்தர் முறைப் படி முடித்த பஸ்பங்கள் உண்பவர்களுக்கு நீர் பெருக்கிய மோரை அடிக்கடி கொடுத்துக் கொண்டு வர, நீர்த்தாரை வழியாகத் துர்நீர்கள் கழிந்து ஷை நோய்கள் நீங்கி உடல் நலமாகும்.

16. **வெண்ணெய்**—வெப்பத்தினல் கிளம்பிய நோய் கள் அத்தனையும் வெண்ணெயின் சேர்க்கையாலும் மருந்து சேர்ந்த வெண்ணெயாலும் தீர்ந்து வெப்பந்தணிந்து போய் உடலுக்குப் புதுவன்மை யுண்டாகும். உண்ணும் பொருள்களிலும், சிற்றுண்டி வகைகளிலும் வெண்ணெய் சேர்த்துக் கொண்டால் உடல் வன்மை பெறும்.

17. கண்ணிலிடு மைகள் புண்ணிலிடு மருந்துகள் இவைகளில் வெண்ணெய் சேர்க்க வேண்டும். வெண் ணெயைத் தோல்மேல் பூச, தீப்பட்ட இரணங்கள் தீரும்.

18. கரிசலாங் கண்ணி, பொன்னுங் கண்ணி; கீழா நெல்லி, கற்ருழை, நந்தியாவட்டைப்பூ இவற்றின் சாறு களைச் சேர்த்துச் சீலையிற் சுவறவைத்துத் திரியாக்கி நல் லெண்ணெயால் தீபமேற்றி, செப்புப் பாத்திரத்தில் புகை பிடித்து, அப்புகைக் கரியை வெண்ணெயுடன் கலந்து கண்ணிலிட்டு வரக் கண்ணோய்கள் போய் அதற்கு ஒளி யுண்டாகும்.

19. **நெய்**—சுடு சோற்றில் நெய் விட்டுப் பிசைந்து சாப்பிடுவதால் குடர்ப்புண் முதல் வெட்டை நோய்கள் தணிந்து உடலுக்கு வலிவும் அழகும் உண்டாம்.

20. மிளகை நெய்யில் வறுத்துப் பொடி செய்து, அதனுடன் உப்புஞ் சேர்த்துச் சோற்றில் போட்டு, அதன் மேல் எலுமிச்சம்பழச்சாறு அளவாக விட்டு, அதன் மேல் நெய் உருக்கி ஊற்றிப் பிசைந்து சாப்பிட மூலத்திற் சொரியுஞ் செந்நீரும் அடங்கிப் போய் உடற் சூடும் தணியும்.

21. சுக்கு, மிளகு, நற்சீரகம் இம் மூன்றையும் வறுத்துப் பொடி செய்து, நெய் சேர்த்துச் சாப்பிட்டு வரச் செரியா மந்தமும் பேதியும் தீரும்.

22. பஸ்பம் செந்தூரங்கட்கு நெய் துணைப் பொருளாகும்.

23. இலேகியங்களிலெல்லாம் நெய் சேரும்.

24. நெய்யினல் சிற்றுண்டிகளை வேகவைப்பது சிறந்தது.

25. சோற்றுக் கொதி நீரில் நெய் விட்டு, பனை வெல்லம் பனங்கற்கண்டு சேர்த்து உண்ணப் புகையிருமல் ஒழியும், உடல் வெப்பமும் கழியும்.

---

## கரு. உயிர்வளைவுகள் (Vitamins).

உடலுக்கு உணவுப் பொருள்களையன்றிச் சில ஊக்கு (Energy giving) பொருள்களும் வேண்டுமென்று மேனாட்டு மருத்துவ ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கின்றனர். இவ்வூக்கு பொருள்கள் உணவுப் பொருள்களில் இல்லாவிட்டால் சில நோய்கள் தோன்றி உடல் வளர்ச்சியைக் குறைத்து விடுகின்றன. இவ்வூக்கு பொருள்களை A, B, C, D, E, F (இவான்ஸ் என்பவ

ரால் கண்டு பிடிக்கப்பட்டது) என ஆறு பெரும் பகுதிகளாக வகுத்திருக்கின்றனர். அவற்றின் விவரம் வருமாறு :—

A. **உய்வனவு :** இவ்வுய்வனவுப் பொருள்கள் உணவில் இராவிடில் விழிகள், நுரையீரல், குடல் இவை நோய்படும். இவ்வுய்வனவு மீன் எண்ணெய், கோழிமுட்டை, வெண்ணெய், நெய் ஆகிய இவைகளிலும்; மஞ்சட்சோளம், சணல் விதைகள், தானியங்கள் முதலியவைகளிலும் உண்டு. இஃது எண்ணெயில் கிடையாது. மேலும் கீரை, வாடாக் காய்கறி வகை, காரெட்டுக் கிழங்கு ஆகிய இவைகளிலும் இது மிக உண்டு. இதனால் தொற்று நோய் தடைபடும்; பட்டினியால் கெடுதி நேராது. மேலும் இஃது இல்லா விட்டால் கழிச்சல், மலடு, தோல் நோய்கள், பல் வளர்ச்சியில் இழுக்கு, கண்ணோய்கள், மூத்திரக் கல், பால் குறைவு, வலுக்குறைவு ஆகிய இவைகளும் ஏற்படும்.

B. **உய்வனவு :** இவ்வுய்வனவு காணாத உணவுப் பொருள் கொள்ளுதல் நரம்புகளின் வலியைக் கெடுத்து, கால்களுக்குத் தளர்ச்சி கொடுத்து, செந்நீர்க்கலத் (இருதயம்) தையும் நோய்ப் படுத்தும். **நன்றாய்த் தீட்டின அரிசியில் இவ்வுய்வனவு அற்றுப் போய் விடுகின்றது.** இது தவிடு, முளைப்பயறு, வித்துக்கள், புளித்த மாநுரை, கீரைகள், பழங்கள் ஆகிய இவைகளிலும்; பருப்பு வகைகள், தானியங்கள், காடி, கொட்டைகள், மக்காச்சோளம் முதலியவைகளிலும் மிகவுண்டு. இஃதின்றேல் உடல் எடை குறையும், கண்டசதை நோயடையும், தெரியாத நோக்காடுகள் உண்டாம்.

**C. உய்வனவு :** இவ்வுய்வனவு இல்லாத பொருள்களால் பல்நோய், கை கால் பிடிப்பு, வளர்ச்சிக்குறைவு, தோல் பற்றிய நோய்கள் உண்டாகும். இவ்வுய் வனவு நாரத்தை, ஆரஞ்சு, எலுமிச்சை முதலா கிய பழச்சாற்றிலும்; கோஸ்கிழங்கு, பாகற்காய், கருவேப்பிலை, கொத்துமல்லிஇலை ஆகிய கறி கீரை வகையிலும்; பருப்பு வகைகள், அவரை வகைகள் இவைகளிலும் மிகவுண்டு. இஃதின் றேல் அமைதியின்மை, எரிப்புக் குணம், எலும்பு கூடாமை, பற்குருதி, விலா வெலும்பு இழுக்கு இவை உண்டாகும். நெல்லிக்காயில் இந்த C உய்வனவு மிக உறுதியாக உண்டு. இதனை வேக வைத்தாலும் இவ்வுய்வனவு மற்றவைகளிற் போல் உடனே போய் விடுவதில்லை. ஆகையால் இதனைக் காயவைத்துப் பொடிசெய்து வைத்துக் கொண்டு தனியாகவும், உணவுகளில் சேர்த்தும் உட்கொள்ளலாம். இதனை வெந்நீரில் போட்டு உப்பிட்டும் வைத்துக் கொள்ளலாம். இதனை வேக வைத்து எண்ணெயில் போட்டு மற்றச் சாமான்கள் சேர்த்து ஊறுகாய் போடுதல் சிறந்த தன்று.

**D. உய்வனவு :** இவ்வுய்வனவு கொண்டிராத பொருள் கள் உண்டால் எலும்புகள் மெலிவடைந்து, தசை நரம்புகள் தளர்ந்து விடுகின்றன. இது மீன் எண்ணெயிலும், வெண்ணெயிலும், கோழி முட்டையிலும் காணப்படுகின்றது. மேலும் இவ் வுய்வனவு வெய்யிலில் காய்வதால் உடலுக்குள் ஏறிவிடுகிறதாம். இதனுல் பல்வளர்ச்சியும், எலும்பு வளர்ச்சியும் உண்டாவதால் இது குழந் தைகளுக்கும் கன்றுகளுக்கும் இன்றியமையா தது. இது புல் வகைகளில் மிகவுண்டு.

E. **உய்வனவு :** இஃதில்லாத உணவுகளால் மலட்டுத் தன்மையுண்டாகும்: ஈனுதல் உண்டாயினும் குட்டிகள் விரைவில் மாளும். இவ்வுய்வனவு முழுக் கோதுமையிலும், வாடாதகனிகளிலும், காய்கறிகளிலும், கந்த மூல எண்ணெய்களிலும் உண்டு. இஃதின்றேல் கன்றுகளுக்கு வலியுண்டாகும், வளர்ச்சி தடைபடும்.

F. **உய்வனவு :** இது புதிதாகக் கண்டு பிடிக்கப் பட்டது. இஃது உணவுப் பொருள்களில் இல்லாமற் போனல் வேலை செய்ய முடிவதில்லை. தோல் பற்றிய நோய்கள் ஏற்படும். அதிகம் இருந்தால் தோலுக்குப் பளபளப்பு உண்டாகும். இதனைப் பற்றி ஆராய்ச்சி இன்னும் நடந்து கொண்டு வருகின்றது.

இவ்வுய்வனவுப் பொருள்கள் கொண்ட உணவுப் பொருள்களைக் கொதிக்க வைப்பதனால் உய்வனவு மறைந்து போகின்றது. ஆகையால் உணவுப் பொருள்களைக் கொதிக்க வைக்காமலும் வாடவிடாமலும் சிறிது பச்சையாகவே யுண்ணுதல் நலம். ஆனால் உணவுப் பொருள்களை வெய்யிலில் வைத்து உண்டால் அவற்றில் உய்வனவுகள் சேர்ந்து கொள்கின்றன. இதனால் மக்கள் வெய்யில் படவேலை செய்வது உடலுக்கு எவ்வளவு நன்மை பயப்பது பாருங்கள்!.

**பசுப்பாலில் எல்லா உய்வனவுகளும் உண்டு.**



## கஎ. *ஆனைந்து-பஞ்ச கௌவியம்

ஆனைந்து என்பது ஆனி (ஆன்—பசு)லிருந் துண்டாகும் ஐந்து பொருள்கள் என்றும், அவை பால், தயிர், நெய், கோமயம் (பசுச்சாணம்), கோசலம் (பசு மூத்திரம்) என்றும், இவ்வைந் தும் சேர்ந்தமே ஆனைந்து அல்லது பஞ்ச கௌவி யம் என்றும் பார்ப்பனர் சொல்லுகின்றனர். இந்த பஞ்ச கௌவியம் கடவுளர்க்குச் சிறந்த முழுக் காட்டலாகும் என்றும், இறந்தோர் ஆண்டு நாட் களில் ஆன்ம தூய்மைக்காக உட்கொள்ளத்தக்க தென்றும், பாபங்களைப் போக்கத் தக்கதென்றும் அவர்களே சொல்லுகின்றனர். ஆனாலும் இந்த ஐம்பொருள்கள் சேர்ந்த பஞ்ச கௌவியத்தை அப்படிச் சொல்லுகின்ற பார்ப்பனர்கள் தங்கள் வீட்டிலும், கோவில்களிலும் அவ்வாறு பயன் படுத்துவதைக் காணோம். ஆனால் அவர்கள் பார்ப் பனர் அல்லாதார் வீடுகளிலேயே அப் பஞ்ச கௌவியத்தைப் பயன்படுத்தி வைக்கின்றனர்.

பஞ்ச கௌவியம் என்பது பசுவினின்று உண் டாகும் ஐந்து பொருள்கள் என்றால் நெய்யும் தயிரும் பசுவினின்று நேராக உண்டாவதில்லை; அவை பாலின் திரிபுப் பொருள்களேயாகும். பசு வினின்றும் ஒன்பது வாயில்கள் மூலம் வெளி வரும் பொருள்களில் இரண்டுமாத்திரம் தூய்மை

---

* இது தடிசைக்கிழார் அ. சிதம்பர முதலியார், M. T. A. S., & M. S. S. C., அவர்கள் ஆராய்ந்து இயற்றிய **ஆனைந்து** என்னும் நூலின் சுருக்கம்.

யுடையன வென்றால் மற்றவைகளின் கதி என்ன? உடலுக்குள் போவன தூய்மையுற்றன வென்றும் அதனினின்றும் வெளிவருவன தூய்மையற்றன வென்றும் உலகமே ஒத்துக்கொள்ளும். மூலைப் பாற் காம்புகள் அவ்வொன்பது வாயில்களில் ஒன் றென்று உலகத்தார் சொல்வதில்லை. ஆகையால் கோமயமும் கோமூத்திரமும் தூய்மையான பொருள்கள் என்று சொல்வதற்கு இடமில்லை. இக் காரணத்தினாலேயே பிராமணர்கள் இப் பஞ்ச கௌவியத்தைத் தாங்கள் வழிபாடு செய்யும் கோவில்களிலும், தங்கள் வீடுகளில் ஆண்டு நாட் (திதி)களிலும பயன் படுத்துவதில்லை. மேலும் தமிழ் மறைகளில சிவபெருமான் ஆனைந்தாடுத லுக்கு விரும்பியவர் என்று சொல்லுமிடங்களி லெல்லாம் பசுப்பாலினையும், பசுப்பாலின் திரிபு களாகிய பால், தயிர், நெய், வெண்ணெய், மோர் இவைகளில் ஒன்றினையும், இரண்டினையும் அல்லது எல்லாவற்றினையுமே காட்டியிருக்கின் றது; கோமயத்தையும் கோமூத்திரத்தையும் காட்டவே இல்லை.

ஆன் ஐந்து என்பதற்கு இன்னொரு பொருளும் கொள்ளலாம். அஃதாவது ஐந்து பசுக்கள் என் பது. அவையாவன நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை. இவற்றில் நந்தை என்பது கபிலைப்பசு; பத்திரை என்பது கறுப்புப்பசு; சுரபி என்பது வெள்ளைப்பசு; சுசீலை என்பது புகைநிறப்பசு; சுமனை என்பது சிவப்புப்பசு. இச் செய்தி நூல் களிற் கண்டுள்ளது. பலநிறப் பசுக்களின்பால் சேர்த்துண்ணுதல் உடல் நலத்துக்குச் சிறந்தது

என்று மருத்துவ நூலார் கண்ட உண்மை. ஆகை யால் இவ்வைந்தையும் சேர்த்துக் கடவுளர்க்கு முழுக்காட்டலாமென்பது ஆனைந்து என்பதற் குச் சிறந்ததோர் பொருளாகுமன்றோ! மேலும் மக்களுக்கு உவப்பானதுவே கடவுளுக்கும் உவப் பானதென்பது எவராலும் மறுக்கவொண்ணாது.

கொங்கு நாட்டில் பால், தயிர், நெய், வெண் ணெய், மோர் இவை ஒவ்வொன்றையும் தக்க அள வாகச் சேர்த்துத் தலைமுழுக் காடுகின்றனர்; அவ்வாறே உண்ணவுஞ் செய்கின்றனர். இப்படிச் செய்வது உடல்நலத்துக்கு நல்லதென்று மருத்து வர்களும் ஒப்புக்கொள்கின்றனர். ஏனெனில் பால், பாலின் திரிபுகளாகிய தயிர், நெய், மோர், வெண்ணெய் இவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் குணம். பாலில் ஆகாய (வெளி)த்தின் குணமும், தயிரில் காற் (வாயு)றின் குணமும், நெய்யில தீ (சூடு)யின் குணமும், மோரில் நீ (குளிர்ச்சி)ரின் குணமும், வெண்ணெயில் மண் (பிருதிவி) ணின் குணமும் உண்டென்பது பொருட்கலை வல்லார் கொள்கை. இவற்றையெல்லாம் கலந்துண் டால் அவ்வவற்றின் தனிக் குணங்கள் மாறிப் போய்ச் சிறந்ததோர் குணம் காட்டும். காய்கறி வகைகளில் கூட பலவற்றைச் சேர்த்துண்பது நலமென்று கண்டுள்ளோமல்லவா. பாலின் திரிபுப் பொருள்களை உடலுக்குப் பயன்படுத் தும் கொங்கு (Malabar) நாட்டவர் கோமயத் தையும் கோசலத்தையும் அவ்வாறு பயன்படுத்து வதே இல்லை. இவ்விரண்டும் சேர்ந்த பஞ்ச கௌவியத்தைக் கொள்ளும் மக்கள்கூட இவற்

றைத் துளித்துளி யளவு பால், தயிர், நெய்களில் சேர்த்துக் கூச்சத்துடனேயும், அருவருப்புடனே யும உட்கொள்ளுகின்றதை நாம் கண்ணுற் கண்டு மிருக்கின்றோம்.

தமிழர்கள், பால், தயிர், நெய், மோர், வெண் ணெய் இவைகளையே ஆனைந்தென்று கொண்டி ருக்கின்றார்கள். இதற்குத் தமிழ்மறை எடுத்துக் காட்டுகளாவன :—

1. நூலால் நன்று நினைமின்கள் நோய் கெடப்
பாலாம் ஐந்துடன் ஆடும் பரமனார்—
அப்பர் - குறு - கூ

2. பாலொடு நெய் தயிர் பலவு மாடுவர்—சம் -
வெண்காடு - ங.

3. நறு நெய் தயிர் பால்
அஞ்சுங்கொண் டாடிய வேட்கையினார் -
சுந்தரர் - நின்றி - ரு

4. பாலொடு நெய் தயிர் தேன் ஆடி கண்டாய் -
அப் - கொட்டை - ங

5. செய்ய மேனியன் தேனொடு பால் தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்—அப் - குறு -
நீலக்குடி - உ

6. தேனெய் பால் தயிர் ஆட்டுகந்தானே -
சுந் - ஆவடு - கூ.

7. பாலு நற்றயிர் நெய் வெண்ணெய் மோர் பல
வாட்டி - அப் - கடவூர் வீரட் - கூ

8. நெய்யினொடு பாலிளநீர் ஆடினான்காண் -
அப் - வீழி - ரு

9. பாலினால் நறுநெய்யால் பழத்தினால் பயின்
றாட்டி - சம் - செங்காட் - ரு

10. பாலொடு நெய் தயிர் மோர் பயின்றாடும் பர
மேட்டி - சம் - ஆரூர் - உ

11. பாலொடு நெய் தயிர் மோர் பயின்றாடிய பாண்
டரங்கன் - சம் - வெண்டுறை - உ

12. நல்வெணெய் விழுதுபெய் தாடுதிர் நாடொ
றும் - சம் - திருநெல் - க

இத்தமிழ் மறை வாக்குக்களில் பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் ஆகிய இவைகளையே ஆனைந்தெனக் காட்டியிருக்கின்றது. கோமயம், கோசலம் என்பன சொல்லப்படவில்லை. இவைகளுடன் தேனையும், பழத்தையும், இளநீரையும் மிகையாக் காட்டியிருக்கின்ற அடியார்கள் பஞ்சகௌவியத்தின் பகுதிகளாகிய கோமய கோசலங்களை ஏன் விட்டுவிட வேண்டும்? மக்களுக்குக் கிடைக்காமற்போன தமிழ்மறைப் பகுதிகளில் இவைகள் கண்டிருத்தல் ஒண்ணுதோ வெனின் பால் பாலின் திரிபுப் பொருள்கள் ஆக ஐந்தினையும் இவ்வடியார்கள் ஆனைந்தென இம் மறைப் பகுதிகளில் ஏற்கெனவே காட்டிவிட்டிருக்கின்றபடியால், கிடைக்காமற்போன பாசுரங்களில் அவர்கள் காட்டியிருக்கவே மாட்டார்கள் என்பதே தேற்றம்.

கீழ்க்காட்டிய ஏதுக்களால் ஆன் பாலும், ஆன்பாலின் திரிபுகளாகிய தயிர், நெய், மோர், வெண்ணெய்களும் ஆகிய ஐந்துமே ஆனைந்து எனப்படும் என்றும், தமிழ் மறைப்

பகுதிகளில் இவ்வாறே ஆளப்பட்டிருக்கின்றது என்றும், இவ் ஆனைந்தைக் கலந்து உட்கொள்ளு தலே உடல் நலத்துக்கும் உயிர் நலத்துக்கும் உகந்ததென்றும், கோமய கோசலங்கள் பஞ்ச கௌவியத்திற் சேர்க்கப்பட்டிருந்தாலும் அவை களைக் கோவில்களிலும், பிராமணர்கள் ஆண்டு நாட்களிலும் பயன்படுத்துகின்றார்களில்லை யென் றும், கோமய கோசலங்கள் மக்கள் மனமாரக் கொள்ளாத தொன்றென்றும் ஏற்படுகின்றது. கோசல கோமயங்களில் நோய் போக்கும் சில குணங்களிருக்கின்றன வென்றால், நோய் போக் கும் குணமுடைய அருவருக்கத்தக்க பொருள் கள் எத்தனையோ இருக்கின்றன; அவைகளையெல் லாம் உட்கொள்ள வேண்டுமென்பது நகையாகு மன்றோ! வேதஸ்மிருதிகளிற் சொல்லப்பட்டி ருக்கின்றனவே என்றால் அதனைப் பழையன கழி தலாகவே கொள்ளவேண்டும். அவ்வாறே பிராம ணர்கள் தாங்கள் தள்ளிவிட்டிருக்கும் ஒன்றை ஏனையோர் கொள்ள வேண்டுமென்பது நடுநிலை யிற் சேர்ந்த தன்று.

பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் இவை உலகின்கண் எல்லா நாட்டின் மக்களாலும், பற் பல கொள்கைகள் கொண்ட மக்களாலும், இன் னும் காடு, வனம், வனாந்தரங்களிலுள்ள மக்களா லும், உயர்ந்தோராலும், தாழ்ந்தோராலும் யாவ ராலுமே மகிழ்ச்சியுடன் உட்கொள்ளத் தக்க தாக இருக்கின்றன. கோமய கோசலங்களை ஒவ் வொரு நாளும் மனமார உட்கொள்ளுகின்றவர் கள் எங்கிருக்கின்றார்களோ அறியக் கூடவில்லை!

ஆனைந்து (ஆன்+ஐந்து) என்பதற்கு ஆனி லிருந்துண்டாகும் ஐந்து பொருள்கள் என்று பொருள் கொள்ளுவதைவிட, ஆன் என்னுஞ் சொல்லை இடவாகுபெயர் ஆக்கிப் பால் என்று பொருள்படுத்தி; ஆனைந்து=பாலைந்து எனக் கொள்வோமாகில் இடர்ப்பாட்டுக்குச் சிறிதும் இடம் இல்லை. இவ்வுண்மையைக் கொண்டே திருநாவுக்கரசர் "பாலாம் ஐந்துடன் ஆடும் பரமனர்" என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றார்.

இந்தப் பசுப்பாலாம் ஐந்தினையும் அளவாகக் கலந்துண்ணும் மக்கள் நோய்கள் நீங்கப்பெற்று, உடலுரமுற்று, மனவலிவுடன் அறிவாற்றலு மடைந்து கடவுளுணர்ச்சியோடு இப் பூவுலகின் கண் மட்டற்ற காலம் மகிழ்வுடன் வாழ்வர்.

---

‘பாலமிழ்தம்’ என்னும்

நூலின்பொருட்டு ஆராய்ந்த நூல்கள்

---

1. **The Principles of dairy farming**
   by G. H. Garrad, N.D.A.

2. **The Farmer & Stock-breeder manuals,**
   Editor, Harold C. Long

3. **The Cattle-breeders' Hand Book**

4. **Scientific feeding of Domestic animals**
   by Klimmer (Martin)
   & Paul Fischer

5. **Animal Nutrition**
   by Wood (T. B.)

6. **Dairy farming in India**
   **A Practical manual**
   by Majors - D. J. Meagher &
   R. E. Vaughan
   of the Indian army, Calcutta.

7. **Cow Keeping in India**
   by Isa Tweed

8. **The Care & Holding of Milk**
Herold E. Son.

9. **Quality Control-Market Milk**
by N. E. Lazarus.

10. **The Live Stock of Southern India**
by Captain R. W. Littlewood

11. **The Miracle of milk**
by Prof. H. S. Gambers

12. **Veterinary Pamphlets**

13. **The Encyclopædia Britannica**

14. மக்கள் நூறுண்டு வாழ்தல் - மறைமலையடிகள்

15. பதார்த்தகுண சிந்தாமணி

16. கல்கி

17. தேவாரம்

18. நாலாயிரப் பிரபந்தம்

19. பெரிய புராணம்

20. சங்க இலக்கியங்கள்

21. செந்தமிழ்த் தொகுதிகள்

22. செந்தமிழ்ச் செல்விச் சிலம்புகள்

கழக வெளியீடு—௲௪௧

# THE MILK NECTAR

*by*

**Mr. S. S. THEVAR.**



*Published by*

**THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,**

6, CORAL MERCHANT ST., MADRAS.

**Price Re. 1– 8**